ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நம்மாழ்வாரருளிச் செய்த

# திருவாய்மொழி - பத்தாம்பத்து

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் இயற்றிய

திவ்யார்த்ததீபிகை யுரையுடன் கூடியது

## மூன்றாவது பதிப்பு.

அச்சிட்டோர்:

பராசக்தி பவர் பிரஸ், மூங்கில் மண்டபம் எதிரில், காஞ்சீபுரம்.

---

கிடைக்குமிடம்:—

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

---

விலை 2—4—0

திருவாய்மொழியாயிரத்திற்குப் பூர்த்தியாக

திவ்யார்த்த தீபிகை 25 ரூ.

ஹேவிளம்பி ௵ வைகாசித் திருவிசாகம்.

1957

ஸ்ரீ

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# திருவாய்மொழி—பத்தாம்பத்து.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய திவ்யார்த்த தீபிகையுரையுடன் கூடியது.



## முதல் திருவாய்மொழி-தாளதாமரை.

**உரையவதாரிகை:**-கீழ்த்திருவாய் மொழியில் *மரணமானல் வைகுந்தங் கொடுக்கும் பிரான்* என்றருளிச் செய்ததானது எம்பெருமானுடைய திருவுள்ளக்கருத்தை அநுவாதம் செய்தபடியன்றோ. 'ஆழ்வீர், உமக்கு தேஹாவஸாநத்திலே பேறு' என்று எம்பெருமான் ஆழ்வார்க்கு நாளிட்டுக் கொடுத்ததாகத் தேறி நின்றது. தேஹத்தின் முடிவு என்றைக்கு ஆகுமென்று ஆழ்வார் ஆலோசிக்க வேண்டுமோ! *இழை நல்லவாக்கையும் பையவே புயக்கற்றது* என்றும் *என்னுயிர் கூவிக் கொடுப்பார்க்குமித்தனை வேண்டுமோ?* என்றும் கீழேயருளிச் செய்தவராகையாலே மிகவும் கட்டுக்குலைந்த தம் திருமேனியின் முடிவு அணித்தென்றுதாமே அறுதியிட்டுக் கொண்டார். திருநாட்டுக்குப் பயணம் குறித்து ஸந்நாஹம் செய்யவேணுமென்று கொண்டு முந்துறமுன்னம் வழித்துணையாகத் திருமோகூர்க் காளமேகப் பெருமானைப் பற்றுகிறதாகச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

பரமபதத்திற்குச் செல்ல வழித்துணைவேணுமோ? *அர்ச்சிர் திநபூர்வபக்ஷஷடு தங்மாஸாப்த வாதாம்சுமத் க்லௌவித்யுத் வருணேந்த்ர தாத்ரு மஹித;* என்று நடாதூரம்மாள் பணித்தபடியே அர்ச்சிராதிகள் வழிநடத்தவன்றோ போகிறது; வேறு வழித்துணை எதுக்கு? என்று ஒரு கேள்வி பிறக்கும்; வராஹ சரமச்லோகத்திலே *ததஸ் தம் ம்ரியமாணம் து......அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்* என்று எம்பெருமான் தானே வழிநடத்திக்கொண்டு போவதாகச் சொல்லியிருக்கையாலே திருநாடு செல்வார்க்கெல்லாம் அவனே வழித்துணையாகிறனென்னுமிடம் சாஸ்த்ரஸித்தமாயிருந்தது. அப்படி வழித்துணையாகும் பெருமான் திருமோகூரிலே வந்து ஸந்நிதி பண்ணியிருக்கிறனைக் கொண்டு அப்பெருமானையே வழித்துணையாகப் பற்றுகிறார்.

வழித்துணையாமிடத்து ஞானத்தாலும் சக்தியாலும் குறையற்றிருப்பானொருவனேயன்றோ ஆகவேணும்; அவன்தான் விரோதிநிரஸந ஸமர்த்தனுகவும் இருக்கவேணுமே; இப்படிப்பட்ட வாய்ப்பெல்லாம் திருமோகூரெம்பெருமான் பக்கலிலே குறையற்றிருக்கிறபடியை அநுஸந்தித்துக்கொண்டு அப்பெருமானையே வழித்துணையாகப் பற்றுகிறாராயிற்று...*

தாளதாமரைத் தடமணிவயல்திருமோகூர்*
நாளுமேவிநன்கமர்ந்துநின்று அசுரரைத்தகர்க்கும்*
தோளுநான்குடைச் சுரிகுழல்கமலக்கண்கனிவாய்*
காளமேகத்தையன்றி மற்றொன்றிலம்கதியே.

| | | | |
|---|---|---|---|
| தாள தாமரை தடம் அணி | தாளுரத்தையுடைய தாமரைகள் நிறைந்த தடாகங்களை அலங்காரமாகக் கொண்ட | சுரி குழல் | சுருண்ட திருக்குழல் கற்றையையுடையனாய் |
| வயல் திரு மோகூர் நாளும் மேவி | வயல்களாலே சூழப்பட்ட திருமோகூர்ப்பதியை நித்தியவாஸஸ்தலமாகக் கொண்டு | கமலம் கண் | செந்தாமரை போன்ற திருக்கண்களையுடையனாய் |
| | | கனி வாய் | கனிந்த திருப்பவளத்தையுடையனாய் ஸேவை ஸாதிக்கின்ற |
| நன்கு அமர்ந்து நின்று | மிகவும் உகப்போடே அங்குப் பொருந்தி நிற்குமவனாய். | காள மேகத்தை அன்றி | காள மேகப்பெருமானைத் தவிர்த்து |
| அசுரரை தகர்க்கும் தோளும் நான்குஉடை | அசுரர்களைப் புடைக்க வல்ல நான்கு திருத்தோள்களையுமுடையனாய் | மற்று ஒன்று கதி இலம் | வேறொரு துணையுடையோமல்லோம் |

* * *-கொடிய தாபத்திலே அடிபட்டவன் குளிர்ந்த தடாகத்தையோ காளமேக வர்ஷத்தையோ எதிர்பார்பது ஸஹஜந்தானே; அது போல ஆழ்வாரும் தம்முடைய ஸாம்ஸாரிகதாபங்களெல்லாம் தொலையப்பெறும் ஸமயமாகையாலே இப்போது காளமேகப் பெருமானைப்பற்றி ஸூசிக்கிறபடியைத் தெரிவித்தருளுகிறார். இப்பெருமானையே மேலே எட்டாம் பாட்டில் *தயரதன் பெற்ற மரதக மணித்தடமென்று திவ்ய தடாகமாகவும் அநுஸந்திக்கையாலே தாபம் அகற்றும் பெருமானேயிவர்; இவரையொழிய மற்றொன்று கதியிலம்—வேறு துணையுடையோமல்லோமென்று அப்பெருமானைப் பற்றுகிறார்.

இவ்வூரிலுள்ள தடாகம் இற்றைக்கும் தாளதாமரைத் தடமென்றே வழங்கப் பெறுகின்றது. வானமாமலையிலுள்ள வொரு சோலை *தேனமாம் பொழிலென்று வழங்கப்பெறுதல் போல.ஆழ்வார் திருவாக்கில் வந்த சொல்லையிட்டே வழங்குதல் சிறப்புடைத்தன்றோ: தாமரைத் தடத்தையும் வயலையும் பேசுகின்ற ஆழ்வாருடைய திருவுள்ளம் யாதெனில; *உரம் பெற்ற மலர்க்கமலம் உலகளந்த சேவடிபோலுயர்ந்து காட்ட, வரம்புற்ற கதிர்ச்செந்நெல்தாள் சாய்த்துத் தலைவணக்குந் தண்ணரங்கமே *என்று பெரியாழ்வார் அநுஸந்திக்கிறதற்கும் இப் பாசுரம் மூலமாயிருக்கும்; ஆகாசமளவும் ஓங்கியிருக்கிற தாமரையைக்காணும்போது உலகளந்த சேவடியை ஸேவித்தாற் போலவிருக்கும்; செந்நெற்பயிர்கள் கதிர்க்கனத்தாலே தலைவணங்கியிருக்கும் வயல் நிலையைக் காணும் போது* நமந்தி ஸந்தஸ் த்ரைலோக்யாதபி லப்தும் ஸமுந்நதிம் *என்கிற படியே வணக்கமே வடிவெடுத்திருக்கும் பாகவதோத்தமர்களை ஸேவித்தாற் போலவிருக்கும் என்க.

இப்படிப்பட்ட திருமோகூரிலே, **நாளும் மேவி நன்கு அமர்ந்து நின்று** என்கையாலே எம்பெருமானுக்குப் பரமபத வாஸத்திலுங்காட்டில் இப்படிப்பட்ட திவ்யதேசங்களில் வாஸமே திருவுள்ளத்திற்கு மிகவும் இனிதாயிருக்குமென்னுமிடம் காட்டப்பட்டதாகும்; பரமபதத்தில் பகல்விளக்குப்போலே ப்ரகாசம் குன்றியிருந்த திருக்குணங்கள் இருட்டறையில் விளக்குப் போலே ப்ரகாசிப்பது இங்கேயாகையாலே.

**அசுரரைத்தகர்க்குந்தோளுநான்குடை:**— இப்போது அர்ச்சாவதாரத்தில்தானே ஆழ்வாருடைய அநுபவம் நிகழ்கின்றது; தோள்களினால் அசுரரைத் தகர்த்தது விபவாவதாரத்திலாகிலும் அந்த விரோதி நிரஸநஸாமர்த்தியம் இவ்வர்ச்சாவதார நிலையிலும் ஆழ்வார்க்கு ப்ரகாசித்தமை விளங்குகின்றது. இவ்விடத்தில் ஈடு—"இவர் இப்போதறிந்தபடி எங்ஙனேயென்று கேட்க, விரோதாறுைம் கோடிட்டு வளர்ந்த காதென் தெரியுங்காணுமென்று அருளிச் செய்தருளின வார்த்தை."

**சுரிகுழல் கமலக்கட்கனிவாய்க் காளமேகம்;**—ஆழ்வார் நெடுநாள் பட்ட ஸம்ஸார தாபமெல்லாம் ஆறும்படியான சொல்லமைப்பு இது. *மைவண்ணநறுங்குஞ்சிக் குழல் பின்தாழ* என்றும் *களிவண்டெங்குங் கலந்தாற் போல் கமழ்பூங்குழல்கள் தடந்தோள் மேல் மிளிர நின்று* என்றும் சொல்லும்படியான திருக்குழலொழுங்கையும், செவ்வித் தாமரை மலர்ந்தாற் போன்ற கடாக்ஷ வீக்ஷணத்தையும், உள்ளுள்ள அபிநிவேசத்தைக் கோட்சொல்லித்தரும் முறுவலையும் அநுபவித்துக் கூறுகிறாராயிற்று. இப்படிப்பட்ட காளமேகப் பெருமானையன்றி வேறு வழித்துணையுண்டோ? இலம்-இல்லோம் என்றபடி. (1)

இலங்கதிமற்றொன்றெம்மைக்கும் ஈன்தண்டுழாயின்*
அலங்கலங்கண்ணி ஆயிரம்பேருடையம்மான்*
நலங்கொள்நான்மறைவாணர்கள்வாழ் திருமோகூர்*
நலங்கழலவனடிநிழல் தடமன்றியாமே. 2

| | | | |
|---|---|---|---|
| ஈன் தண் துழாயின் அலங்கல் அம் கண்ணி | பரம போக்யமான திருத்துழாய்மாலையை யுடையனாய் | அடி நிழல் தடம் அன்றி | திருவடிநிழலாகிற பொய்கை தவிர |
| ஆயிரம்பேர் உடை அம்மான் | ஆயிரந் திருநாமங்களையுடைய ஸ்வாமியாய் | மற்று ஒன்று கதி | வேறொரு கதியை |
| நலம் கொள் நால் மறை வாணர்கள் வாழ் திருமோகூர் நலம் கழலவன் | விலக்ஷணர்களான வைதிகர்கள் வாழுமிடமான திருமோகூரிலே திருவடிகள் பொருந்தியிருக்கப் பெற்றவனான எம்பெருமானுடைய | யாம் எம்மைக்கும் இலம் | யாம் ஒருபிறப்பிலும் உடையோமல்லோம். |

***—திருமோகூ ரெம்பெருமானுடைய திருவடிகளல்லது வேறுபுகலுடையோமல்லோம் எந்நாளும் என்கிறரிப்பாட்டில். பாட்டின் தொடக்கத்திலே யுள்ள "இலங்கதி மற்றொன்றெம்மைக்கும்" என்கிற வாக்யத்திற்குப் பாட்டின் முடிவிலே அந்வயம்; "திருமோகூர் நலங்கழலவனடி நிழல் தடமன்றியாம் இலங்கதி மற்றொன்றெம்மைக்கும்" என்று இயைத்துக் கொள்க. திருமோகூர்த் திருப்பதியிலெழுந்தருளியிருக்கு மெம்பெருமானுக்கு "நலங் கழலவன்" என்றொரு திருநாமஞ் சாத்துகிறராழ்வார். **நலங்கழலவன்**—நன்மைமிக்க திரு வடிகளையுடையவன் என்பது பதப்பொருள். திருவடிகளுக்கு நன்மையாவது என்னென்னில்; குணமுடையாரைக் கைக்கொள்வது, தோஷம் நிரம்பியவர்களைக் கைவிடுவது என்றொரு விரதங் கொள்ளாமல் "**அநாலோசித விசேஷாசேஷ லோகசரண்ய!**" என்று கத்யத்தில் ஸ்வாமி அருளிச் செய்தபடியே 'இத்திருவடிகளுக்கு ஆகாதாரில்லை' என்னும் படியாக அனைவரையும் கைக்கொள்ளுகை. "ஆச்ரிதருடைய குணதோஷ நிரூபணம் பண்ணாத திருவடிகள்" என்பது ஈடு.

திருமோகூர் எப்படிப்பட்டதென்னில்; நலங்கொள் நான்மறைவாணர்கள் வாழப் பெற்றது. 'நலங்கொள்' என்கிற அடைமொழி நான்மறைக்குமாகலாம், நான்மறை வாணர்கட்கு மாகலாம். நான்மறைக்கு ஆகும்போது, அபௌருஷேயத்வம் நித்ய நிர்தோஷத்வம் முதலான நன்மைகளைக் கொண்டிருத்தல் விவக்ஷிதம். நான்மறை வாணர்கட்கு ஆகும்போது, வேததாத்பர்யங்களை நன்கறிந்தும் அநுஷ்டித்தும் அநுஷ்டிப்பித்தும் போருகையாகிற நலம் விவக்ஷிதம். ... ... ... (2)

அன்றியாமொருபுகலிடம் இலமென்றென்றலற்றி*
நின்றுநான்முகன் அரனெடுதேவர்கள்நாட*
வென்றிம்மூவுலகளித்து உழல்வான்திருமோகூர்*
நன்றுநாமினிநணுகுதும் நமதிடர்கெடவே. 3

| | | | |
|---|---|---|---|
| யாம் | அடியோங்கள் | இம் மூ உலகு அளித்து உழல்வான் | இம் மூவுலகங்களையும் ரக்ஷித்து இதுவே யாத்திரையாயிருக்கும் பெருமானுடைய |
| அன்றி ஒரு புகலிடம் இலம் என்று என்று அலற்றி | உன்னை யொழிய வேறொரு புகலிடமுடையோமல்லோமென்று இதையே பலகாலும் சொல்லியலற்றி | திருமோகூர் | திருமோகூர்ப்பதியை |
| நான்முகன் அரனெடு தேவர்கள் நின்று நாட | ப்ரஹ்மருத்ரர்களோடு தேவஜாதிகள் நிலை நின்று ஆச்ரயிக்க | நாம் நமது இடர் கெட | நாம் நம்முடைய இடர் நீங்கும்படி |
| வென்று | விரோதிகளைத் தொலைத்து | இனி நன்று நணுகுதும் | இப்போது நன்றாகக் கிட்டக் கடவோம். |

***—நம்முடைய எல்லாத் துயரங்களுங் கெடுமாறு திருமோகூரைச் சென்று கிட்டுவோ மென்கிறர். இத்தலத்தில் நான்முகன் சிவன் முதலான தேவர்கள் வந்து பணி

கின்றார்களாம்; அப்போது அவர்கள் சொல்லும் பாசுர மென்னென்னில்; “அன்றி யாமொரு புகலிடமிலம்” என்று பலகாலும் இதைச் சொல்லி அலற்றுகிறார்களாம்; **அன்றி** என்றது ‘திருமோகூரப்பனையன்றி’ என்றபடி. ப்ரயோஜநாந்தரபரரான அத்தேவர்களுடைய வாயில் அநந்யப்ரயோஜநர்கள் சொல்லக்கூடியதான இப்பாசுரம் வெளிவருதற்குத் தகுதியில்லை; ஆயினும் தங்கள் ப்ரயோஜனம் கைபுகுமளவும் வஞ்சனையாக இப்பாசுரம் பேசுவார்களாம். அவர்கள் அப்படி வஞ்சகமாகப் பேசினாலும் எம்பெருமான் அவர்களுடைய அநிஷ்ட நிவாரணத்தையும் இஷ்டப்ராபணத்தையும் செய்தே நிற்பனென்கிறது ‘வென்றிம் மூவுலகளித் துழல்வான்’ என்பது. **வென்று** என்றது. அவர்களுடைய விரோதிகளை வென்று என்றபடி. ... ... ... (3)

இடர்கெடவெம்மைப்போந்தளியாய் என்றென்றேத்தி*
சுடர்கொள்சோதியைத் தேவரும்முனிவருந்தொடர*
படர்கொள்பாம்பணைப் பள்ளிகொள்வான்திருமோகூர்*
இடர்கெடவடிபரவுதும் தொண்டீர்! வம்மினே, 4

| | |
|---|---|
| இடர் கெட | எம்மிடர் தீரும்படியாக |
| போந்து எம்மை அளியாய் என்று | எழுந்தருளி எம்மைரக்ஷித்தருள வேணுமென்று |
| என்று | பலகாலுஞ் சொல்லி |
| சுடர் கொள் சோதியை | தேஜ: புஞ்ஜமயமான திருமேனியை |
| ஏத்தி | தோத்திரங்கள் செய்து |
| தேவரும் முனிவரும் தொடர | தேவர்களும் முனிவர்களும் அநுவர்த்தித்து ஆச்ரயிக்கைக்காக |
| படர்கொள் பாம்பு அணை | விரிவான சேஷசயனத்திலே |
| பள்ளிகொள்வான் | பள்ளி கொள்பவனான பெருமானுடைய |
| திருமோகூர் | திருமோகூர்ப்பதியிலே |
| இடர் கெட அடி பரவுதும் | நம்மிடர் கெடுமாறு அவன் திருவடிகளைத் துதிப்போம்: |
| தொண்டீர் வம்மின் | பக்தர்களே! நீங்களும் வாருங்கள். |

***—தேவரும் முனிவரும் ‘இடர்கெட எம்மைப் போந்தளியாய்’ என்று பலகாலுஞ்சொல்லி யேத்தித் தொடருகின்றார்களாம்; அவர்களுக்காக எம்பெருமான் செய்வது என்ன வெனில்; **படர்கொள் பாம்பணைப் பள்ளிகொள்வான்**—*ஸுகஸுப்த: பரந்தப:* என்கிற படியே கிடந்த கிடையில்தானே அவர்களுடைய இடர் கெடும்படியாயிருப்பன்; ஸங்கல்பமாத்திரத்தாலே எதையும் நிர்வஹிக்க வல்லவனாகையாலே. **‘தொடர’** என்ற செயவெனெச்சத்திற்கு-தொடரும்படியாக வென்று பொருள் கொள்ளுமளவில், படர்கொள் பாம்பணைப் பள்ளி கொண்ட திருக்கோலத்திலே அவர்கள் வந்து தொடரும்படியைச் சொன்னவாறு. ஈச்வராபிமாநிகளான தேவரும், சாபாநுக்ரஹ ஸமர்த்தர்களான முனிவரும் தாங்கள் இடர்பட்டவாறே ‘இடர்கெட எம்மைப் போந்தளியாய்’ என்று பல்லைக் காட்டிப் பிரார்த்திப்பது தவிர வேறு அறியார்களென்கை.

இரண்டாமடியிலே **சுடர்கொள் சோதியை** என்றது—எம்பெருமானுக்கு இயற்கையான தேசுபொலிவைச் சொல்லுகிறதன்று; ‘இவர்கள் ஆபத் காலத்திலேயாகிலும் நம்மைத் தேடி வந்தார்களே!, ஒரு பிரயோஜனத்தை விரும்பியாகிலும் நம்மைத் தேடி வந்தார்களே!, என்று உவப்பின் மிகுதியால் வடிவு புகர்பெற்ற படியைச் சொல்லுகிறது; அன்றியே, விலக்ஷணமான வழகையுடைய இப்பெருமானை ஸ்வயம் ப்ரயோஜனமாகப் பற்றவேண்டியிருக்க, அந்தோ! இடர்கெட நினைத்துப் பற்றப்பார்க்கிறார்களே யென்னும் பரிதாபந் தோற்றச் சொல்லுகிறபடியுமாம். இக்கருத்தில் ஒரு சிறு சங்கை தோன்றக்கூடும்; அதாவது தேவரும் முனிவரும் இடர்கெட வேணுமென்று கோருவது ஆழ்வார்க்குப் பரிதாபஹேதுவாகிறதென்னில், ஆழ்வார்தாமும் இடர்கெட வேணுமென்று கோருகிறாரே அது கூடுமோ? *நன்று நாமினி நணுகுதும் நமதிடர்கெடவே* என்றும், *இடர்கெட வடி பரவுதும் தொண்டீர் வம்மினே* என்றும் சொல்லியிருக்கவில்லையோ? இது கூடுமோ? என்று. இதற்குப் பரிஹாரமாவது-இவருடைய இடர் வேறு, அவர்களுடைய இடர் வேறு. *ஏஹி பச்ய சரீராணி* என்று ராக்ஷஸர் தின்ற வுடம்பைக் காட்டி இவ்வுடம்பைப் பூண் கட்டிக்கொள்ளத் தேடுகிறவர்கள் அவர்கள்; *அழுக்குடம்பு மிந்நின்ற நீர்மையினியா முறுமை* என்று அவ்வுடம்பைக் கழிக்கத் தேடுகிறவர் ஆழ்வார்; ஆகவே இடரில் வேறுவாசியுண்டென்க. ... ... ... (4)

தொண்டீர்! வம்மின் நம்சுடரொளியொருதனிமுதல்வன்*
அண்டமூவுலகளந்தவன் அணிதிருமோகூர்*
எண்டிசையுமீன்கரும்பொடு பெருஞ்செந்நெல்விளைய*
கொண்டகோயிலைவலஞ்செய்து இங்காடுதுங்கூத்தே.

| | | | |
|---|---|---|---|
| நம் சுடர் ஒளி | நாம் அநுபவித்தற் குரிய தேஜோமய திவ்யமங்கள விக்ரஹத்தையுடையனும் | ஈன் கரும்பொடு பெரு செந்நெல் விளைய | இனியகரும்போடு கூட பெரிய செந்நெற்பயிர்கள் விளையும் படியாக |
| ஒரு தனி முதல்வன் | உலகுக் கெல்லாம் அத்விதீய காரண பூதனும் | கொண்ட கோயிலை | தான் பரிக்ரஹித்தருளின ஸந்நிதியை |
| அண்டம் மூ உலகு அளந்தவன் | அண்டங்களையுடைய மூவுலகங்களையு மளந்து கொண்டவனை எம்பெருமான் | வலம் செய்து | பிரதக்ஷிணம் பண்ணி |
| | | இங்கு கூத்து ஆடுதும் | இங்கே கூத்தாடுவோம்; |
| அணி திருமோகூர் | அழகிய திருமோகூரிலே, | தொண்டீர் வம்மின் | தொண்டர்களே! நீங்களும் வாருங்கள். |
| எண் திசையும் | எட்டுத் திசைகளிலும் | | |

***—“தொண்டீர் வம்மினே” என்று கீழ்ப்பாட்டிற் சொல்லியிருந்தும் மீண்டும் தொண்டீர்வம்மின்” என்கிறார்—அந்தாதித் தொடைக்காகவன்று; *ஏக: ஸ்வாது ந புஞ்ஜீத* என்றும் *இன்கனி தனியருந்தான்* என்றும் சொல்லுகிறபடியே தொண்டர்களில் ஒருவரும் இவ்வநுபவத்தை இழக்கலாகாதென்கிற உத்கண்டையாலே மீண்டு மீண்டு மழைக்கிறபடி. திருமோகூரை வலஞ்செய்து கூத்தாடலாம் வாருங்கோ ளென்றழைக்கிறார். அங்குறையும் பெருமானெப்படிப்பட்டவ னென்னில்; **நஞ்சுடரொளி ஒரு தனிமுதல்வன்**—சுடரொளி மிக்க தன்வடிவழகையும் முதன்மையையுங் காட்டி நம்மை யீடுபடுத்திக்கொண்டவ னென்கை.

**அண்டமூவுலகளந்தவன்**—கீழே ‘ஒரு தனி முதல்வன்’ என்பதனால் படைப்பவனென்றது; படைத்து விட்டுவிடுகையன்றிக்கே படைத்த ஜகத்தை வலியார் அபஹரித்தால் எல்லை நடந்து கொண்டு ரக்ஷிக்குமவனென்கிறது **அண்ட மூவுலகளந்த**வனென்பதனால். **கொண்டகோயில்**—தன் திருவுள்ளத்தாலே உகந்து பரிக்ரஹித்த திவ்யதேசமென்றபடி. வலஞ்செய்வதும் கூத்தாடுவதும் பக்தர்களின் பணியாதலால் அது செய்யவழைக்கிறபடி...(5)

கூத்தன்கோவலன் குதற்றுவல்லசுரர்கள்கூற்றம்*
ஏத்தும்நங்கட்கும் அமரர்க்கும்முனிவர்க்குமின்பன்*
வாய்த்ததண்பணைவளவயல்சூழ் திருமோகூர்
ஆத்தன்* தாமரையடியன்றி மற்றிலமரணே.

| | | | |
|---|---|---|---|
| கூத்தன் | அழகிய நடையையுடையனும் | வாய்த்த தண் பணை வளம் வயல் சூழ் திருமோகூர் ஆத்தன் | நெருங்கிக் குளிர்ந்த நீர் நிலங்களாலும் செழித்தவயல்களாலும்சூழப்பட்ட திருமோகூரில் எழுந்தருளியிருப்பவனை ஆப்தனுடைய |
| கோவலன் | பசுக்களின் பின்னே சென்று அவற்றை ரக்ஷிக்குமவனும் | | |
| குதற்று வல் அசுரர்கள் கூற்றம் | பீடையைப் பண்ணும் கொடிய அசுரர்களுக்கு மிருத்யுவாய் | தாமரை அடி அன்றி | பாதாரவிந்தங்களைத்தவிர்த்து |
| ஏத்தும் நங்கட்கும் அமரர்க்கும் முனிவர்க்கும் இன்பன் | துதி செய்கின்ற நமக்கும் தேவர்களுக்கும் இருடிகளுக்கும் ஆனந்தகரனும் | மற்று அரண் இலம் | மற்றொரு ரக்ஷையுடையோமல்லோம். |

*****கூத்தன்**—நடராஜனென்று பேர் பெற்ற தேவதாந்தரம் போலே கூத்தாடுகிறவனல்லன்; நடை நடக்குமழகே கூத்தாடினாற்போலே நெஞ்சைக் கவருமதாயிருக்குமென்ப. இங்கு ஈட்டில் “நடக்கப்புக்கால் வல்லாராடினாப்போலேயிருக்கை” என்றருளிச்செய்து உடனே* அக்ரத: ப்ரயயௌ ராம:* என்கிற ஸ்ரீ ராமாயணப்ரமாணம் காட்டப்பட்டுள்ளது;

இந்த ப்ரமாணத்தில் **யயௌ** என்னமல் **'பரயயௌ'** என்றதனால் நடையில் விசேஷம் காட்டப்பட்டதென்று நம்பிள்ளை திருவுள்ளம். இந்த நடையழகு இராமபிரானிடத்திலன்றிக்கே கண்ணபிரானிடத்தும் காணலாயிருக்கையாலே **கோவலன்** என்கிறது; *கானகம் படியுலாவியுலாவிக் கருஞ்சிறுக்கன் குழலூதினபோது, மேனகையோடு திலோத்தமையரம்பை உருப்பசியரவர் வெள்கிமயங்கி, வானகம்படியில் வாய்திறப்பின்றி ஆடல் பாடலவை மாறினர்தாமே* என்ற பெரியாழ்வார் திருமொழியை இங்கே யோஜிப்பது.

**குதற்று வல்லசுரர்கள்**—ஜாதியோ அஸுரஜாதி; அதிலும் **வல்லசுரர்**—வன்மையே வடிவெடுத்தவர்கள்; அதற்குமேல், **குதற்று** வல்லசுரர்கள்—ஸாதுக்களுக்குப் பீடைகள் செய்வது தவிர வேறு தொழிலற்றவர்கள்; அப்படிப் பட்டவர்களுக்குக் **கூற்றம்**-மிருத்யுவாயிருப்பவன் எம்பெருமான். **ஏத்தும் நங்கட்கு மமரர்க்கும் முனிவர்க்குமின்பன்**—இன்று ஆச்ரயிக்கிற நமக்கும் நித்யாச்ரிதர்களானார்க்கும் இன்பனாமிடத்தில் வாசியற்றிருப்பவன். வாசியற்றிருக்கைமட்டுமன்றிக்கே, இன்பனாமிடத்தில் முந்துறமுன்னம் நமக்கு இன்பனாம் என்கிற விசேஷமும் குறிக் கொள்ளத்தக்கது. இப்படிப்பட்ட எம்பெருமான் **திருமோகூராத்தன்**—ஆத்தனென்றது **ஆப்த**னென்ற வடசொல்விகாரம்; பரமபந்து என்றபடி. ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்; "தான் தனக்கல்லாத மரணஸமயத்தில் *அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி* என்னும் பரமாப்ததமன்."— இப்படிப்பட்ட பெருமானுடைய தாமரையடியன்றி மற்று அரண் இலம்—வேறு சிலரை ரக்ஷகராகவுடையோமல்லோம். **இலம்**-இல்லோம்....(6)

மற்றிலமரண் வான்பெரும்பாழ்தனிமுதலா*
சுற்றும்நீர்படைத்து அதன்வழித்தொன் முனிமுதலா*
முற்றுந்தேவரோடு உலகுசெய்வான்திருமோகூர்*
சுற்றிநாம்வலஞ்செய்ய நம்துயர்கெடுங்கடிதே.

| | |
|---|---|
| வான் பெரு பாழ் தனி முதலா | வலிதாய் அபரிச்சிந்நமாய் போகமோக்ஷங்களை விளைப்பதாய் அத்விதீயமான மூலப்ரக்ருதி தொடக்கமாக |
| சுற்று நீர் படைத்து | ஆவரண ஜலத்தை ஸ்ருஷ்டித்து |
| அதன் வழி | அந்த வழியாலே |
| தொல் முனி முதலா | பழைய முனிவனானப்ரஜாபதி முதலாக |
| முற்றும் தேவரோடு உலகு செய்வான் | எல்லாத் தேவஜாதியோடுங்கூட எல்லாவுலகங்களையும் உண்டாக்குமவன் எழுந்தருளியிருக்குமிடமான |

| | |
|---|---|
| திருமோகூர் | திருமோகூர்ப்பதியை |
| நாம் சுற்றி வலம் செய்ய | நாம் சுற்றிப்ரதக்ஷிணம் பண்ண |
| நம் துயர் கடிது கெடும் | நம் துக்கங்கள் விரைவில் தொலைந்து போம்; |
| மற்று அரண் இலம் | (ஆனபின்பு இத்திருப்பதி தவிர) மற்றொரு ரக்ஷகமுடையோமல்லோம். |

***'மற்றில மரண்' என்று சொல்லும்படி அவன் ரக்ஷகனாகவல்லனோவென்னில்; அவனுடைய ரக்ஷகத்வமிருந்தபடி பாருங்கோளென்கிறார் **வான்பெரும்பாழென்று** தொடங்கி. வான் பெரும்பாழென்று மூலப்ரக்ருதியைச் சொல்லுகிறது. பாழ்நிலமாயிருந்தால் அதில் அவரவர்களுக்கு வேண்டிய செடி கொடி பயிர்களை விளைத்துக் கொள்ளலாமன்றோ; அதுபோல மூலப்ரக்ருதியானது சேதநர்க்கு போக மோக்ஷங்களை விளைத்துக் கொள்ளலாம் நிலமாயிருக்கையாலும், அதுதானும் எல்லைகடந்திருப்பதாலும் **வான்பெரும்பாழ்** என்கிறது. **தனி** என்பது பெரும்பாழுக்கு விசேஷணமாகக் கொள்ளத்தக்கது; தனி வான் பெரும்பாழென்க. **முதலாச் சுற்று நீர்படைத்து**—மூலப்ரக்ருதி தொடக்கமாக ஆவரண ஜலத்தை ஸ்ருஷ்டித்து. **அதன்வழி**-இவ்விதமாகவே யென்றபடி. **தொன்முனி** யென்று நான்முகனைச் சொல்லுகிறது. "தேவாதிகளைப்பற்றப் பழையனாய் மநந சீலனான சதுர்முகன் தொடக்கமாக" என்பது ஈடு. **முற்றுந் தேவரோடு உலகு செய்வான்**-எல்லா தேவஜாதி யோடுங்கூட எல்லாவுலகங்களையுமுண்டாக்குபவன். இப்படிப்பட்ட எம்பெருமானெழுந்தருளியிருக்கிற திருமோகூரை; **சுற்றி நாம் வலஞ் செய்ய நம் துயர் கடிதே கெடும்**-நாம் சென்று ப்ரதக்ஷிணப்ர

ளுமாதிகளைப் பண்ண நம் துயர் விரைவில் தொலையும்; வழித்துணையில்லை யென்று நாம் படுகிற துக்கம் தொலையுமென்கை. ... ... ... ... ... (7)

துயர்கெடுங்கடிதடைந்துவந்து அடியவர்! தொழுமின்*
உயர்கொள்சோலை ஒண்தடமணியொளி திருமோகூர்*
பெயர்களாயிரமுடைய வல்லரக்கர்புக்கழுந்த*
தயரதன்பெற்ற மரதகமணித்தடத்தினையே.

| | | | |
|---|---|---|---|
| உயர் கொள் சோலை | உன்னதமான சோலைகளையும் | | |
| ஒண் தடம் அணி ஒளி திருமோகூர் | அழகிய தடாகங்களையும் அலங்காரமாக வுடைத்தான அழகிய திருமோகூரிலே, | அடியவர்! | அடியீர்காள்! |
| | | அடைந்து வந்து | வந்து கிட்டித் |
| ஆயிரம் பெயர்கள் உடைய | ஸஹஸ்ர நாமப்ரதிபாத்யனாய், | தொழுமின் | தொழுங்கோள்; (அப்படி தொழுதால்) |
| வல் அரக்கர் புக்கு அழுந்த | கொடிய ராக்ஷசர்கள் புகுந்து மடியும் படியாக | துயர் கடிது கெடும் | கிலேச மெல்லாம் விரைவில் தொலைந்து போம். |
| தயரதன் பெற்ற | தசரதசக்ரவர்த்தி பெற்ற | | |
| மரதகம் மணி தடத்தினை | மரதகமணித்தடாகம்போன்ற வனான எம்பெருமானை, | | |

***வெளியே தாளதாமரைத் தடாக முடைய திருமோகூரிலே ஸன்னிதிக்குள்ளேயும் ஒரு தடாகம் திகழ்கின்றது; அந்தத் தடாகத்தை அடியவர்களே வந்து தொழுமின் என்றழைக்கிறார். ஸன்னிதிக்குள்ளே திகழும் தடாகமெது வென்னில்; **தயரதன் பெற்ற மரதகமணித் தடம்;**—தசரத சக்ரவர்த்தி இராமனைப் பெற்றானல்லன்; ஒரு மரதகத் தடாகத்தையாயிற்று பெற்றான்; தடாகத்திற்கும் எம்பெருமானுக்கு முள்ள பொருத்தங்கள் கீழே (8-5-1.) *மாயக் கூத்தா வாமனா!* என்கிற பாட்டில் "கண்கைகால் தூய செய்ய மலர்களா சோதிச் செவ்வாய் முகிழதா சாயல் சாமத்திருமேனி தண்பாசடையா தாமரை நீள்வாசத்தடம்போல் வருவானே." என்று காட்டப்பட்டன. *கரசரணஸரோஜே காந்திமந்நேத்ர மீநே ச்ரமமுஷி புஜவீசிவ்யாகுலே அகாதமார்க்கே, ஹரிஸரஸி* என்கிற முகுந்தமாலைச் ச்லோகத்திலும் இப்பொருத்தம் நிரூபிக்கப்பட்டது. பட்டரும் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்தில் *உத்புல்லபங்கஜ தடாகமிவ* பிப நயந புரஸ் தே* என்கிற இரண்டுச்லோகங்களினால் இப் பொருத்தத்தை நிரூபித்தருளினர். இவற்றில் விட்டுப்போன வொரு பொருத்தம் இப்பாட்டில் காட்டப்படுகிறது. அதாவதென்னென்னில்; உலகில் ஒரு தடாகம் வெட்டப்பட்டிருந்தால் அதில் பலரும் நீராடுதல் தீர்த்தம் பருகுதல் அனுட்டானம் செய்தல் முதலியன செய்து களிக்குமாபோலே சிலர் தாமாகவே கழுத்தில் கல்லைக் கட்டிக் கொண்டு அக்குளத்தில் வீழ்ந்து மடிந்து போவதைக் காணுகின்றோமே; இத்தன்மை தயரதன் பெற்ற மரதக மணித்தடாகத்திற்கு முண்டென்று காட்டியருளுகிறார் **வல்லரக்கர் புக்கழுந்தத் தயரதன் பெற்ற மரகதமணித் தடத்தினையே** என்று. இத்தால் அரக்கர்களைப் பெருமாள் தாமாகக் கொன்று முடித்தாரல்லர்; விட்டில்கள் விளக்கிலே தாமாகவிழுந்து முடிந்து போவது போல அரக்கர் தாங்களாகவே எதிரிட்டு முடிந்து போனார்களத்தனை யென்னுமிடம் தெரிவிக்கப்பட்டதாம்.

"**பெயர்களாயிரமுடைய**" என்கிற விசேஷணம் தயரதன் பெற்ற மரதக மணித் தடமாகக் கொள்ளப்பட்ட எம்பெருமானிடத்திலே அந்வயிக்கு மென்று சிலர் கொள்ளுவர்கள்; அவ்வளவு தூராந்வயம் வேண்டா; பக்கத்திலுள்ள வல்லரக்கரிலேயே அந்வயிக்கக் குறையில்லை. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின்—"ஈச்வரன் ரக்ஷித்துப்படைத்த பெயர்களோபாதி போருமாய்த்து இவர்கள் பரஹிம்ஸை பண்ணிப் படைத்த பெயர்; **யஜ்ஞசத்ரு, ப்ரஹ்மசத்ரு** என்றாப் போலேயிறே இவர்கள் பெயர்." ... ... (8)

மணித்தடத்தடிமலர்க்கண்கள் பவளச் செவ்வாய்*
அணிக்கொள் நால்தடந்தோள்தெய்வம் அசுரரையென்றும்*

துணிக்கும்வல்லரட்டன் உறைபொழில்திருமோகூர்*
நணித்துநம்முடைநல்லரண் நாமடைந்தனமே. 9

| | | | |
|---|---|---|---|
| மணி தடத்து அடி | அழகிய தடாகம்போலே குளிர்ந்த திருவடிகளையும் | அசுரரை என்றும் துணிக்கும் வல் அரட்டன் | அசுரர்களை எப்போதும் நிரஸிக்கின்ற பெருமிடுக்கனுமான எம்பெருமான் |
| மலர் கண்கள் | தாமரைப் பூப்போன்ற திருக்கண்களையும் | உறை | நித்யவாஸம்பண்ணுமிடமான |
| பவளம் செம்வாய் | பவளம்போற் சிவந்த அதரத்தையும் | பொழில் திருமோகூர் | சோலைவளம் மிக்க திருமோகூர்ப்பதியாகிற |
| அணி கொள் நால் தடம் தோள் | அழகிய நான்கு திருத்தோள்களையும் உடைய | நம்முடை நல் அரண் | நமக்கு நல்லரக்ஷகமான திவ்ய தேசம் |
| தெய்வம் | தெய்வமாயிருப்பவனும் | நணித்து | அருகேயுள்ளது; |
| | | நாம் அடைந்தனம் | இதனை நாம் பற்றிக்கப் பெற்றோம். |

***நமக்கு அரணான திருமோகூரை நாம் கிட்டப் பெற்றோமென்று தம்முடைய லாபத்தைப் பேசிமகிழ்கிறார். தெளிந்த தடாகம் போலே குளிர்ந்த திருவடிகளையும் அப்போதலர்ந்த செந்தாமரை போலேயிருக்கிற திருக்கண்களையும் பவளம் போலே சிவந்த திருவதரத்தையு முடையனாய் ஆபரணங்களுக்கு அழகு கொடுக்கவல்ல நான்கு திருத்தோள்களையுடையனாய் அத்திருத்தோள்களுக்கு இரை போரும்படியாக எதிரிட்டுவருகிற அசுரர்களைத் துணிக்குமவனான எம்பெருமான் நித்யவாஸம் செய்தருளுமிடமாய் சோலைகள் சூழ்ந்ததான திருமோகூர்ப்பதியானது கிட்டிற்று; இதுவே நமக்கு ரக்ஷகம்; ரக்ஷகம் தேடி நிற்கிற நாம் கிட்டப்பெற்றோம் இத்திருப்பதியை என்றாராயிற்று. ... (9)

நாமடைந்தநல்லரண் நமக்கென்றுநல்லமரர்*
தீமைசெய்யும்வல்லசுரரை அஞ்சிச்சென்றடைந்தால்*
காமரூபங்கொண்டு எழுந்தளிப்பான்திருமோகூர்*
நாமமேநவின்றெண்ணுமின் ஏத்துமின்நமர்காள்! 10

| | | | |
|---|---|---|---|
| நமக்கு நாம் அடைந்த நல் அரண் என்று | நமக்குப்புகலாக நாம்அடைந்த நல்ல ரக்ஷகமான தலம் இது வென்று | காமரூபம் கொண்டு | திருவுள்ளமான வடிவைக் கொண்டு |
| நல் அமரர் | ஸாதுக்களான தேவர்கள் | எழுந்து அளிப்பான் | கிளர்ந்து ரக்ஷிக்கும்பெருமான் எழுந்தருளியிருக்கு மிடமான |
| தீமைசெய்யும் வல் அசுரரை அஞ்சி | தங்களுக்குப் பொல்லாங்கு செய்யும் அசுரர்களுக்கு அஞ்சி | திருமோகூர் நாமமே | திருமோகூர்ப்பதியின் பெயரையே |
| சென்று அடைந்தால் | வந்து பணிந்தால் | நமர்காள் நவின்று எண்ணுமின் ஏத்துமின் | நம்முடையவர்களே! பயின்று நினையுங்கோள், வாய் விட்டுமேத்துங்கள். |

***அடியார்களின் விஷயத்தில் அபீஷ்டவிக்ரஹ பரிக்ரஹம் பண்ணி ரக்ஷித்தருளுமெம்பெருமான் வர்த்திக்கிற திருமோகூர்த் திருப்பதியின் திருநாமத்தைச் சொல்லி ஏத்துங்கோளென்று, தம்மோடு அந்வயமுடையார்க்கு உரைத்தருளுகிறார். நல்லமரர், தீமை செய்யும் வல்லசுரரையஞ்சி, நமக்கு நாம்டைந்த நல்லரணென்று சென்றடைந்தால், காமரூபங் கொண்டு எழுந்தளிப்பான் என்று அந்வயிப்பது. அசுரர்கள் எப்போதும் அமரர்கட்குத் தீங்கிழைத்துக்கொண்டே யிருப்பர்களாதலால் அவர்கட்கு அஞ்சி எம்பெருமானிடம் வந்து 'நமக்கு நாமடைந்த நல்லரண்' [நமக்கு அஸாதாரணமாக நாம் பற்றின விலக்ஷணமான அரண்] என்று கொண்டுவந்தடைகின்ற நல்லமரர்கட்காக, **காம ரூபங்கொண்டு எழுந்தளிப்பான்.**—அடியாருடைய ஆபத்ரக்ஷணானுரூபமாக வேண்டினபடி பரிக்ரஹிக்கும் திருமேனிக்குக் காமரூப மென்று பெயர். காமமாவது இச்சை; இச்சையினாலே பரிக்ரஹிக்கப்பட்ட ரூபம்-காமரூபம். அதைக்கொண்டு புறப்பட்டு ரக்ஷிக்குமவன் வர்த்திக்கிற திருமோகூர். இவ்வூரின் பெயரை வாயாலே சொல்லி யநுஸந்தித்து அன்பு மிகுதியினால் ஏத்துங்கோள் நம்முடையவர்களே!. ... ... ... (10)

ஏத்துமின் நமர்காள்! என்றுதான்குடமாடு
கூத்தனை *குருகூர்ச்சடகோபன் குற்றேவல்கள்*
வாய்த்தவாயிரத்துள்ளிவை வண்திருமோகூர்க்கு*
ஈத்தபத்திவையேத்தவல்லார்க்கு இடர்கெடுமே.

| | | | |
|---|---|---|---|
| நமர்காள் ஏத்துமின் என்று தான் குடம் ஆடு கூத்தனை | எம்முடையவர்காள்! ஏத்துங்கோளென்று தானே சொல்லிக் குடக் கூத்தாடின பெருமானைக் குறித்து | இவை வண் திருமோகூர்க்கு ஈத்த பத்து | இப்பத்துப் பாசுரங்களும் திருமோகூர் விஷயமாக ஸமர்ப்பித்தவை |
| குருகூர் சடகோபன் குற்றேவல்கள் வாய்த்த ஆயிரத்துள் | நம்மாழ்வாருடையவாக்காலானகைங்கர்யமாக வாய்ந்த ஆயிரத்துக்குள்ளே. | இவை ஏத்த வல்லார்க்கு இடர் கெடும் | இவற்றைக் கொண்டு எம்பெருமானைத் துதிக்க வல்லவர்களுக்குத் துன்பங்கள் தொலைந்துபோம். |

இத்திருவாய்மொழியைக் கற்கவல்லார்க்கு ஸம்ஸாரத்தில் வழித்துணையில்லையென்று க்லேசப்படவேண்டாதபடி காளமேகம் வழித்துணையாமென்று பலன் சொல்லித் தலைக்கட்டுகிறார். **ஏத்துமின் நமர்காளென்று தான் குடமாடு கூத்தனை**—கண்ணன் குடக்கூத்தாடும்போது இங்ஙனே சொல்லிக்கொண்டு ஆடினனும்; (அதாவது) 'நம் சேஷ்டிதத்தை உகப்பாரெல்லாரும் வந்து கண்டு வாய்படைத்த ப்ரயோஜனம் பெறும்படி ஏத்துங்கோள்' என்று தானே சொல்லிக்கொண்டு ஆடினன். இத்தால், பிறர்க்குப்போலே தனக்கும் மநோஹரமான சேஷ்டிதங்களை யுடையவனென்றதாயிற்று. இப்படிப்பட்ட எம்பெருமானைக் குறித்து ஆழ்வார் வாசிகமான அடிமையிலே அதிகரித்தார்; அது எம்பெருமானுக்குத் தகுதியான ஆயிரமாக அவதரிக்கத் தொடங்கிற்று, அதில் இப்பத்தும் திருமோகூர்த்திருப்பதிக்கென்று வகுக்கப் பட்டது; இத்திருவாய் மொழியைக்கொண்டு ஏத்தவல்லார்க்கு இடர் கெடும்—என்றதாயிற்று.

**திருமோகூர்க்கு ஈத்தபத்திவை** என்றவிடத்து அறியத்தக்க தொன்றுண்டு; திருவாய்மொழித் தனியன்களில் *வான் திகழுஞ் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்றதமிழ் மறைகளாயிரமும்* என்பது மொன்று. இது பட்டரருளிச்செய்ததாக ப்ரஸித்தம். இதில் திருவாய்மொழியாயிரமும் ஸ்ரீரங்கநாதன் விஷயமென்று சொல்லப்பட்டுள்ளது; இது எப்படி பொருந்தும்? திருவாய் மொழியாயிரத்தில் பல பல திவ்யதேசங்களன்றோ அநுபவிக்கப்பட்டிருக்கின்றன; அவற்றுள் தென் திருவரங்கமுமொன்று; * கங்குலும் பகலும்* என்ற பதிகமொன்றே ஸ்ரீ ரங்கநாதன் விஷயமாகக் காணநிற்க, ஆயிரமும் மதிளரங்கர் வண்புகழ்மேலான்றதென எப்படிச் சொல்லுகிறார்? என்று முன்பே சிலர் கேட்டார்களாம்; அதற்கு உத்தரமுரைத்தவர்கள், *கங்குலும் பகலும் பதிகத்தின் முடிவில் * முகில் வண்ணனடிமேல் சொன்னசொல்மாலையாயிரம் * என்கையாலே திருவாய் மொழியாயிரமும் ஸ்ரீரங்கநாதன் திருவடிகளுக்கே ஸமர்ப்பிக்கப்பட்டது; அதிலிருந்து சில திவ்ய தேசங்களுக்குப் பகிர்ந்துகொடுக்கப்பட்டது; ஆனதுபற்றியே "திருவேங்கடத்துக்கிவை பத்தும்" என்றும் "திருமோகூர்க்கு ஈத்த பத்திவை" என்றும் "இவை பத்தும் திருக்குறுங்குடியதன் மேல்" என்றும் ஆழ்வார்தாமேயருளிச் செய்கிறார்—என்றார்களாம். ... (11)

பத்தாம்பத்து முதல் திருவாய் மொழியுரை முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பத்தாம்பத்து-இரண்டாந்திருவாய்மொழி=கெடுமிடர்.

**உரையவதாரிகை.**—கீழ்த் திருவாய்மொழியில் திருமோகூரை யநுபவித்தார்; இத் திருவாய் மொழியில் திருவனந்தபுரத்தை யநுபவிக்கிறார்; மேலே திருவாட்டாறு திருமாலிருஞ்சோலை திருப்பேர் நகர் என்கிற திருப்பதிகளையும் பேசப்போகிறார். கீழே ஒன்பதாம் பத்திலும் பல திருப்பதிகளைப் பேசினார். இப்படி அடுத்தடுத்துத் திருப்பதிகளிலே யீடுபடுவதற்கு என்ன காரணமென்று ஆராய்ச்சி செய்யப்ராப்தம். திருமங்கையாழ்வாரும் பெரிய திருமொழியில் (10—1.) *ஒரு நற்சுற்றம் *என்னும் பதிகத்தில் ஒவ்வொரு பாட்டிலும் இரண்டிரண்டு திருப்பதிகளைப் பேசியிருக்கிறார்; அதற்கு என்ன காரணமென்று ஆராய்ச்சி செய்த ஆசாரியர்கள் வெகு ஆச்சரியமாகக் கருத்தறிந்து கூறியுள்ளார்கள்; பிறந்தகத்தில் நின்றும் புக்ககஞ்செல்லப் புறப்படுகின்ற பெண்பிள்ளை தான் நெடுநாள் வஸித்த விடத்திலே தன்னோடு மிகவும் முகம்பழகியிருந்த பரமப்ரேமாஸ்பதர்களான சில பெண்பிள்ளைகளைச் சென்று பணிந்து 'நங்காய். நான் போய்வருகிறேன்; மாதே நான் சென்று வருகிறேன்' என்று சொல்லி விடை பெற்றுக்கொள்வதற்காகச் சில குறடுகள் ஏறியிறங்குமாபோலே, இவ்வாழ்வாரும் தம் புக்ககமாகிய பரமபதத்தின் பயணத்திற்குப் பூர்வாங்கமாக, தமது மிக்க ஈடுபாட்டிற்கிடமான சில திருப்பதி யெம்பெருமான்கள் பக்கலிலே சொல்லிக்கொள்வதாக நுழைந்து புறப்படுகிறார் *ஒரு நல்சுற்றத்திலே—என்று. நம்மாழ்வாரும்மப்படியே *மாலை நண்ணிக்குப் பிறகு பரமபதப்ராப்தி அணித்தென்று துணிந்தவராகையாலே பல திவ்ய தேசங்களிலே புகுவதாகிறார்

இப்போது திருவனந்தபுரத்தை ப்ராப்யமாகத் துணிந்து அவ்விடத்திலே யீடுபட்டுப் பேசுவதாய்ச் செல்லுகிறது-இத்திருவாய்மொழி. ... ... ... *

கெடுமிடராயவெல்லாம் கேசவாவென்ன*நாளும்
கொடுவினைசெய்யும் கூற்றின்தமர்களும்குறுககில்லார்*
விடமுடையரவில்பள்ளி விரும்பினான்சுரும்பலற்றும்*
தடைமுடைவயல் அனந்தபுரநகர்புகுதுமின்றே. (1)

| | | | |
|---|---|---|---|
| கேசவா என்ன இடர் ஆய எல்லாம் கெடும் | கேசவ நாமத்தைச் சொன்ன வளவில் துன்பமானவை யெல்லாம் தொலைந்துபோம்; | விடம் உடை அரவில் பள்ளி விரும்பினான் | நச்சரவினணை மேல் விரும்பிப் பள்ளி கொள்ளுமவன் வர்த்திக்கிற |
| நாளும் கொடுவினை செய்யும் | நிரந்தரமாகக் கொடுமைகளைச் செய்ய நிற்கிற | சுரும்பு அலற்றும் தடம் உடை வயல் | வண்டுகள் ஆரவாரிக்கின்ற தடாகங்கள் நிறைந்த கழனிகளையுடைய |
| கூற்றின் தமர்களும் குறுக கில்லார் | யமபடர்களும் அணுகமாட்டாது ஓடிப்போவர்கள்; (ஆனபின்பு) | அனந்தபுரம் நகர் | திருவனந்த புரமாகிற திவ்ய தேசத்தை |
| | | இன்றே புகுதும் | இன்றே போய்ப் புகுவோம். |

***ப்ராப்யமான திருவனந்தபுரத்திலே சென்று சேருகைக்கு இடையூறுகள் பலவுண்டே; அவையெல்லாம் திருநாமஸங்கீர்த்தனம் பண்ணின வளவிலேயே தொலையும்; அங்கேபுக வாருங்கோள் என்று அநுகூலரையழைக்கிறார். **கேசவாவென்ன இடராய வெல்லாம் கெடும்**—கேசவா வென்று மூன்றெழுத்தைச் சொன்னவளவிலே இடரென்று பேர் பெற்றவையெல்லாங்கெடும். *மேருமந்தரமாத்ரோபி ராசி: பாபஸ்ய கர்மண:, கேசவம்

**வைத்யமாஸாத்ய துர்வ்யாதிரிவ நச்யதி*** என்ற ப்ரமாணம் இங்கு அநுஸந்திக்கத்தகும். 'கேசவன்' என்னுந் திருநாமத்திற்குப் பல பொருள்களுண்டாகிலும் கம்ஸனது ஏவுதலால் தன்னை நலியக் குதிரைவடிவுகொண்டு திருவாய்ப் பாடியிலே வந்த கேசியென்னுமஸுரனை வதஞ்செய்தவனென்று பொருள் கொள்ளுதல் இங்கு ப்ரகரணத்திற்குச் சேரும். "அவன் ஒரு விரோதியைப் போக்கினபடியைச் சொல்ல, விரோதியென்று பேர்பெற்றவையெல்லாம் நசிக்கும்" என்பது ஈடு. ப்ராரப்த கருமங்கள் ஸஞ்சித கருமங்கள் என்று பாகுபாடுற்றவை யெல்லாம் கெடுமென்பது தோன்ற "இடராய **எல்லாம்**" எனப்பட்டதென்ப.

**நாளுங் கொடுவினை செய்யுங் கூற்றின் தமர்களும் குறுககில்லார்**—நமன் தமராலு மாராயப்பட்டறியாரென்றபடி. எல்லாவிடரும் கெடுமென்றபோதே நரகவேதனைகளும் கெடுமென்று சொல்லிற்றாகத் தேறாதோ? *கூற்றின் தமர்களுங் குறுககில்லாரென்று தனிப்படச் சொல்ல வேணுமோவென்று சங்கை தோன்றும்; பொதுவாகச் சொல்லுமதில் சேர்ந்தவற்றையும் தனிப்படச் சொல்லுவதானது ஒரு விசேஷத்தைக் காட்டி நிற்கும்; மிகக் கொடிய நரகவேதனைகளை அனுபவித்தே போக்கவேணுமென்று நினைக்கவேண்டா; கேசவா வென்ற வளவிலே அவையும் கெடுமென்றதாயிற்று. ***நரகே பச்யமாநஸ்து யமேந பரிபாஷித: கிம் த்வயா நார்ச்சிதோ தேவ: கேசவ: க்லேச நாசந:*** என்ற ப்ரமாண வசனத்தை யடியொற்றி இரண்டாமடி அவதரித்ததென்க. நரகவேதனைகளை யனுபவிக்க அங்கே சென்று யமபடர்களால் பசனம் பண்ணப்படும்போது யமன் கேட்கிறானும் 'ஸமஸ்த க்லேசங்களையும் நாசஞ்செய்யவல்ல கேசவனை நீ அர்ச்சிக்கவில்லையோ?' என்று. அதனால் கேசவனை அர்ச்சித்தவர்களுக்கு நரகவேதனை நேராதென்பது காட்டப்பட்டதாம். கேசவநாமத்தை ஸங்கீர்த்தனம் பண்ணுவதும் கேசவனை அர்ச்சித்ததாகுமென்று ஆழ்வார் திருவுள்ளம்.

பின்னடிகளால் திருவனந்தபுரத்தின் பரமபோக்யதையைத் தெரிவித்து அத்திருப்பதியிலே சென்றுபுக நியமித்தருளுகிறார். முன்னடிகளிலே சொல்லப்பட்ட அதிகாரிகளுக்கு ப்ராப்யஸ்தானம் திருவனந்தபுரமென்றதாயிற்று. எம்பெருமானது படுக்கையா யமைந்த திருவனந்தாழ்வானுக்கு விடமுடைமையை ஒரு சிறப்பாகச் சொல்லவேணுமோவென்னில்; *ஆங்காரவாரமதுகேட்டு அழலுமிழும் பூங்காரரவு* என்ற திருமழிசைப் பிரான்பாசுரத்தின் படியே அஸ்தாநே கலங்கி [விரோதிவர்க்கங்கள் எம்பெருமானுக்குத் தீங்குசெய்ய நெருங்கி வந்ததாக ப்ரமித்து] விஷாக்னியைக் கக்குகை பரிவின் மிகுதியைக் காட்டுமதாகையாலே சொல்லிற்றென்க. (1)

**இன்றுபோய்ப்புகுதிராகில் எழுமையுமேதம்சாரா***
**குன்றுநேர்மாடமாடே குருந்துசேர்செருந்திபுன்னை***
**மன்றலர்பொழில் அனந்தபுரநகர்மாயன்நாமம்***
**ஒன்றுமோராயிரமாம் உள்ளுவார்க்குஉம்பரூரே.** (2)

| | | | |
|---|---|---|---|
| குன்று நேர் மாடம் மாடே | மலைபோன்ற மாடங்களினருகே | எழுமையும் ஏதம் சாரா | ஏழேழ்பிறப்பும் ஸம்ஸாரதோஷம் தட்டாது; |
| குருந்து சேர் செருந்தி புன்னை | குருந்த மரங்களோடு சேர்ந்த சுரபுன்னை மரங்களும் புன்னைமரங்களும் | மாயன் நாமம் | அத்திருப்பதியெம்பெருமானுடைய திருநாமம் |
| மன்று அலர் பொழில் அனந்தபுரம் நகர் | மன்றிலே அலரும்படியான சோலைகளையுடைய திருவனந்தபுரத்தை | ஒன்றும் | ஏதேனுமொன்றாகிலும் |
| | | ஓர் ஆயிரம் ஆம் | ஒன்றே ஆயிரமாகிக் காரியஞ்செய்யும் பெருமையுடையது; |
| இன்று போய் புகுதிராகில் | இன்றே சென்றடைவீர்களாகில் | உள்ளுவார்க்கு | இத்தையநுஸந்திப்பார்க்கு |
| | | உம்பர் ஊரே | அத்திருவனந்தபுரந்தானே பரமபதமாயிருக்கும். |

***—திருவனந்தபுரத் தெம்பெருமானுடைய திருநாமமொன்றே ஸஹஸ்ரமுகமான ரக்ஷையைப் பண்ணுமென்கிறார். உலகில் கெட்டகாரியங்களைச் செய்யநினைப்பவன் ஒரு கணப்பொழுதும் தாமதியாமல் உடனே செய்து முடிப்பதும், அவனே நல்லகாரியமொன்றைச் செய்ய நினைத்தால், பார்ப்போம்பார்ப்போமென்று தாமதித்தே நிற்பதும் இயல்பாதலால் "அனந்தபுரநகர் புகுதும் இன்றே" என்று கீழ்ப்பாட்டில் சொல்லியிருந்தும் மீண்டும் "இன்று போய்ப் புகுதிராகில்" என்று விரைவுறுத்துகின்றார். போவோமென்று விருப்பமுண்டான வின்றே போய்ப் புகுவீர்களாகில், ஒரு காலமும் பொல்லாங்குவந்து கிட்டாது. "நம்மன் போலே வீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ள பாவமெல்லாம் சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே" என்றபடியே 'நமக்கு இவ்விடம் ஆச்ரயமல்ல' வென்று தீயவையெல்லாம் தன்னடையே விட்டகலுமென்கை.

திருவனந்தபுரம் சென்று புகத்தான்வேணுமோ? அத்தலத்துப் பெருமானது திருநாமமொன்றைச் சொன்னால் போதுமே; ஒரு திருநாமமே அனேகமுகமாக ரக்ஷகமாம். *ஓராயிரமாயுலகேழளிக்கும் பேராயிரங்கொண்டதோர் பீடுடையன்* என்று கீழுமருளிச் செய்தாரே. "அனந்தபுரநகர் மாயன்னாமம் முள்ளுவார்க்கு உம்பரூரே" என்றதற்கு இரண்டு வகையாகக் கருத்துரைப்பர்; இத்திருநாமஞ் சொன்னால் திருநாடு கிடைக்குமென்றும் இத்தலமே திருநாடாகு மென்றும்.

இப்பாட்டில் மனோவாக் காயங்களாகின்ற மூன்று உறுப்புகட்கும் தொழில் சொல்லப் பட்டுள்ளமைகாண்க; 'போய்ப் புகுதிர்' என்றதனால் காயிகவ்யாபாரம்; 'மாயன்னாமம்' என்றதனால் வாசிகவ்யாபாரம்; 'உள்ளுவார்க்கு' என்றதனால் மாநஸிகவ்யாபாரம். ... (2)

ஊரும்புட்கொடியுமஃதே உலகெல்லாமுண்டுமிழ்ந்தான்*
சேருந்தண்ணனந்தபுரம் சிக்கெனப்புகுதிராகில்*
தீரும்நோய்வினைகளெல்லாம் திண்ணநாமறியச்சொன்னோம்*
பேருமோராயிரத்துள் ஒன்றுநீர்பேசுமினே. (3)

| | | | |
|---|---|---|---|
| புள் ஊரும் | பெரிய திருவடியை ஊர்தியாகக் கொள்ளுமவனாய் | சிக்கென புகுதிர்கல | திடமான அத்யவஸாயத்துடன் சென்று சேர்வீர்களாகில், |
| கொடியும் | அப்பெரிய திருவடியையே கொடியாகவுமுடையனாய் | நோய் வினைகள் எல்லாம் தீரும் | நோயும் வினைகளுமானவையெல்லாம் தீரும்; |
| உலகு எல்லாம் உண்டு உமிழ்ந்தான் | உலகங்களையெல்லாம் ஒருகால் உண்பதும் மற்றொருகால் உமிழ்வதுஞ் செய்தவனான எம்பெருமான் | நாம் திண்ணம் அறிய சொன்னோம் | (இவ்விஷயத்தை உங்களுக்கு) நாம் திண்ணமாக அறியும்படி தெரிவித்தோம்; |
| சேரும் தண் அனந்தபுரம் | நித்யவாஸஞ்செய்யுமிடமான குளிர்ந்த திருவனந்த புரத்தை | பேரும் ஓர் ஆயிரத்துள் | (அப்பெருமானுடைய) ஸஹஸ்ரநாமங்களுள் |
| | | நீர் ஒன்று பேசுமின் | நீங்கள் ஏதேனுமொரு திருநாமத்தைச் சொல்லுங்கள். |

***—பிரதிபந்தகங்கள் தொலைவதற்கு இன்ன திருநாமமென்று ஒரு நிர்பந்தமில்லை; ஆயிரந்திருநாமங்களுள் ஏதேனுமொரு திருநாமத்தைச் சொல்லவமையும் என்கிறார். **ஊரும் புள் கொடியும்** அஃதே—பெரிய திருவடியை வாஹனமாகக் கொண்டு நடத்துவதும் த்வஜமாகக் கொள்வதுமாயிருப்பன் எம்பெருமான். இங்குப் பெரிய திருவடியைச் சொன்னது திருவனந்தாழ்வான் முதலிய மற்றுமுள்ள நித்ய ஸூரிகளின் பணியும் சொன்னபடி; *சென்றாற் குடையாம் இருந்தால் சிங்காசனமாம், நின்றால் மரவடியாம் நீள்கடலுள், என்றாப் புணை

யாமணி விளக்காம் பூம்பட்டாம் புல்குமணையாம் திருமாற்காவு* என்ற பாசுரத்தின்படியே
திருவனந்தாழ்வான் பக்கலில் பலபல சேஷ வ்ருத்திகளையுங் கொள்வதுண்டே; அதுவும்
இங்குச் சொல்லிற்றாகக் கொள்க. இன்றுபோய்க் கிட்டினவொரு ஸம்ஸாரிக்கு நித்யஸூரி
களின் ஸாம்யாபத்தியைக் கொடுக்கவல்லவன் எம்பெருமான் என்கைக்காக இது சொல்லு
கிறது.

**உலகெல்லா முண்டு உமிழ்ந்தான் சேருந்தண்ணனந்தபுரம்**— 'இப்பெருமான்
ஆபத்ஸகனன்றோ' என்று அநுஸந்தானம் செய்துகொண்டே அப்பெருமானுடைய திருப்
பதியிலே சென்று புகுங்கோளென்கிறார். அப்படிச் சென்று புகுந்தால், புக்கவளவிலேயே
துக்கங்களும் துக்க ஹேதுக்களும் எல்லாம் தீரும்; இது அநுபவஸித்தமாகையாலே
ஸத்யமாய்ச் சொல்லுகிறபடி.

திருவனந்தபுரம் சென்று புகுந்து நாங்கள் செய்ய வேண்டுவதென்? என்ன;
**[பேருமோராயிரத்து ளொன்று நீர் பேசுமினே]** * ஓராயிரமா யுலகேழளிக்கும் பேராயிரங்
கொண்டதோர் பீடுடையன் * என்று முன்னமே சொன்னோமே; ஒரு திருநாமந்தானே
ஆயிரமுகமாக ரக்ஷிக்கும்படியான ஆயிரந்திருநாமங்களை யுடையவனன்றோ அவன்; அவற்றுள்
வாய்க்கு வந்ததொரு திருநாமத்தைச் சொல்லுங்கோ ளென்கிறார். ... (3)

**பேசுமின்கூசமின்றிப் பெரியநீர்வேலைசூழ்ந்து***
**வாசமேகமழுஞ்சோலை வயலணியனந்தபுரம்***
**நேசஞ்செய்துறைகின்றானை நெறிமையால்மலர்கள்தூவி***
**பூசனைசெய்கின்றார்கள் புண்ணியம்செய்தவாறே.** (4)

| | | | |
|---|---|---|---|
| பெரிய நீர் வேலை சூழ்ந்து | பெரிய நீராகிய கடலாலே சூழப்பட்டு | மலர்கள் தூவி | புஷ்பங்களைப்பணிமாறி |
| வாசமே கமழும் சோலை வயல் அணி | பரிமளமே நிறைந்த சோலைகளையும் வயல்களையும் அலங்காரமாகக் கொண்ட | பூசனை செய்கின்றார்கள் | ஆராதிக்குமவர்கள் |
| அனந்தபுரம் | திருவனந்த புரத்திலே | புண்ணியம் செய்த ஆறு ஏ | புண்ணியம் செய்த விதம் என்னே! |
| நேசம் செய்து உறைகின்றானை | அன்பு பூண்டு நித்யவாஸம் பண்ணும் பெருமானை | கூசம் இன்றி பேசுமின் | (அந்த பாக்ய விசேஷத்தை நீங்கள்) கூசாமல் எடுத்துச் சொல்லுங்கள். |
| நெறிமையால் | முறைதவறாது | | |

***—திருவனந்தபுரத்திலே சென்று அடிமைசெய்வார் என்ன பாக்கியம் செய்த
வர்களோவென்றுகொண்டாடுகிறார்; இங்ஙனே கொண்டாடுவது ஆச்ரயிப்பார்க்குருசியுண்டா
வதற்காக வென்ப. **பேசுமின் கூசமின்றி**—இதற்கு இரண்டிடத்தில் அந்வயங்கொள்ளலாம்;
அனந்தபுரம் நேசஞ் செய்துறைகின்றானைப் பேசுமின் என்றோ, உறைகின்றானைப்
பூசனை செய்கின்றார்கள் புண்ணியஞ்செய்தவாறு பேசுமின்' என்றோ அந்வயிக்கலாம்.
அனந்தபுரம் எப்படிப் பட்டதென்னில், **பெரிய நீர் வேலை சூழ்ந்து வாசமேகமழுஞ் சோலை**-
கடலில் நாற்றம் மேலிடாதபடி சோலையிற் பரிமளமே விஞ்சியிருக்கப்பெற்றதாம். அத்தகைய
திருப்பதியில் **நேசஞ்செய்து உறைகின்றானை**—பரமபதத்திலுங் காட்டில் சிறப்பாக ப்ரீதி
பண்ணி ஆர்த்தரக்ஷணத்திற்குப் பாங்கான தேசமென்று விரும்பி வர்த்தியாநின்றான். அவனை,
**நெறிமையால் மலர்கள் தூவிப்பூசனை செய்கின்றார்கள் புண்ணியம் செய்தவாறே**—*சூட்டு
நன் மாலைகள் தூயன வேந்தி விண்ணோர்கள் நன்னீராட்டி அந்தூபந்தரா நிற்கவே யங்கு
* என்கிறபடியே திருநாட்டில் செய்யும் பூசனை ஒரு பூஜையோ? இந்தளத்தில் தாமரை பூத் (4)
தாற்போலே இங்குள்ளார் செய்யும் பூசனையன்றோ புகழத்தக்கதாவது.

புண்ணியம்செய்து நல்லபுனலொடுமலர்கள்தூவி*
எண்ணுமினெந்தைநாமம் இப்பிறப்பறுக்குமப்பால்*
திண்ணநாமறியச்சொன்னோம் செறிபொழிலனந்தபுரத்து*
அண்ணலார்கமலபாதம் அணுகுவாரமரராவார். (5)

| | | | |
|---|---|---|---|
| புண்ணியம் செய்து நல்ல புனலொடு மலர்கள் தூவி | பக்தி கொண்டு நல்ல தீர்த்தத்தையும் புஷ்பங்களையும் பணிமாறி | செறி பொழில் அனந்தபுரத்து | செறிந்த சோலைகளையுடைய திருவனந்த புரத்திலே |
| எந்தை நாமம் எண்ணுமின் | எம்பெருமானது திருநாமங்களைச் சிந்தனை செய்யுங்கள்; | அண்ணலார் | ஸ்வாமியினுடைய |
| இப்பிறப்பு அறுக்கும் | (அப்படி செய்யுமளவில்) இக்கொடிய ஸம்ஸாரத்தைத் தொலைத்தருள்வன்; | கமலம் பாதம் | திருவடித்தாமரைகளை |
| அப்பால் | மேலும், | அணுகுவார் | கிட்டுமவர்கள் |
| | | அமரர் ஆவார் | நித்யஸூரிகளோடொப்பர்; |
| | | நாம் திண்ணம் அறிய சொன்னோம் | (இதனை) நாம் திடமாகத் தெரிவித்தோம். |

***திருவனந்தபுரத்தெம் பெருமானது திருவடிகளைக் கிட்டுமவர்கள் நித்யஸூரிதுல்யராவர்களென்பது திண்ணம்; ஆகவே அங்கு நீங்களும் ஆச்ரயிக்கப் பாருங்களென்றுரைக்கிறார். **புண்ணியம் செய்து**—புண்யமென்கிற ஸாமாந்ய சப்தமானது இங்கு விசேஷத்திலே பர்யவஸித்து பக்தியைச் சொல்லுகிறது. அல்லது, 'கார்யே காரணோபசாரம்' என்னும் வழக்கின்படி; பக்தி புண்யபலமாகையாலே காரணமான புண்யத்தைச் சொன்னதும் அதன் பலனான பக்தியைச் சொல்லுகிறதென்று இவ்வழியாலும் பொருள் கொள்ளலாம். **நல்ல புனலொடு மலர்கள் தூவி**—நல்ல புனலென்று கங்காதீர்த்தத்தையும் காவேரீதீர்த்தத்தையும் கொண்டுவரச் சொல்லுகிறதன்று; நல்லபுனலென்றது சுத்தஜலம் என்றபடியாய், 'சுத்த கங்கை' என்றால் யமுனை ஸரஸ்வதி முதலிய இதர நதிகள் கலசாத வெறுங்கங்கையென்று பொருளாவது போல, ஏலம் லவங்கம் முதலிய இதர வஸ்துக்கள் சேராத வெறும் தீர்த்தம் என்றவாறும். இதனால் ஆராதனையில் அருமையின்மை தோற்றும். கீதையில் *பத்ரம் புஷ்பம் பலம் **தோயம்** *என்று வெறும் தீர்த்தத்தையேயன்றோ அவன்றானும் விரும்பிற்று. **புனலொடு** என்றவிடத்து, ஒடு—உம்மைப் பொருளது; புனலையும் மலர்களையும் பணிமாறியென்றபடி. **எந்தை நாமம் எண்ணுமின்**—இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி; "இடறினவன் அம்மே யென்னுமாபோலே திருநாமம் சொல்லும்போது ஒரு அதிகாரிஸம்பத்தி தேடவேண்டா. ஜீயர் பட்டரை 'திருநாமம் சொல்லும்போது ப்ரயதனாய்க்கொண்டு சொல்லவேணுமோ? என்று கேட்க; 'கங்கையிலே முழுகப் போமவனுக்கு வேறொரு உவர்க்குழியிலே முழுகிப்போக வேணுமோ? மேலுண்டான நன்மையைத் தருகிற விது அதிகாரிஸம்பத்தியையும் தரமாட்டாதோ?' என்றருளிச் செய்தாராம். திருநாமம் சொல்லுகைக்கு ருசியேயாயிற்று வேண்டுவது; அவர்களே அதிகாரிகள்."

எந்தை நாமம் எண்ணினால் அதனால் விளையும் பயன் சொல்லுகிறது **இப்பிறப்பறுக்கும்** என்று. *தீண்டாவழும்புஞ் செந்நீரும் சீயும் நரம்பும் செறிதசையும் வேண்டா நாற்றமிகு முடல் *என்று பரமஹேயமாகச் சொல்லப்பட்ட தேஹஸம்பந்தத்தையறுக்கும். **அப்பால்** என்றதற்கு **அமரராவார்** என்றதில் அந்வயம். ... ... ... (5)

அமரராய்த்திரிகின்றார்கட்கு ஆதிசேரனந்தபுரத்து*
அமரர்கோனர்ச்சிக்கின்று அங்ககப்பணிசெய்வர்விண்ணோர்*
நமர்களோசொல்லக்கேண்மின் நாமும்போய்நணுகவேண்டும்*
குமரனார்தாதைதுன்பம் துடைத்தகோவிந்தனாரே. (6)

| | | | |
|---|---|---|---|
| குமரனார் தாதை துன்பம் துடைத்த கோவிந்தனார் | முருகனது தந்தையான சிவபிரானது துன்பத்தைப் போக்கியருளின பெருமானாய், | அகப்பணி செய்வர் விண்ணோர் | அந்தரங்கமான பணி விடைகளைச் செய்யுமவர்கள் நித்ய முக்தர்களாயிருப்பார்; |
| அமரர் ஆய் திரிகின்றார்கட்கு ஆதி | அமரரென்று பேர் பெற்றுத் திரிகின்றவர்களுக்கும் தலைவனாயிருக்குமவன் | நமர்களோ | நம்முடையவர்களே! |
| | | சொல்ல கேண்மின் | நாம் சொல்வதைக் கேளுங்கோள்; |
| சேர் அனந்தபுரத்து | நித்யவாஸஞ் செய்கிற திருவனந்தபுரத்திலே | நாமும் போய் நணுக வேண்டும் | அவர்களோடு நாமும் கூடிக் கைங்கரியம் பண்ண வேண்டும். |
| அமரர் கோன் அர்சிக்கின்று அங்கு | ஸ்ரீ ஸேனைபதியாழ்வான் ஆராதிக்க அதற்குப் பொருத்தமாக | | |

***—*அயர்வறுமமரர்களும் வந்து அடிமை செய்கிறது திருவனந்தபுரத்திலேயாதலால் திருநாட்டிலுங்காட்டில் பரமப்ராப்யம் திருவனந்தபுரம்; நாமும் இங்கே சென்று அடிமை செய்யத்தகு மென்கிறார். ஆசார்ய ஹ்ருதயத்தில்—(183.) "ஸைஸந்யபுத்ர சிஷ்ய ஸாத்யஸித்த பூஸுரார்ச்சநத்துக்கு முகநாபி பாதங்களை த்வாரத்ரயத்தாலே காட்டும் ஸாம்யம் அநந்த சயனத்திலே வ்யக்தம்" என்றருளிச் செய்த சூர்ணை பெரும்பாலும் இப்பாசுரத்தையே உட்கொண்டதாகும்; "அமரராய்த் திரிகின்றார்கட்கு ஆதி" என்கையாலே பிரமன் முதலான தேவர்கள் வந்து பணிகின்றமை தெரிவிக்கப்படுகிறது. *அமரர் கோன் அர்ச்சிக்கின்று அங்ககப்பணி செய்வர் விண்ணோர்* என்கையாலே நித்ய ஸூரிகளில் தலைவரான ஸேநாபதியாழ்வான் ஸபரிவாரராய் வந்து அர்ச்சிக்கின்றமை தெரிவிக்கப்படுகிறது. *நமர்களோ! சொல்லக்கேண்மின் நாமும் போய் நணுகவேண்டும்* என்கையாலே நம் போலியர்களும் சென்று பணியத் தகுந்தமை தெரிவிக்கப்பட்டது. ஆக இங்ஙனே மூவகைப்பட்ட அதிகாரிகளும் ஆச்ரயிப்பதற்குப் பாங்காக இத்தலத்தெம்பெருமான் மூன்றுத்வாரங்களை அமைத்துக் கொண்டு ஸேவைஸாதியாநின்றான்; முக்யர்களான நித்யஸூரிகளுக்கு ஸேவைஸாதிக்க முகத்வாரம்; திருநாபியினின்று தோன்றின பிரமன் முதலியோர்க்கு ஸேவைஸாதிக்க நாபித்வாரம்; திருவடியல்லது புகலற்ற நம்போல்வார்க்கு ஸேவைஸாதிக்க ஸ்ரீபாதத்வாரம்.

**குமரனார்தாதை துன்பந்துடைத்த கோவிந்தனாரே**—ருத்ராதிகளுக்கு துக்கநிவர்த்தகனாயிருக்கும்; பசுக்களுக்கும் இடையர்க்கும் கையாளாயிருக்கும்; துர்மானிகளுக்கும் துக்க நிவ்ருத்தியைப்பண்ணிக் கொடுக்குமவன் அபிமாந சூந்யரான நமக்குத் தன்னைக் கிட்டுகையில் அருமைப் படுத்துவனோ ? என்பது கருத்து. ... ... (6)

**துடைத்தகோவிந்தனாரே உலகுயிர்தேவும்மற்றும்***
**படைத்தவெம்பரமமூர்த்தி பாம்பணைப்பள்ளிகொண்டான்***
**மடைத்தலைவாளைபாயும் வயலணியனந்தபுரம்***
**கடைத்தலைசீய்க்கப்பெற்றால் கடுவினைகளையலாமே.** (7)

| | | | |
|---|---|---|---|
| உலகு உயிர் தேவும் மற்றும் | உலகங்களையும் (மநுஷ்யாதி) ப்ராணிகளையும் தேவஜாதிகளையும் மற்றும் மஹதாதி பதார்த்தங்களையும் | பாம்பு அணை பள்ளி கொண்டான் | சேஷசயனத்திலே பள்ளி கொண்டருளா நின்றான் ; (அவ்விடத்தே சென்று) |
| துடைத்த கோவிந்தனாரே | ஒன்றொழியாமல் ஸம்ஹரித்த பெருமான் தானே | | |
| படைத்த எம்பரம மூர்த்தி | (அவற்றை யெல்லாம் மறுபடியும்) படைத்தருளின பரம புருஷன் ; (அப் பெருமான்) | கடைத்தலை சீய்க்க பெற்றால் | திருவாசல் விளக்குதல் முதலிய கைங்கரியங்களைப் பண்ணப் பெற்றால் |
| மடை தலை வாளை பாயும் வயல் அணி அனந்தபுரம் | நீர் நிலங்களிலே வாளை மீன்கள் களித்துப் பாய நின்ற வயல்களை அலங்காரமாகவுடைய திருவனந்தபுரத்திலே | கடு வினைகளைய லாம் | கொடிய பாவங்களைப் போக்கப் பெறலாம். |

***—ஸர்வேச்வரன் திருக்கண் வளர்ந்தருளுகிற திருவனந்தபுரத்தே சென்று அடிமை செய்யப்பெற்றால் எல்லாத் துக்கங்களும் தீருமென்கிறார். உலகங்களைப் படைப்பது முன்னும் துடைப்பது பின்னுமாகை ப்ராப்தமாயிருக்க, 'துடைத்த கோவிந்தனாரே' என்று ஸம்ஹாரத்தை முன்னே சொல்லி 'படைத்த எம்பரமமூர்த்தி' என்று பின்னை ஸ்ருஷ்டியைச் சொல்லியிருப்பதேன்? என்று சங்கிக்கவேண்டா. வேதாந்தங்களில் ஸம்ஹாரந்தான் முந்துற முன்னம் சொல்லப்படுவது. ஸம்ஸாரம் அநாதியாகையாலே ஆதிஸ்ருஷ்டி காலம் தெரியாது. **"ஸூர்யா சந்த்ரமஸௌ தாதா யதாபூர்வ மகல்பயத்"** என்ற உபநிஷத்தில் **யதாபூர்வ** மென்றது காண்க.

**உலகு உயிர் தேவும் மற்றும் படைத்த எம்பரமமூர்த்தி**—லோகத்தையும் தேவர்களையும் மற்றுமுண்டான ஆத்மாக்களையு முண்டாக்கினவன். இங்கே ஈடு—; "இவை அதிப்ரவ்ருத்தமானவன்று ஸம்ஹரித்து, பின்னை புருஷார்த்தோபயோகியான கரணங்களைக் கொடுத்து ரக்ஷித்த."

**எம்பரமமூர்த்தி**—என்போல்வார்க்கு விதேயனாயிருக்குந் தன்மையையே தனக்குப் பெருமையாகக் கொண்ட ஸ்வாமி என்றபடி. **பாம்பணைப் பள்ளிகொண்டான்**—கீழே "உலகுயிர் தேவும் மற்றும்படைத்த" என்று நின்றது; அங்ஙனம் படைக்கப்பட்ட உலகங்களை ரக்ஷிப்பதற்கான உபாயத்தைச் சிந்தனை செய்வதற்காகத் திருவனந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகிறபடி. அப்படிக் கண்வளர்ந்தருளுமவனுடைய அனந்தபுரம் என்று அந்வயம். அத்திருப்பதியிலே, **கடைத்தலை சீய்க்கப் பெற்றால்**—திருவாசலிலே திருவலகு திருப்பணி செய்யப்பெற்றால்; அதாவது பெருக்கி மெழுகிக் கோலமிடுகை. கீழே(9-2-1.) "பண்டை நாளாலே என்கிற பாட்டிலும் "உன் கோயில் சீய்த்து" என்றாரே; இப்படிப்பட்ட அடிமையைச் செய்யப்பெற்றால், **கடுவினைகளையலாம்**—அடிமை செய்யப்பெறுமையாலுண்டான கிலேசமெல்லாம் தொலையுமென்றபடி. (7)

**கடுவினைகளையலாகும் காமனைப்பயந்தகாளை***
**இடவகைகொண்டதென்பர் எழிலணியனந்தபுரம்***
**படமுடையரவில்பள்ளி பயின்றவன்பாதங்காண***
**நடமினோநமர்களுள்ளீர் நாமுமக்கறியச்சொன்னோம்.** (8)

| | | | |
|---|---|---|---|
| எழில் அணி அனந்தபுரம் | அழகணிந்த திருவனந்தபுரத் திருப்பதி | படம் உடை அரவில் பள்ளி பயின்றவன்பாதம்காண | படங்களையுடைய திருவனந்தாழ்வான் மீது பள்ளிகொண்டருளும் அனந்தபத்மநாபனுடைய திருவடிகளை ஸேவிக்க |
| காமனை பயந்த காளை இடவகை கொண்டது என்பர் | மன்மதனுக்கும் உத்பாதகனை பெருமான் தனக்கு இருப்பிடமாகக் கொண்டதலமென்பர்கள் ; | நடமின் | நடவுங்கள் ; |
| நமர்கள் உள்ளீர் | நம்மோடொரு ஸம்பந்தம் பெற்றவர்களாயிருப்பவர்களே ! | நாம் உமக்கு அறிய சொன்னோம் | (இதனை) நாம் உமக்குத் தெரிவித்தோம்; (இங்ஙனே செய்தால்) |
| | | கடு வினை களையல் ஆகும் | கொடிய பாவங்களையெல்லாம் போக்கப் பெறலாம். |

***—திருவனந்தபுரத்தில் திருக்கண் வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரனுடைய திருவடிகளைக் காண நடவுங்கோளென்று ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நியமித்தருளுகிறார். **கடுவினைகளையலாகு** மென்று முந்துற முன்னமே பலனைச் சொல்லுகிறார் ப்ரரோசனார்த்தமாக. எழிலணியனந்தபுரத்தில் படமுடையரவில் பள்ளிபயின்றவன் பாதங்காண நடந்தால் [அந்த உத்யோகத்தளவிலே] **கடுவினைகளையலாகும்**—நம்மால் போக்கவரிய பாபங்களையெல்லாம் போக்கலாம். **காமனைப் பயந்தகாளை** யென்று வடிவழகிலேற்றஞ் சொல்லுகிறது. **காளை**—நித்யயுவா.

பின்னடிகளில் அநுஸந்திக்குமோர் ஐதிஹ்யமுண்டு; ஆளவந்தார்க்கு ஸகலார்த்தங்களையும் உபதேசித்தருளின மணக்கால்நம்பி, யோகரஹஸ்யம் மாத்திரம் குருகை காவலப்பனிடத்திலே பெறக்கடவீர் என்று ஸாதித்திருந்தபடியாலே ஒருகால் அதை நினைத்துக் குருகைகாவலப்பனிடம் விடை கொண்டு அடியேனுக்கு யோகரஹஸ்யத்தை யருளிச்செய்ய வேணுமென்று வேண்ட, அவரும் ஒரு நாளிட்டுக் கொடுத்து அந்த நாளிலே வந்து உபதேசம் பெறும்படி சொல்லிப் போகவிட, ஆளவந்தாரும் நம்பெருமாள் ஸன்னிதிக் கெழுந்தருள, அந்த ஸமயம் திருவத்யயநோத்ஸவ ஸமயமாக இருக்கையில் அரையர்கோஷ்டியிலே அந்வயித்திருக்க, *கடுவினைகளையலாகு மென்கிற இப்பாட்டளவிலே *எழிலணியனந்தபுரம் படமுடையரவிற் பள்ளி பயின்றவன் பாதங்காண நடமினோ நமர்களுள்ளீர் நாமுமக்கறியச் சொன்னோம்* என்பதை அரையர் ஆளவந்தார் திருமுகத்தைப் பார்த்து ஊன்றியுறுத்திப் பாட, ஆளவந்தாரும் இதைக்கேட்டு 'ஆழ்வாருடைய தமர்களிலே நாம் அந்வயிக்க வேண்டில் திருவனந்தபுரஞ் சென்று ஸேவித்துவர ப்ராப்தம்' என்று சொல்லிக்கொண்டே அப்போதே நம்பெருமாளிடம் விடைபெற்றுப் பயணமாகித் திருவனந்தபுரத்திற் கெழுந்தருளி அனந்த பத்மநாபனை மங்களாசாஸனம் செய்து அங்கே வாழ்ந்து போருகையில், முன்பு குருகை காவலப்பன் யோகரஹஸ்யோபதேசத்திற்காக நாளிட்டுக் கொடுத்திருந்த சிறுமுறியை எடுத்துப் பார்க்க நேர்ந்து அதுவே நாளாக இருந்தபடியாலே துணுக்கென்று அலமந்து 'ஒரு புஷ்பக விமானம் பெற்றிலோமே' என்று சோகித் தெழுந்தருளியிருந்தார்.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி;—"திருவத்யயனம் பாடாநிற்க இத்தைக் கேட்டருளி ஆளவந்தார் 'நமக்கு ஆழ்வாரோடே ஒரு ஸம்பந்த முண்டாகவேணும்' என்று அப்போதே ஸ்ரீ பாதத்தை யுடையாரைக் கூட்டிக்கொண்டு எழுந்தருளினார்," ... (8)

நாமுமக்கறியச்சொன்ன நாள்களும் நணியவான*
சேமநன்குடைத்துக்கண்டீர் செறிபொழிலனந்தபுரம்*
தூமநல்விரைமலர்கள் துவளறவாய்ந்துகொண்டு*
வாமனனடிக்கென்றேத்த மாய்ந்தறும்வினைகள்தானே. (9)

| | | | |
|---|---|---|---|
| நாம் உமக்கு அறிய சொன்ன நாள்களும் நணிய ஆன | (முன்பு) நாம் உங்களுக்குத் தெரிவித்த சரீராவஸான நாளும் ஸமீபித்தது; | தூமம் நல் விரை மலர்கள் | (ஆன பின்பு அவ்விடத்திற்கு) தூபத்தையும் நறுமண மலர்களையும் |
| செறி பொழில் அனந்தபுரம் சேமம் நன்கு உடைத்து | செறிந்த பொழில்களையுடைய (திருவனந்த புரமானது நமக்கு நன்றாக க்ஷேமம் செய்ய வல்லது; | துவள் அற ஆய்ந்துகொண்டு | பரிசுத்தமாகச் சேகரித்துக் கொண்டு சென்று |
| | | வாமனன் அடிக்கு என்று ஏத்த | எம்பெருமானுடைய திருவடிகளுக்கென்று ஸங்கல்பித்துத் துதிக்க, |
| கண்டீர் | இதை அனுபவத்திலே காணலாமன்றோ; | வினைகள் தானே மாய்ந்து அறும் | பாவங்கள் தன்னடையே தொலைந்துபோம். |

***உமக்கு நாம் அறியச்சொன்ன நாள்களும் நணியவான—ஆழ்வார் கீழே ஒன்பதாம்பத்தில் "நாளேலறியேன்" என்ற பாசுரத்தில் ப்ராப்திகாலம் தெரியவில்லையேயென்று தடுமாறினவர், பிறகு மரணமானால் வைகுந்தங்கொடுக்கும் பிரான் *என்று ஒருநாள் தெரிந்ததாகச் சொன்னார்: அந்த நாளும் இப்போது ஸமீபித்து விட்டதனால் "நாமேறப் பெறுகின்றேன்" என்றிருக்கிற நான் சரம ஸந்தேசமாக உங்களுக்குச் சொல்லுகின்றேன் கேளுங்கள்; நான் பரமபதம் சென்றுவிட்டால் பிறகு உங்களுக்குச் சொல்லுவாரில்லை;* சொன்னால் விரோத மிதுவாகிலும் சொல்லுவன் கேண்மினோ*. என்று சொல்லுகிறேன் நானொருவனேயாயிற்று உங்களுக்கு; ஆகவே கடைசியாக நான் சொல்லும் வார்த்தையைச் செவிகொடுத்துக்

கேளுங்கள் என்பது கருத்து. இவ்விடத்து ஈட்டில் * தஸ்மிந் அஸ்மிதே பீஷ்மே கௌரவாணும் துரந்தரே, ஜ்ஞாநாநி அல்பீபவிஷ்யந்தி தஸ்ம் த்வாம் சோதயாம்யஹம்* என்கிற மஹாபாரதச்லோகம் இன்சுவைமிக வியாக்யானம் செய்யப்பட்டுள்ளது. பீஷ்மாசார்யர் முமூர்ஷுவாயிருக்கிற காலத்தில் தருமபுத்திரரை நோக்கிக் கண்ணபிரான் கூறுவது இது. பீஷ்மராகிற ஸூர்யன் அஸ்தமித்துவிட்டால் பிறகு சொல்லுவாரார்? கேட்பாரார்? சிலர் சொன்னாலும் அச்சொல்லுக்கு மதிப்புத்தானுண்டோ? ஆகவே அவரிருக்ும்போதே அவர் பக்கலிலே சென்று தருமஸூக்ஷ்மங்களைக் கேட்டுக்கொள் என்று தருமபுத்திரரைத் தூண்டினன் கண்ணபிரான். இங்கு பீஷ்மர்ஸ்தானத்திலே ஆழ்வாரிருந்து ஸம்ஸாரிகளைத் தாமே யழைக்கிறார் நல்லது கேட்க.

மேல் மூன்றடிகளாலே, விவக்ஷிதமான விஷயத்தை யருளிச்செய்கிறார்—[**செறி பொழில் அனந்தபுரம் சேமம் நன்குடைத்துக் கண்டீர்**] பரமபோக்யமான திருவனந்தபுரமானது நல்ல க்ஷேமத்தை விளைக்குமதான தலம். நரகயாதனை முதலாக மேல்வருமனர்த்தங்களையெல்லாம் போக்கி ரக்ஷிக்கவல்ல திவ்யதேசமென்கை. அப்படிப்பட்ட தலத்திலே, **தூமம் நல்விரை மலர்கள்**—'நல்விரை' என்பது நடுநிலைத் தீபகமாய் முன்னும் பின்னும் அந்வயிக்கும்; நல்ல பரிமளத்தையுடைய தூபத்தையும் அப்படிப்பட்ட மலர்களையும் கொண்டு ஏத்த, வினைகள் தானே மாய்ந்தறும். (9)

**மாய்ந்தறும்வினைகள்தானே மாதவாவென்ன* நாளும்***
**ஏய்ந்தபொன்மதிள் அனந்தபுரநகரெந்தைக்கென்று***
**சாந்தொடுவிளக்கம்தூபம் தாமரைமலர்கள்நல்ல***
**ஆய்ந்துகொண்டேத்தவல்லார் அந்தமில்புகழினரே.** (10)

| | | | |
|---|---|---|---|
| மாதவா என்ன | திருமாலே யென்று சொன்ன வளவிலே | நல்ல சாந்தொடு விளக்கம் தூபம் | நல்ல சந்தன தீப தூபங்களையும் |
| வினைகள் தானே மாய்ந்து அறும் | பாவங்கள் தானே தொலைந்தொழியும்; | தாமரை மலர்கள் | தாமரைப் பூக்களையும் |
| ஏய்ந்த பொன் மதிள் அனந்தபுரம் நகர் எந்தைக்கு என்று | பொருந்தின பொன்மதிளையுடைத்தான திருவனந்தபுரநாதனுக்கென்று ஸங்கல்பித்து | ஆய்ந்து கொண்டு | சேகரித்துக்கொண்டு சென்று |
| | | நாளும்ஏத்த வல்லார் | நாடோறும் துதி செய்யவல்ல பக்தர்கள் |
| | | என்றும் அந்தம் இல் புகழினர் | எந்நாளும் அழிவில்லாத புகழையுடையராவர், |

***-[**மாதவா வென்ன வினைகள் தானே மாய்ந்தறும்**] மாதாபிதாக்களின் பேரைச் சொல்ல, அல்லது மாதாபிதாக்களின் சேர்த்தியிலீடுபட்டுப்பேச, அநாதிகாலமாக ஆர்ஜித்த துக்கங்கள் தானே மாய்ந்துபோம். அம்மா! அப்பா! என்ன உச்சி குளிருமென்கிறார் [**நாளுமேய்ந்த** இத்யாதி.] தகுதியான பொன்மதிளையுடைய திருவனந்தபுரத்திலே ஸேவை ஸாதிக்கின்ற ஸ்வாமிக்கென்று மநோரதித்துத் திருவாராதனைக்குரிய உபகரணங்களெல்லாவற்றையுங்கொண்டு பணிந்து ஏத்துமவர்கள், **அந்தமில் புகழினர்** -நித்யஸூரிகளிற் காட்டிலும் மேம்பட்டவர்களென்கிற புகழைப்பெறுவர் என்றபடி. நித்ய ஸூரிகள் வாழுமிடம் இருள் தருமா ஞாலமன்று; பகவதநுபவத்திற்கு எவ்வகையான இடையூறும் ப்ரஸக்தமாகாத நலமந்தமில்லதோர் நாடாகையாலே அங்கிருந்து கொண்டு அவர்கள் பகவானை யநுபவிப்பது வியப்பன்று; உண்டியே உடையே உகந்தோடு மிம்மண்டலம் பகவதநுபவத்திற்கு நேர் விரோதி யாதலால் அப்படிப்பட்ட இவ்விருள் தருமா ஞாலத்திலிருந்துகொண்டு திவ்ய தேசாநுபவம் செய்யப்பெறுவார் சிலருண்டாகில், அவர்கள் விண்ணுளாரினுஞ் சீரியர் என்னத் தட்டுண்டோ! (10)

அந்தமில்புகழ் அனந்தபுரநகராதின்னை*
கொந்தலர்பொழில் குருகூர்மாறன்சொல்லாயிரத்துள்*
ஐந்திறோடைந்தும்வல்லார் அணைவர்போயமருலகில்*
பைந்தொடிமடந்தையர்தம் வேய்மருதோளிணையே. (11)

| | | | |
|---|---|---|---|
| அந்தம் இல் புகழ் | அறிவில்லாத புகழையுடைய னை | ஐந்திறோடு ஐந்தும் வல்லார் | இப்பத்துப் பாசுரங்களையும் ஓதவல்லவர்கள் |
| அனந்தபுரம் நகர் ஆதி தன்னை | திருவனந்தபுரமென்னும் திவ்ய தேசத்திலே யெழுந்தருளியிருக்கிற ஆதி புருஷனைக்குறித்து, | போய் | (சரீராவஸானத்தில் அர்ச்சிராதிமார்க்கத்தாலே) சென்று |
| | | அமர் உலகில் | நித்ய விபூதியில் |
| கொந்து அலர் பொழில் குருகூர் மாறன் சொல் | பூங்கொத்துக்கள் அலருகிற பொழில் சூழ்ந்த திரு நகரிக்குத் தலைவரான ஆழ்வார் அருளிச் செய்த | பை தொடி மடந்தையர் தம் | அழகிய ஹஸ்த பூஷணங்களணிந்த (பரமபதத்து) திவ்யாப்ஸரஸ்ஸுக்களினுடைய |
| | | வேய் மரு தோள் இணை | வேய் போன்ற தோளிணைகளால் நேரும் ஸத்காரங்களை |
| ஆயிரத்துள் | ஆயிரம் பாசுரங்களுள் | அணைவர் | அநுபவிக்கப் பெறுவர்கள். |

***—இத்திருவாய்மொழி கற்கைக்குப் பலன் பரமபதத்தில் திவ்யாப்ஸரஸ்ஸுக்களாலே ப்ரஹ்மாலங்கார ப்ராப்தி பெறுவதென்கிறார். கீழ்ப்பாட்டில், திருவனந்தபுரத்தையேத்துமவர்களை அந்தமில் புகழினராக அருளிச்செய்தார்; இப்பாட்டில் திருவனந்தபுரத்தெந்தையை அந்தமில்புகழினனாக அருளிச்செய்கிறார்; இந்நிலத்தன்பர்கள் நித்யஸூரிகளிற் காட்டிலும் மேம்பட்ட புகழையுடையரானதுபோல, இத்தலத் தெம்பெருமானும் பரமபத நிலயனிற் காட்டிலும் மேம்பட்ட புகழையுடையனாயினன். தனக்கே அற்றுத் தீர்ந்தவர்களை அடிமைகொள்பவனான பரமபத நாதனிற் காட்டிலும் விமுகர்களையு மீடுபடுத்திக்கொள்ளு மிப்பெருமான் மிக்க புகழையுடையவனென்னத் தட்டில்லையே. அந்தமில் புகழென்னும் அடைமொழி அனந்தபுர நகர்க்கும் அந்வயிக்கும், ஆதிக்கும் அந்வயிக்கும்.

**அமருலகில் போய் பைந்தொடி மடந்தையர்தம் வேய்மருதோளிணை யணைவர்**—இதற்குச் சிலர், ஸ்வர்க்க லோகத்திற்சென்று ரம்பா பரிரம்பம் முதலிய இன்பங்களையனுபவிக்கப்பெறுவர் என்று பொருள்கொள்ளலாகாதோ வென்பர்; கீழே* ஒரு நாயகமாயென்னுந் திருவாய்மொழியில் ஸ்வர்க்க போகத்தையு முட்படப் பழித்த விவ்வாழ்வார் அதனைப் பலனாகக்கூற ப்ரஸக்தியில்லை; மேலே * சூழ்விசும்பணி முகிற்பதிகத்தில் * நிதியும் நற்சுண்ணமும் நிறைகுட விளக்கமும் மதிமுகமடந்தையர் ஏந்தினர் வந்தே* என்று சொல்லப் போகிற ஸத்காரத்தையே இங்குப் பலனாக அருளிச்செய்கிறாராயிற்று. அப்படியாகில், அவர்களுடைய வேய்மருதோளிணையை அணைவர் என்று சொல்லலாமோ வென்னில், அவர்களுடைய ஆதரத்திற்கு இலக்காகப் பெறுவர்கள் என்பதற்குப் பர்யாயமாகச் சொன்னது இது.

"ப்ரியதமர்களுக்கு ப்ரியதமைகள்போக்ய மாமாப்போலே, திருநாட்டிலுள்ளார்க்கு இத்திருவாய்மொழிவல்லார் போக்யராவரென்கிறார்" என்பது ஆறாயிரப்படி யருளிச்செயல். (11)

பத்தாம்பத்து இரண்டாந் திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையுரை முற்றிற்று.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பத்தாம்பத்து-மூன்றாந் திருவாய்மொழி வேய்மருதோளிணை.

**உரையவதாரிகை:**—கீழ்த்திருவாய்மொழியில், ஆழ்வார் தாமும் ஸ்ரீ வைஷ்ணவர்களுமாய்த் திருவனந்தபுரத்தேபுக்கு அடிமைசெய்யப் பாரித்தவர் அப்போதே அவ்விடத்தே புக்கு அடிமை செய்யப் பெறாமையாலே கலங்கினார்; 'பழையபடியே நமக்கு ஸம்ஸாரத்தி லிருப்பே சேஷித்து விடுகிறதோ' என்று அதிசங்கை தோன்றப்பெற்றார்; இவ்வதிசங்கைக்கு நிதான மென்னென்னில்; ப்ரக்ருதிஸம்பந்தத்தின் கொடுமையாலும் எம்பெருமானுடைய ஸ்வாதந்திரியத்தைப் பற்றவும் இங்ஙனே அதிசங்கையுண்டாகக் குறையில்லையன்றே.

இப்படி தமக்குண்டான அதிசங்கையை நேர்கொடு நேரே விண்ணபஞ் செய்யாமல் முகபேதத்தாலே விண்ணப்பஞ் செய்கிறார் இத்திருவாய்மொழியில்; எங்ஙனேயென்னில், இடைப்பெண்களுக்குக் கண்ணபிரான் மீது ஒரு அதிசங்கையுண்டாகி அவர்கள் கதறின படியை. வெளியிடும் முகத்தாலே தம்முடைய அதிசங்கையை வெளியிடுபவராகிறார்; அதாவது—ஒரு படுக்கையிலே கூடவிருக்கச் செய்தே பசுமேய்க்கப்போகிற விடியற்காலம் வந்து, அக்காலத்திற்கேற்ற குயில்மயில் முதலானவற்றினுடைய பாடலாடல் முதலான அடையாளங்களையுங் காண்கையாலே அவற்றையே கொண்டு 'கண்ணபிரான் பசுமேய்க்கப் போனான்' என்று அதிசங்கைபண்ணி நோவுபடுகிற இடைப் பெண்களது பேச்சை அநுவதிக்கும் முகத்தாலே ஆழ்வார் தமக்குண்டான அதிசங்கையை வெளியிடுகிறாரென்றவாறு.

இத்திருவாய்மொழிக்கான நூற்றந்தாதிப் பாசுரத்தில் மணவாளமாமுனிகள் ஆய்ச்சிகளுக்குண்டான அதிசங்கையைப் பற்றிச் சிறிதும் ப்ரஸ்தாவியாமல் "தன்னையின்னம் பூமியிலே வைக்குமெனச் சங்கித்து" என்று ஆழ்வாருடைய அதிசங்கை யொன்றையே இப்பதிகத்திற்கு ப்ரமேயமாக அருளிச் செய்திருப்பது இங்குக் குறிக்கொள்ளத்தக்கது. அந்யாபதேசத்தை விட்டு ஸ்வாபதேசத்தையே கொண்டருளினபடி. அதற்குமேல் "மால் தெளிவிக்கத் தெளிந்த" என்றுமருளிச் செய்துள்ளார்; ஆழ்வாருடைய அதிசங்கையைக் கண்ட எம்பெருமான் ஆழ்வாரைத் தெளிவு பெறுத்தியதாக இதன் பொருள் தேறுகின்றது. இப்பதிகத்தில் பத்தாம் பாட்டில் "செங்கனிவாயெங்களாயர்தேவே" என்றதின் சுவடறிந்து பூருவர்கள் நிர்வஹித்தருளினபடியைத் தழுவி "மால் தெளிவிக்கத் தெளிந்த" என்றருளிச் செய்யப் பட்டதென்க.

இத்திருவாய்மொழிக்குக் **காலைப்பூசல்** என்று நம் ஆசாரியர்கள் வழங்கும் திருநாமம். (*மல்லிகை கமழ்தென்றற்பதிகம்—மாலைப்பூசல்.) ... ... ... *

**வேய்மருதோளிணைமெலியுமாலோ! மெலிவுமென்தனிமையும்யாதும்நோக்கா***
**காமருகுயில்களுங்கூவுமாலோ! கணமயிலவைகலந்தாலுமாலோ!***
**ஆமருவினநிரைமேய்க்க நீபோக்கு ஒருபகலாயிரமூழியாலோ***
**தாமரைக்கண்கள்கொண்டீர்தியாலே! தகவிலை தகவிலையேநீகண்ணா! (1)**

| | | | |
|---|---|---|---|
| வேய் மரு தோள் இணை | வேய்போன்ற தோள்களிரண்டும் | கணம் மயில் அவை கலந்து ஆலும் ஆலோ | திரளான மயில்கள் கலந்து கேகாரவம் செய்யா நின்றன; அந்தோ! |
| மெலியும் ஆல் ஓ | பிரிவாற்றாமையினால் தளர்ந்தன; அந்தோ!; | மருவு ஆ நிரை இனம் மேய்க்க | உன்னோடு மருவுகின்ற பசுக் கூட்டங்களை மேய்க்கைக்காக |
| என் மெலிவும் என் தனிமையும் | (அவ்வளவுமன்றிக்கே) என்னுடல் மெலிவையும் பிரிவாற்றாத என் தனிமையையும் | நீ போக்கு ஒருபகல் | நீ (காட்டுக்குப்) போகிற ஒரு பகலானது |
| யாதும் நோக்கா | சிறிதும் நோக்காமல் | ஆயிரம் ஊழி ஆலோ | ஆயிரம் யுகமாகக் கழியா நின்றதந்தோ!; |
| காமரு குயில்களும் கூவும் | அழகிய குயில்களும் கூவுகின்றன; | தாமரை கண்கள் கொண்டு ஈர்தி | தாமரை போன்ற திருக்கண்களாலே நோக்கி நோவு படுத்துகின்றாய்; |
| ஆலோ | அந்தத் தொனியும் அஸஹ்யமாயிரா நின்றதந்தோ!; | கண்ணா நீ தகவு இலை தகவு இலை | கண்ணா! நீ கருணையுடையை யல்லை, திண்ணம். |

***காலைப் பொழுதானவாறே கண்ணபிரானைப் பிரிய நேர்கின்றதே யென்கிற வருத்தம் செல்லாநிற்க, அதற்குமேலே குயில்மயில் முதலானவைகளின் பாடுதலும் ஆடுதலும் கேட்டும் கண்டும் இன்னமும் வருத்தம் வளர்ந்து செல்லுகிறபடியைச் சொல்லிப் புலம்புகிறாள். தொடங்கும் போதே! **வேய்மருதோளிணை மெலியுமாலோ** என்கிறவிது 'வீடு நெருப்புப்பற்றி யெரியாநின்றதே!' என்கிறாப் போலுள்ளது. கண்ணபிரானை இடைவிடாது அணைத்துக் கொண்டிருக்கத்தக்க தோள்கள் அவனுடைய பிரிவை நினைத்து 'ஐயோ! நாம் நம் இரையை இழந்திருக்கவேண்டிவருகிறதே!' என்று மெலிகிறபடியால் அதனைச் சொல்லி வருந்துகிறாளாயிற்று. இப்போது கண்ணபிரான் பிரிந்தானல்லன்; கூடவேதானிருக்கிறான்; ஆனாலும் அடுத்த க்ஷணத்திலே பிரிவு விளையப்போகிறது திண்ணமாதலால் அப்பிரிவு இப்போதே விளைந்திட்டதாக எண்ணி அலற்றுகிறபடி.

**என் மெலிவும் என்தனிமையும் யாதும் நோக்கா காமருகுயில்களும் கூவுமாலோ**—உலகத்தாருடைய மெலிவும் தனிமையும் போலன்றே என்னுடைய மெலிவும் தனிமையும்; அவர்கள் தங்களுடைய அபிமதவிஷயங்களைப் பிரிந்தபிறகு தனிமையை நினைத்து மெலிவர்கள் நான் அப்படியோ? தலைவன் கூடியிருக்கச் செய்தேயும் பிரிவை நினைத்துத் தனிமையை நிச்சயித்து மெலிகிறவளன்றோ நான்; இப்படிப்பட்ட என்னுடைய மெலிவையும் தனிமையையும் சிறிதும் கணிசியாமல், **காமரு குயில்களும் கூவுமாலோ-அழகிய** குயில்களும் பஞ்சமராகத்தைப் பன்னிப்பன்னி என்னுயிரைக் கொள்ளை கொள்கின்றனவே யென்கை. 'காமம் தரு' என்ற இரண்டு சொற்கள் ஒன்று சேர்ந்து **காமரு** என விகாரப்பட்டதென்க. பரஸ்பரம் காமரஸத்தை யநுபவிக்கிற என்றபடி; காண்பார்க்கு ஆசையை விளைவிக்கிற என்றபடியுமாம். **கணமயிலவை கலந்து ஆலுமாலோ**—கணமயிலென்றது கூட்டமான மயிலென்றபடி. இணைபிரியாமல் கூடியிருக்கின்ற மயில்கள் தன் கண்ணுக்கு விஷம் போலேயிருக்கையாலே முகத்தை மாறவைத்து **அவை** என்று பரோக்ஷம்போலே சொல்லுகிறாள்; கண் கொண்டு காணப்போகாதபடி ஒரு திரளாக இருந்து மயில்கள் கூத்தாடுகின்றமை ஸஹிக்கக் கூடிய துக்கமாக இல்லையே! என்றபடி.

கண்ணபிரான் அருகே யிருக்கும்போதே இப்படி அலற்றுகையாலே அவன் 'அம்மா! நான் கூடவேயிருக்கச் செய்தே ஏனிப்படி வருந்துகிறாய்? நான் கூடவேயிருப்பது உனக்குத் தெரியவில்லையா? பிரிந்தேனாக நினைத்தாயோ? வீணாக ப்ரமிக்கவேண்டா; வருந்தாதே என்று சொல்ல; **ஆமருவின நிரைமேய்க்க நீ போக்கொருபகல் ஆயிரமூழியாலோ!** என்

கிறாள். பிரானே! இப்போது நீ கூடியிருக்கிறாயென்பதை அறிந்திலேனல்லேன்; அடுத்த க்ஷணத்திலே பிரியவிருக்கிற நீ இப்போது கூடியிருப்பது ஸம்ச்லேஷமாக எண்ணத்தகுமோ? *ஸ்வர்க்கேபி பாதபீதஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:* என்பதறியாயோ நீ; நீ பசு மேய்க்கப்போவது தவிரப் போகிறாயோ? அந்தணர்கள் ஸ்நாநஸந்த்யாவந்தனங்கள் தவிர்ந்தாலும் நீ பசு மேய்ப்பது தவிரமாட்டாயே; போனால் விரைந்து வருமவனோ நீ? 'ஒரு பகல் தானே நமக்குப் பிரிவு' என்பாய் நீ; உன் கருத்தாலே ஒரு பகல்; அது எங்கள் கருத்தாலே ஆயிர மூழியாயன்றோ இருக்கிறது; *த்ருடி யுகாயதே த்வாமபச்யதாம்* என்று காணிருப்பது —என்று சொல்ல; அந்தோ! நாம் பிரியாதிருக்கச் செய்தேயும் பிரிவை நிச்சயித்து இங்ஙனே யலற்றுகிறார்களே, இப்படியுமொரு ப்ரேமஸ்வபாவ முண்டோ வென்று வியந்து கண்ணாலே குளிர நோக்கினான் கண்ணபிரான்; அந்த நோக்கும் பாதகமாக, **தாமரைக்கண்கள் கொண்டு ஈர்தியாலோ!** என்கிறாள். கண்ணா! என்னை நீ கண்ணாலே உற்று நோக்கிக் கொலை செய்வதிற் காட்டிலும் பிரிந்து போவதே நன்றுகாண் என்கிறாள் போலும். இப்படி சொல்லச் செய்தேயும் அவன் நோக்கை மாறவைத்திலனாக, **தகவிலை தகவிலையே நீ கண்ணா** என்கிறாள். *பெண்ணின் வருத்தமறியாத பெருமானாயிருந்தாயே; *வெற்றவெறிதே பெற்றதாய் வேம்பேயாக வளர்த்தாளே! என்னும்படியிருந்தாயே; *தருமமறியாக் குறும்பனாயிருந்தாயே; இப்படியும் படுகொலையடிப்பாயோ வென்கிறாள். ... ... ... (1)

**தகவிலை தகவிலையேநீகண்ணா !தடமுலைபுணர்தொறும்புணர்ச்சிக்காரா***
**சுகவெள்ளம் விசும்பிறந்து அறிவைமூழ்க்கச்சூழ்ந்துஅதுகனவென நீங்கியாங்கே***
**அகவுயிரகமகந்தோறுமுள்புக்கு ஆவியின்பரமல்லவேட்கை யந்தோ !***
**மிகமிகவினியுன்னைப் பிரிவையாமால் வீவநின் பசுநிரைமேய்க்கப்போக்கே.** (2)

| | | | |
|---|---|---|---|
| கண்ணா! நீ தகவிலை தகவிலையே—;) | | அகம் உயிர் | உள்ளீடான பிராணனுடைய |
| தட முலை புணர் தொறும் | முலைத்தடங்களை நீ ஆலிங்கனம் பண்ணுகிற க்ஷணந்தோறும் | அகம் அகம் தோறும் | மர்மஸ்தானங்கள் தோறும் |
| | | உள் புக்கு | உள்ளே பிரவேசித்து |
| புணர்ச்சிக்கு ஆரா | அந்தப்புணர்ச்சியினளவல்லாத | ஆவியின் பரம் அல்ல | ஆத்மாவுக்குப் பொறுக்க வொண்ணாதபடியாயிராநின்றது! |
| சுகம் வெள்ளம் | ஆனந்த ஸாகரமானது | | |
| விசும்பு இறந்து | ஆகாசத்தையும் கடந்து | | |
| அறிவை மூழ்க்க சூழ்ந்து | அறிவு கெடும்படி போய் பெருகினதாகி | அந்தோ | ஐயோ!; |
| அது கனவு என நீங்கி | (அப்போதே) அது கனவுதானென்னும்படியாகக் கழிந்து | மிக மிக உன்னை பிரிவை ஆம் ஆல் | இனி மேன் மேலும் உன்னைப் பிரியும்படியாகும் அந்தோ! (ஆதலால்) |
| ஆங்கே | அந்த நிலைமையிலே | நின் பசு நிரை மேய்க்க போக்குவீவ | பசுக்களை மேய்க்கைக்காக நீ போவது தவிர வேணும். |
| வேட்கை | ஆசையானது | | |

***—பிரிவை நினைத்துப் புலம்புகிறபடியைக் கண்டு ஒருவாறு வருந்தும் நிரும்படி அடுத்தடுத்து ஆரத் தழுவிக்கொண்டான் கண்ணபிரான்; இதுதான் விச்லேஷப்ராகபாவ காலத்து ஸம்ச்லேஷமாகையாலே இது துக்கமாகத் தோற்றுமேயல்லது ஸுகமாகத் தோற்றாதாகையாலே கனாக்கண்டு விழித்தாற்போலே தோவுபட நின்றமையைச் சொல்லிக் கதறுகிறாள். **தகவிலை தகவிலையே நீ கண்ணா** வென்று மீண்டும் முறையிடுகிறாள்; கண்ணனென்றால் பெண்களுக்கே கைவழிமண்ணாயிருப்பனென்பர்களே; அதிகல்லார் வினைய வாதனாயிற்றே கண்ணா!; பெண்களைக் கண்டால் விஷமாய்விட்டதே உனக்குக்

**கருணாகாகுத்ஸ்த** னென்னும் ப்ரஸித்தியை இராமனுக்குத் தந்து **நிர்க்ருணக்ருஷ்ண** னென்னும் ப்ரஸித்தியை நீ கொண்டாயே யென்கிறாள். இதைக்கேட்ட கண்ணன், இப்படியும் என்னை நிந்திக்கலாமோ? நான் பிரிந்தேனல்லேன், பிரிய நினைத்தேனுமல்லேன்; கூடியே யிருக்கிறேனே யென்று சொல்லி இன்னமும் ஆரத்தழுவினான்; இப்படி அணைக்கிறது பிரிகைக்காகவன்றோ என்றறிந்து அணைத்த கை நெகிழ்த்த விடமெங்கும் இவள் உடம்பு வெளுக்கும்படியானாள். அந்தத்துயரத்தை வாய்விட்டுச் சொல்லுகிறாள் **தடமுலைபுணர்தொறு** மென்று தொடங்கி. கண்ணா நீ என்னோடு ஸம்ச்லேஷிக்கிற க்ஷணந்தோறும் விளைகின்ற இன்ப வெள்ளமானது அபரிச்சேத்யமான ஆகாசத்தையும் கடந்து என்னுடைய அறிவு கெடும்படி பெருகினாலும், அதுதான் கணக்கண்டது போலேயாய்க் கழிந்து, பெருங்காற்று வற்றி அடிசுடுமாபோலேயாயிற்றுக்காண்; **ஆங்கே**—அப்படிப்பட்ட நிலைமையிலே;

அகவுயிர் அகமகந்தோறு முள்புக்கு **ஆவியின் பரமல்ல வேட்கை அந்தோ** — — ப்ராணஸ்தானமான ஹ்ருதயத்தினுள்ளே யுண்டான அவகாசங்கள்தோறும் வேட்கையானது வியாபித்து ஆவியைக் கொள்ளைகொள்ளுமளவன்றிக்கே இன்னமும் என்னென்னவோ செய்வதாயிரா நின்றது; **[வேட்கை ஆவியின் பரமல்ல]** அணுபரிமாணமான ஆத்ம வஸ்துவினளவல்ல அபிநிவேசம்; *என்றனளவன்றால் யானுடைய வன்பு* என்ற பூதத்தாழ்வாரருளிச் செயலின்படியே.

ஆனால் இப்போது நான் செய்யவேண்டுவதென்? என்று **கண்ணபிரான்** கேட்க; அதற்கு மறுமாற்றமுரைப்பது ஈற்றடி. மேன்மேலுமுன்னைப் பிரிந்து வருந்தும்படிக் குறைப்பான பசுமேய்க்கப் போக்கை நீ **தவிரவேணும்** என்றபடி. **[இனி வீவ]** இதற்கு முன்புள்ள காலமெல்லாம் பிரிந்து போனாயாகிலும் இனிமேலுள்ள காலமாகிலும் தவிரவேணுங்கிடாய் என்கிறாள். **வீவுதல்**—ஒழிதல்.

ஈற்றடியில் "பிரிவையாமால்" என்று லகரவீற்றதாகப் பாடம் வழங்கிவருகின்றது; வியாக்யானங்களை நோக்குமிடத்து அப்பாடம் ஏற்றதாகத் தோன்றவில்லை; "பிரிகையுண்டாம்படி" என்றே வியாக்யானங்கள் காணுதலாய் "பிரிவையாமா" என்று ஆகார வீற்றதான பாடமே யுக்தமென்று தோன்றுகிறது. "பிரிவையாமால்" என்ற பாடத்திற்கு 'பிரிவை ஆம் ஆல்' என்று பிரித்துக்கொள்வது. பிரிவு என்னுஞ் சொல்லை பிரிவையென்று (2)

... ... ... ... ...

**வீவன்நின்பசுநிரைமேய்க்கப்போக்கு வெவ்வுயிர்க்கொண்டெனதாவிவேமால்***
**யாவருந் துணையில்லையானிருந்து உன்னஞ்சனமேனியையாட்டங்காணேன்***
**போவதன்றொருபகல்நீயகன்றால் பொருகயற் கண்ணிணைநீரும் நில்லா***
**சாவதிவ்வாய்க்குலத்தாய்ச்சியோமாய்ப்பிறந்த இத்தொழுத்தையோம்தனிமைதானே.** (3)

| | | | |
|---|---|---|---|
| நின் பசு நிறை மேய்க்க போக்கு | நீ பசுக்களை மேய்க்கப் போகும் நிமித்தமாக | உன் அஞ்சனம் மேனியை | அஞ்சனம் போன்றழகிய உன் திருமேனியினுடைய |
| வீவன் | நான் முடிந்து போவேன்; | | |
| எனது ஆவி வெவ்வுயிர் கொண்டு வேம் | எனது ஆத்மாவானது நெடு மூச்செறிந்து வெந்து போகின்றது; | ஆட்டம் காணேன் | ஸஞ்சாரமும் காண்கின்றிலேன்; |
| (இந்நிலைமையில்) | | நீ அகன்றால் | நீ பிரிந்து போனால் |
| துணை யாவரும் இல்லை | துணையாவார் ஒருவருமில்லை; (அவ்வளவிலும் ஆசையின் கனத்தாலே) | ஒரு பகல் போவது அன்று | அந்த வொரு பகற்போது கழிவதன்று காண்; (ஒரு யுகமாகப் பெருகிச் செல்லாநின்றதென்க) |
| யான் இருந்து | நான் முடியாதிருந்து | | |

| | | | |
|---|---|---|---|
| பொருகயல் கண்ணிணை நீரும் நில்லா | சண்டையிடுமிரண்டு கெண்டைகள் போன்ற கண்களும் நீர் பெருக நின்றன; | தொழுத்தையோம் | நீசத்தன்மைவாய்ந்த எங்களுடைய |
| இவ் ஆய் குலத்து ஆய்ச்சியோம் ஆய் பிறந்த | நீ பிறந்த இடைக்குலத்திலே இடையராய்ப் பிறவாதே இடைச்சிகளாய்ப் பிறந்த | தனிமை தானே சாவது | இப்பிரிவுத்துயரம் தொலை வேணும். |

***பசுமேய்க்கப் போவது தவிர்வேணு மென்றாள்; அதற்கு அவன் சொன்னதாவது—வர்ணாச்ரமதருமங்கள் தவிரப்போமோ? பசுமேய்ப்பதென்பது எனக்கு ஜாதிக்கேற்ற தருமமான செயலன்றோ? இதை நான் தவிரத்தகுமோ? என்றான்; அதற்குச் சொல்லுகிறாள்; பிறர்க்கு ஹிம்ஸையாய் முடியுங் காரியம் தருமமாகுமோ? நீ பசு மேய்க்கப் போவது ஸ்த்ரீ வதமாயன்றோ முடிகிறது; *ஓர் பெண் கொடியை வதை செய்தானென்னுஞ் சொல் வையகத்தார் மதியாரே* என்ற பாசுரம் கேட்டிலையோ; ஆண்கொலையிற் காட்டிலும் பெண் கொலை பெரும் பாதகமன்றோ. ராமாவதாரத்திலே தாடகாவதம் பண்ணியும் இவ்வவதாரத்திலே பூதநாவதம் பண்ணியும் சமைந்திருக்கிற நீ பெண்கொலைக்கு அஞ்சுதியோ வென்கிறாள். கீழ்ப்பாட்டினீற்றடியில் 'வீவ, நின்பசுநிரை' என்று பதவிபாகம்; இப்பாட்டில் 'வீவன்' என்று பதவிபாகம். நீ பசுமேய்க்கப் போவது காரணமாக, **வீவன்**—நான் முடிந்திடுவேன் என்றபடி. முடியும்படி வந்ததென்? என்ன; **வெவ்வுயிர் கொண்டு** என்கிறாள், என்னிலைமையைப் பார்க்கமாட்டாயோ பிரானே; நீ பசுமேய்க்கப் போகப்போகிறாயென்று நினைத்தவாறே நெடுமூச்செறிந்து உலர்ந்துபோன என்னுடைய ஹ்ருதயமானது விரஹாக்னி கொளுத்தி எரியா நின்றமை காணமாட்டாயோ? இதிலே ஒரு குடம் தண்ணீரைச் சொரியமாட்டாயோ வென்கிறாள்.

**துணை யாவருமில்லை**—துணையாவார் யாருமிலர் என்றபடி. துணைவனென்று பேர் பெற்றிருக்கிற நீயோ போகப்புகாநின்றாய்; பிரிவில் துணையாகக் கூடிய தோழிமார்களோ எனக்கு முன்னே வாடி வதங்கிச் சருகாகின்றார்கள்; குயில் மயில் முதலானவையோ கொல்லப்பார்க்கின்றன; இனித்துணையாவார் யாருளர்? [**யானிருந்து**] பிரிந்தவாறே பிராணன் சடக்கென என்னைவிட்டொழியலாமே; அதுவுமில்லை; எல்லாம்பட்டும் நூறே பிராயமாக வன்றோ நானிருக்கிறேன்; [**உன் அஞ்சன மேனியை ஆட்டங்காணேன்**] "ச்ரமஹரமான வடிவைக் கொண்டு என்முன்னே ஸஞ்சரிக்கக் காணேன்" என்பது இருபத்தினாயிர ஸ்ரீஸூக்தி. "ஆட்டங் காணேன்" என்றது என்முன்னே நடையாடக் காண்கின்றிலேன் என்றபடி. இதற்கு மற்றொரு விதமாகவும் பொருளுரைக்கலாம்; *ஆநிரை மேய்க்க நீ போதி அருமருந்தாவதறியாய், கானகமெல்லாந்திரிந்து உன் கரியதிருமேனிவாட* என்று பெரியாழ்வாரருளிச் செய்த கட்டளையிலே, உன் அஞ்சனமேனி கல்லும் முள்ளுமான காட்டிலே நடையாட நான் காணேன்—ஸஹித்திருக்கமாட்டேன் என்பதாக.

அல்லும்பகலு மெல்லாம் நான் காட்டிலேயா திரியப்போகிறேன்? ஒருபகல்தானே; கண்ணை மூடித் திறப்பதற்குள்ளே பகற்போது போய்விடாதோ? என்று கண்ணன் சொல்ல, **போவதன்றொரு பகல் நீயகன்றால்** என்கிறாள். நீ அகன்றால் ஒருபகல் போவதன்று—உன்னோடு கூடியிருக்குங் காலத்தில் பலபல ஊழிகளும் ஒரு நொடிப் பொழுதுபோல் கழிந்துபோம்; உன்னைப் பிரிந்தாலோ ஒருபகல் ஊழி காலமாகப் பெருகிச்செல்லுமேயன்றிப் பெயர்ந்து போவதன்று; **பொருகயற்கண்ணிணை நீரும் நில்லா**—உன் போக்கை நினைத்துப் பாய்கிற கண்ணீர் என்னால் தகையப்போகிறதில்லை. உன்னைத் தகைந்தாலும் தகையலாம், கண்ணீரைத் தகைய முடியவில்லைகாண் என்கிறாள். பிரிவை நினைத்துக் கண்துள்ளுகிற படியைத் துள்ளுகிறபடியை ஒப்புச் சொன்னதாகக்கொள்க.

அதற்கு செய்யவேண்டுவதென்? என்று கண்ணன் கேட்க; அதற்கு மறுமாற்றம் கூற்றடி. **இவ்வாய்க்குலத்து ஆய்ச்சியோமாய்ப் பிறந்த இத்தொழுத்தையோம் தனிமை தான் சாவது**—நீ போனாலும் போ; இருந்தாலும் இரு; இதில் விசிஷேதமொன்றாம் நான் செய்கின்றிலேன். இவ்விடைக்குலத்தில் இடைச்சிகளாய்ப் பிறந்த தண்ணியோமான எங்களுடைய தனிமை யொன்றே தொலையக்கடவது என்கிறவிதன் உட்கருத்து ஆழ்ந்து அறியத்தக்கது. "ஸாவித்ரியைப்போலே சொல்லுகிறாள்" என்பது ஈடு. ஸத்யவானுடைய உயிரைக் கொண்டுபோகா நின்ற யமன், அவனுடைய மனைவியாகிய ஸாவித்ரி பின்தொடர்ந்து வருவது கண்டும் இனிய பேச்சுக்கள் பேசுவது கேட்டும் மனமிரங்கி 'உன் கணவனுடைய உயிர் தவிர வேறு எதுவும் நீ என்னிடம் கேட்டுப் பெறலாம்' என்று கூற, அப்போ ஸாவித்ரி கணவனுடைய உயிரைக் கேளாமல் 'இவனால் எனக்கு நூறு பிள்ளைகள் பிறக்கவேணும்' என்று கேட்டாளாம்; அதுபோலவே இங்குச் சொல்லுகிறபடி—'நீ போனால் போ, இருந்தா லிரு' என்று. அவன் பசு மேய்க்கப் போனால் இவர்களது தனிமை எங்ஙனம் தொலையும்? நீ போகாமல் இருந்தே தீரவேணுமென்பதைப் பர்யாயமாகச் சொன்னபடி. "இத்தனிமை தானே சாவது" என்றவிதற்கு மற்றொருவகையாகவும் பொருள் கூறுவர்—எங்களுக்குத் தனிமையென்றும் மரணமென்றும் இரண்டில்லை, இத்தனிமைதானே மரணம் என்பதாக. இப்பொருளில் **சாவது** என்பது விநாசமென்னும் பொருளில் வந்த பெயர்ச்சொல்; முந்தின பொருளில் ஒருவகை வியங்கோள். "பேசும்படி அன்ன பேசியும் **போவது**" என்ற திருவிருத்தப்பாசுரத்தில் **போவது** என்றது போல,

அன்றியே, **தனிமை சாவது**-இத்தனிமை மிகவும் பொல்லாது; பொறுக்கவொண்ணாதது என்னவுமாம். இவ்வொருதலைக்காமம் தொலையட்டும் என்னவுமாம், (3)

தொழுத்தையோந்தனிமையுந்துணைபிரிந்தார்துயரமும் நினைகிலைகோவிந்தா*நின்
தொழுத்தனிற்பசுக்களையேவிரும்பித் துறந்தெம்மையிட்டவைமேய்க்கப்போதி*
பழுத்தநல்லமுதின்இன்சாற்றுவெள்ளம் பாவியேன்மனமகந்தோறுமுள்புக்
கழுத்த*நின்செங்கனிவாயின்கள்வப்பணிமொழிநினைதொறுமாவிவேமால். (4)

| | | | |
|---|---|---|---|
| கோவிந்தா தொழுத்தையோம் தனிமையும் | கண்ணா! அடிச்சிகளான எங்களுடைய தனிமையையும் | இன்சாறு வெள்ளம் | இனிதான ரஸப்ரவாஹமானது |
| துணை பிரிந்தார் துயரமும் | துணையான வுன்னைப் பிரிந்தார் படுமவமாப்பையும் | பாவியேன் மனம் அகம் தோறும் உள் புக்கு அழுத்த | பாவியேனுடைய நெஞ்சின் அவகாசந்தோறும் மறக்கவொண்ணாதபடி ஸ்திரமாக |
| நினைகிலை | நினைக்கின்றாயில்லை; | | |
| நின் தொழுதனில் பசுக்களையே விரும்பி | உன் தொழுவிலுள்ள பசுக்களையே ஆதரித்து | நின் செம் கனி வாயின் | உனது சிவந்த கனிபோன்ற திருப்பவளத்தினின்று வந்த |
| எம்மை துறந்து இட்டு | எங்களை அநாதரித்துவிட்டு | கள்வம் பணி மொழி | க்ருத்ரிமமான தாழ்ந்த மொழிகளானவற்றை |
| அவை மேய்க்க போதி | அவற்றை மேய்க்கப் போகாநின்றாய்; | நினைதொறும் | நினைக்கும்போதெல்லாம் |
| (அதற்கு மேல்) | | ஆவி வேம் ஆல் | எங்கள் பிராணன் பரிதபிக்கின்றது அந்தோ!. |
| பழுத்த நல் அமுதின் | பரிபக்வமாய்த் தெளிந்த அம்ருதத்தினுடைய | | |

***"உங்களை நான் விட்டுப்போவேனோ? பிரியேன், பிரியில்தரியேன் என்று நான் சொன்னதெல்லாம் மறந்தீர்களோ? என்னைப் பிரிந்து நீங்கள் படும்பாடெல்லாம் உங்களைப் பிரிந்து நான் படமாட்டேனோ? என் பிரிவை ஒருவாறு நீங்கள் பொறுத்திருந்தாலும் உங்கள் பிரிவு என்னால் பொறுக்கப் போமோ!" என்றிப்படி சில வார்த்தைகளைக் கண்ணபிரான் ப்ரணயத்

தின் மேலெல்லையில் நின்று சொல்ல; நாயனே! இந்தக் கள்வப் பணிமொழிகள்தாம் எம்மை நீராயலைந்து கரைய வுருக்குகின்றனவென்கிறார்கள்.

**தொழுத்தையோம்**—தொழுத்தையோ மென்றும் அடிச்சியோ மென்றும் பரியாயம்; கண்ணா! உனக்கே அற்றுத் தீர்ந்திருக்குமவர்களான எங்களுடைய தனிமையையும், துணைவனை வுன்னைப் பிரிந்தவர்கள் படும் துடிப்பையும் நீ அறிகின்றாயல்லை; பிரிகிறோம் நாங்களென்றும் பிரிகிறது உன்னையென்றும் பார்க்கிறாயல்லை. **கோவிந்தா! நின் தொழுத்தனில் பசுக்களையே விரும்பி எம்மைத்துறந்திட்டு அவை மேய்க்கப்போதி**—நாராயணனென்பது முதலான திருநாமங்களைத் தவிர்ந்து கோபாலனென்றும் கோவிந்தனென்றும் சில திருநாமங்களை ஆசைப்பட்டு வந்தாய்; அத்திருநாமத்திற்கேற்க எங்களை யுபேக்ஷித்துப் பசு மேய்க்கையையே விரும்பிக் கடிய வெங்கானிடைக் காலடி நோவச் செல்லாநின்றாய்—என்று ஆய்ச்சியர் சொன்னவாறே, கண்ணன், 'நங்கைமீர்! நான் உங்களைவிட்டுப் போவதென்று ஒன்றுண்டோ? போனால்தான் உங்களை மறப்பதுண்டோ? என்னுடைய் ஆற்றாமையையும் உங்களாற்றாமையையும் சீர்தூக்கிப் பார்த்தால் பர்வதபரமாணுவோட்டைவாசி போருமே; மாதாபிதாக்களுக்குப் பரதந்திரனாய் அவர்கள் சொல்லிற்றுச் செய்யவேண்டுமாகையாலே பசு மேய்க்கப் போகிறேனித் தனையன்றோ. போனாலும் உடல் அங்கும் உயிர் இங்குமாயன்றோ. நானிருப்பது' என்றிப்படி சில நீசபாஷணங்களைப் பண்ணினான்; ஐயோ! இத்தகைய பேச்சுக்கள்கிடாய் எங்களை ஈர்கின்றன வென்கிறார்கள் பின்னடிகளால்.

[**பழுத்த நல்லமுதின் இத்யாதி.**] "நான் போவேனோ? போனாலும் உங்களை மறப்பேனோ?" என்றிப்படியாகப் பேசும் பேச்சுக்கள் ***ஸம்ச்ரவே மதுரம் வாக்யம்*** என்னும்படியிருக்கையாலே பழுத்த நல்ல அம்ருதத்தினுடைய ரஸப்ரவாஹமே இங்ஙனமே சொற்களாக வடிவெடுத்ததோ! என்னும்படியாகவுள்ளது. இத்தனையும் கள்வப்பணிமொழியாயிருக்கையாலே அவற்றை நினைக்க நினைக்க ஆவி வேவாநின்றது என்று துடித்துச் சொல்லுகிறபடி (4)

**பணிமொழிநினைதொறுமாவிவேமால் பகல்நிரைமேய்க்கிய போயகண்ணா!***
**பிணியவிழ்மல்லிகைவாடைதூவப் பெருமதமாலையும் வந்தின்றாலோ***
**மணிமிகுமார்வினின்முல்லைப்போது என்வனமுலைகமழ்வித்துன்வாயமுதந்தந்து***
**அணிமிகுதாமரைக்கையையந்தோ அடிச்சியோந்தலைமிசைநீயணியாய்!.** (5)

| | | | |
|---|---|---|---|
| பணி மொழி நினை தொறும் ஆவி வேம் ஆல் | நீ ஆச்வாஸகரமாகச் சொல்லுகிற வார்த்தைகளை நினைக்குந் தோறும் நெஞ்சு வேவாநின்றது; | மணிமிகு மார்பினில் | கௌஸ்துப மணிபேரொளி விஞ்சுகிற திருமார்பில் |
| | | முல்லை போது | முல்லைப் பூவாலே |
| பகல் நிரை மேய்க்கிய போய கண்ணா | பகலெல்லாம் பசுமேய்க்கப் போன கண்ணனே! | என் வன முலை கமழ்வித்து | என்னுடைய அழகிய முலையைப் பரிமளிக்கச் செய்து |
| பிணி அவிழ் மல்லிகை வாடை தூவ | கட்டவிழ்ந்து அலருகிற மல்லிகைப் பூக்களை வாடையானது தூவ, | உன் வாய் அமுதம் தந்து | உனது வாயமுதத்தையும் தந்து |
| | | அணி மிகு தாமரை கையை | அழகிய தாமரை போன்ற திருக்கையை |
| பெரு மதம் மாலையும் வந்தின்று | பெரிய செருக்கோடே (மத்தகஜம் போலே) மாலைப்பொழுதும் வந்தது; | அடிச்சியோம் தலை மிசை நீ அணியாய் | அடிச்சியோமான எங்களுடைய தலைமேலே நீ வைத்தருளவேணும். |

கண்ணபிரானுடைய கள்வப்பணிமொழிகள் மேன்மேலும் வளருகையாலே மீண்டும் "பணிமொழி நினைதொறுமாவி வேமால்" என்கிறாள், தேறுதலுண்டாகைக்காக அவன்

சொன்னாலும் பிரிவு உண்டாகியே தீருமென்கிற நிச்சயம் இவளுக்கிருக்கையாலே ஆறியிருக்கப் போகிறதில்லை. **பகல்நிரைமேய்க்கிய போயகண்ணா!**—மேய்க்கிய வென்றது மேய்ப்பதற்காக வென்றபடி. கண்ணன் இன்னமும் போகாமலிருக்கச் செய்தேயும் போய்விட்டதாகவே நிச்சயித்து, **போய** என்கிறாள். போகவிருக்கிற கண்ணனே என்றபடி.

பகற்போதெல்லாம் கழிந்தபிறகு வரக்கடவதான மாலைப்போதும் இப்போதே வந்துவிட்டதாகக் கொண்டு கதறுகின்றமை இரண்டாமடியில் விளங்கும். அக்காலத்தில் தோன்றி நலியக்கூடிய பதார்த்தங்களும் இப்போதே தோன்றி நலிகின்றனவாகச் சொல்லியழுகிறாள் **பிணியவிழ் மல்லிகை வாடை**—பிணியவிழ் என்றது விகாஸோந்முகமான என்றபடி. அப்படிப் பட்ட மல்லிகை மலர்களின் மணத்தைக் கொய்துகொண்டு வாடைக்காறு. உலாவுமே; அதனிலுங் கொடிய ம்ருத்யு வேறுண்டா? „ராவணன் ஸந்நியாஸி வேஷத்தைக் கொண்டுவந்து தோற்றினாப்போலே வாடையானது குளிர்காற்றாய் வந்து நலியா நின்றது" என்பது ஈடு. **பெருமதமாலையும் வந்தின்றாலோ!**—பெரியசெருக்கோடே மாலைப் பொழுதும் மத்தகஜம் போலே வந்து நலிகின்றதே: என்றபடி, எப்போதோ வரப்போகிற மாலைப்பொழுது இப்போதே வந்திட்டதாகச் சொல்லியலற்றுவதானது ஆற்றாமையின் மிகுதியினாலென்க. மாலைப்பொழுது வருமாயின் கண்ணனும் பசுக்களை மேய்த்துவிட்டுக் கானகத்திலிருந்து திரும்பக்கூடுமே; ஆகவே அந்த மாலைப்பொழுதுக்காக அஞ்சவும் வருந்தவும் வேண்டாவே யென்று நம்போல்வார் நினைக்கக்கூடும், விரஹபீதியாலே நெஞ்சழிந்தார்க்கு ஈதொன்றும் தோன்றாதே; கீழே *மல்லிகை கமழ்தென்றலீருமாலோ* என்கிற பதிகத்தில் பட்டபாடு பின்னாட்டுகிறதாயிற்று.

இங்ஙனம் வருந்துகின்ற ஆய்ச்சியை நோக்கிக் கண்ணபிரான் ‚ஆனால் நான் செய்ய வேண்டுவதென்' என்று கேட்க; அதற்குச் சொல்லுகிறது பின்னடி. [**மணிமிகுமார்பினில்** இத்யாதி.] *குருமாமணிப்பூண் குலாவித்திகழுந் திருமார்பிலே சாத்திய முல்லைமாலையின் பரிமளத்தை என்முலைக்கு ஆக்கவேணும்; ஸம்ச்லேஷரசம் உந்மஸ்தகமானவாறே வாயமுதம் தரவேணும்; தாமரைக்கையை என்தலைமீது வைத்து 'நான் பசுமேய்க்கப் போவதில்லை அஞ்சேல்' என்று சொல்லவேணும்—இவ்வளவே விரும்புவது என்றாளாயிற்று.

ஆழ்வான் ஸ்ரீ வைகுண்ட ஸ்தவத்தில் *மந்மூர்த்நி ஹந்த கரபல்லவ தல்லஜம் தே குர்வந் கதா க்ருதமநோரதயிஷ்யஸே மாம்* என்றருளிச் செய்தது "அணிமிகு தாமரைக் கையை யந்தோ அடிச்சியோம் தலைமிசை நீயணியாய்" என்ற ஈற்றடிக்கு மொழி பெயர்ப்பாக வென்க. ... ... ... ... (5)

அடிச்சியோந்தலைமிசைநீயணியாய் ஆழியங்கண்ணா! உன்கோலப்பாதம்*
பிடித்ததுநடுவுனக்கரிவையரும்பலர் அதுநிற்கஎம்பெண்மையாற்றோம்*
வடித்தடங்கண்ணிணைநீரும்நில்லா மனமும்நில்லாஎமக்கதுதன்னாலே*
வெடிப்புநின்பசுநிரைமேய்க்கப்போக்கு வேமெமதுயிரழன்மெழுகிலுக்கே. (6)

| | | | |
|---|---|---|---|
| ஆழி அம் கண்ணா | கடல்போன்று விடாய் தீர்க்க வல்ல அழகிய திருக் கண்களையுடையவனே! | உன் கோலம்பாதம் அது பிடித்து | உனது அழகிய திருவடிகளைப் பிடித்து |
| அடிச்சியோம் தலை மிசை நீ அணியாய் | அடிச்சியோமான எங்கள் தலை மீது உன் அணி மிகு தாமரைக்கையை வைத்தருளவேணும்; | உனக்கு அறிவையரும் பலர் அது நிற்க | உனக்கு அபிமதைகளாயிருக்கும் பெண்களோ பல்லாயிரவர்; அது எப்படியாவது கிடக்கட்டும்; |
| நடுவு | நீ போகிற காரியத்தின் நடுவே | எம்பெண்மை ஆற்றோம் | (உன் பிரிவில்) எங்களுடைய பெண்மைகொண்டு ஆறியிருக்கமாட்டோம்; |

| | | | |
|---|---|---|---|
| வடி தட கண் இணை நீரும் நில்லா | கூர்மையாய்ப் பெருத்திருந் துள்ளகண்களின்நீர் தகைவு பட்டுநிற்கிறதில்லை; | எமக்கு | கணப்பொழுதும் பரிவாற்ற கில்லாத எங்களுக்கு |
| | | நின் பசு நிரை மேய்க்க போக்கு | நீ பசு மேய்க்கப் போவதானது |
| மனமும் நில்லா | நெஞ்சும் ஒரு நிலையில் நிற்கிற தில்லை; | வெடிப்பு | பரிதாபகரம்; |
| | | எமது உயிர் | எங்கள் ஆத்மாவானது |
| அது தன்னாலே | ஆகையினாலே, | அழல் மெழுகில் | நெருப்பில் மெழுகு போலே |
| | | உக்குவேம் | உருகி வேகின்றது. |

***கண்ணா! நீ போமிடமெங்கும் உனக்கொரு குறையில்லை கிடாய்; உனக்குக் காதலிமார்கள் எங்குமுளர்; எங்களையொழியவும் உனக்குச் செல்லுமாபோலே உன்னையொழியவும் எங்களுக்குச் செல்லுமாகில் நாங்கள் வருந்த வேண்டாவே; நாங்கள் உன்னைப் பிரிந்து தரிக்கமாட்டாமையன்றோ கதறுகிறோம்; உன் போக்கு எங்களுக்கு ஸஹ்யமன்று காண் என்கிறாள். "ஆழியங்கண்ணா! உன் கோலப்பாதம் அடிச்சியோந்தலைமிசை நீயணியாய்" என்று முதலடியை அந்வயித்தால், உனது அழகிய திருவடிகளை அடிச்சியோமான எங்கள் தலைமீது வைத்தருளவேணும் என்று பொருள்படும்; இங்ஙனே அந்வயித்துப் பொருளுரைத்தார் பன்னீராயிரவுரைகாரர். ஆறாயிரப்படி முதலான மற்ற வியாக்கியானங்களிலெல்லாம் "அடிச்சியோந் தலைமிசை நீயணியாய் ஆழியங்கண்ணா" என்னுமளவும் ஒரு வாக்கியமாக்கி, "உன் கோலப்பாதம்" என்பதை மேலடியோடே கூட்டியுரைத்தல் உள்ளது. கீழ்ப்பாட்டின் முடிவில் "அணிமிகு தாமரைக் கையையந்தோ அடிச்சியோந் தலைமிசை நீயணியாய்" என்றிருக்கையாலே அவ்வணிமிகு தாமரைக்கையையே இங்கும் வருவித்துக் கொண்டு உரை செய்தல் அழகியது. "உன்னுடைய அழகிய திருக்கைகளை அடியோங்களுடைய தலையிலே வைத்தருளித் திருக்கண்களாலே குளிரப்பார்த்தருளாயென்று பின்னையுமிங்ஙனே சொல்லுமளவில்" என்பது ஆறாயிரப்படியருளிச் செயல். "கடல்போலேயிருக்கிற அழகிய கண்களாலே என்னைக் குளிர நோக்கி என் தலைமேலே கையை வைத்தருளவேணும்" என்பது ஒன்பதினாயிரப்படியருளிச் செயல். மற்ற படிகளிலு மிங்ஙனேயுள்ளது.

**உன் கோலப் பாதமது பிடித்து நடுவு உனக்கு அரிவையரும் பலர்**—நீ போனவிடத்திலே உன் திருவடிகளைப் பிடிப்பாராய் உனக்கு அபிமதைகளானவர் பலருண்டுகாண் என்றபடி. **நடுவு** என்றது—நீ போகிற காரியமொழிய நடுவே என்றபடி. "ஆழியங்கண்ணா! அடிச்சியோந்தலைமிசை நீயணியாய்" என்றவாறே, "உங்கள் கையாலே ஸ்பர்சிக்க வேணுமென்றன்றோ நானிருப்பது; நான் போவதென்பதுண்டோ? போனால்தான் உங்களையொழிய வேறேயும் சிலருண்டோவெனக்கு" என்று கண்ணபிரான்கூற, அதற்கு மறுமொழி கூறுவது **உன்கோலப்பாத**மென்று தொடங்கி; பிரானே! உன் செய்திகளறியோமோ நாங்கள்; எங்களுக்கோ நீ சொல்லுவது? நீ போமிடமெங்கும் உன் திருவடியைப்பற்றியிருப்பார் ஒருவரிருவரோ? உனக்குப் போனவிடமெங்கும் பெரிய திருநாளன்றோ என்கிறார்கள்.

**அரிவையர்**—"பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை பேரிளம் பெண்" என்ற தமிழர் சங்கேதத்தின்படி 'அரிவை' என்பது ஒரு பருவத்திற் பெண்ணுக்கு வாசகம்; பொதுவாக மாதர்க்கும் வாசகம். "தங்கள் பருவத்தாலே துவக்கவல்லவர்" என்பது ஈடு.

**அது நிற்க எம்பெண்மை ஆற்றேம்**—போனவிடமெங்கும் உனக்குக் காதலிமாருளரோ இலரோ, அது கிடக்கட்டும்; அதைப்பற்றி எங்களுக்கென்ன? பெண் பிறந்த நாங்கள் உன்னைப் பிரிந்து ஆற்றமாட்டோம் என்றவாறு.

ஆற்றமாட்டாமல் என்ன செய்வீர்களென்ன; பிரிவில் ஸம்பவிக்கக்கூடிய நிலைமையை மூன்றாமடி பேசுகிறது. எங்களைப் பார்க்கமாட்டாயோ? ஜீவிப்பாருடைய லக்ஷணமுண்டோ எங்களுடம்பில்? நீ பரமபோக்யமென்று கொண்டாடுமெங்கள் கண்ணில் நீர் மாறுகிறதில்லை; தைரியத்தோடிருப்பதற்கு மனமும் வசப்பட்டிருப்பதில்லை; ஆகவே, **நின் பசுநிரை மேய்க்கப் போக்கு வெடிப்பு**-நீ பசுமேய்க்கப் போகிற போக்கு மிக்க பரிதாபம்; எங்களுடைய பிராணனானது நெருப்பிலிட்ட மெழுகுபோல சிதிலமாகா நின்றது; ஆகவே நீ பசுமேய்க்கப் போகவொண்ணாது.

**மெழுகில்**—மெழுகுபோலே, மெழுகினுங் காட்டில் என்று இரண்டுவகைப் பொருளுமேற்கும். ... ... ... ... ... (6)

**வேமெமதுயிரழல்மெழுகிலுக்கு வெள்வளைமேகலைகழன்றுவீழ*
தூமலர்க்கண்ணிணை முத்தஞ்சோரத் துணைமுலைபயந்தெனதோள்கள்வாட*
மாமணிவண்ணா! உன்செங்கமலவண்ணமென்மலரடிநோவநீபோய்*
ஆமகிழ்ந்துகந்தவைமேய்க்கின்று உன்னோடுஅசுரர்கள்தலைப்பெய்யில் யவங்கொலாங்கே.**
(7)

| | | | |
|---|---|---|---|
| மா மணி வண்ணா | நீலமணி நிறத்தனான கண்ண பிரானே! | நீ போய் | நீ சென்று |
| எனவெள்வளைமேகலை கழன்று வீழ | எனது கைவளைகளும் அரையில் மேகலைகளும் பொருந்தாமல் கழன்று விழும்படியாகவும், | ஆ மகிழ்ந்து உகந்து | பசுக்களிடத்திலேயே பரம ப்ரீதியை வைத்து |
| தூமலர் கண் இணை முத்தம் சோர | செவ்வித்தாமரை போன்ற கண்களினின்று முத்துப் போன்ற நீர்த்தாரை பெருகவும், | அவை மேய்க்கின்று | அவற்றை நீ மேய்க்கிற காலத்தில் |
| துணை முலைபயந்து தோள்கள் வாட | முலைகளிரண்டும் விவர்ணமாகி தோள்கள் வாடும்படியாகவும் | உன்னோடு அசுரர்கள் தலைப் பெய்யில் | உன்னோடு (கம்ஸனேவின பல) அசுரர்கள் (போர் செய்யக்) கூடினால் |
| உன் செங்கமல வண்ணம் மெல் மலர் அடி நோவ | உனது பரமஸுகுமாரமான பாதாரவிந்தங்கள் நோகும்படியாக | ஆங்கு யவன் கொல் (என்று) | அங்கு என்னாகுமோ வென்று (அதிசங்கை பண்ணி) |
| | | எமது உயிர் | என் ஆத்மாவானது |
| | | அழல் மெழுகில் உக்கு வேம் | நெருப்பில் மெழுகு போலே உருகிவேவாநின்றது. |

***கண்ணா! உன்னைப் பிரிந்து படுகிற துக்கம் மாத்திரமேயன்றுகாண்; தேனுகன் பிலம்பன்காளியனென்னுந் தீப்பப் பூடுகள் நிறைந்த விடங்களிலன்றோ நீ திரியப் போவது; அங்கே கம்ஸனேவின ஆஸுரப்ரக்ருதிகள் வந்து கூடினால் என்னாகுமோவென்று அதைப் பற்றின கிலேசமும் அளவற்றதுகாண் என்கிறாள். பிரிவில் தங்களுக்குண்டாகும் தரியாமையைச் சொல்வன முன்னடிகள். விரஹாக்நியாலே எங்களுயிர் வேவ, ஆச்ரயம் முடிகையாலே வளைகளும் மேகலையும் கழன்று வீழ, கண்கள் அருவி சோர்ந்து, முலைகள் பசலை பூத்துத் தோள்களும் வாடும்படியாக நீ பசுமேய்க்கப் போகவொண்ணாது; நாங்கள் எங்கள் மெல்லிய கைகளாலே பிடிக்கும் போதும் கூச வேண்டும்படியான உனது ஸுகுமாரமான திருவடிகளைக் கொண்டோ நீ நடந்து போவது; போனாலும் வழியேபோய் வழியே வருமவனல்லையே; பசுக்களை மேய்ப்பதிலுண்டான வியாமோஹத்தினால் அவை போமிடமெல்லாம்

போய்த்திரிவாய்; அங்குத் தான் எழும்பூண்டெல்லாம் அசுரப் பூண்டாயிருக்குமே; ஐயோ! என்ன அனர்த்தம் விளையுமோ? என்கிறாள்.

மேய்க்கின்று—கீழ்ப்பதிகத்தில் "அமரர்கோன் அர்ச்சிக்கின்று" என்றது போன்ற பிரயோகமிது. "பஞ்சிய மெல்லடிப் பிள்ளைகள் உண்கின்று" என்ற பெரிய திருமொழிப் பிரயோகமுங் காண்க. ... ... ... ... (7)

**அசுரர்கள்தலைப்பெய்யில்யவன்கொலாங்கென்று ஆழுமென்னாருயிரான்பின்போகேல்***
**கசிகையும் வேட்கையுமுள்கலந்து கலவியும் நலியுமென்கைகழியேல்***
**வசிசெயுன்தாமரைக் கண்ணும்வாயும் கைகளும் பீதகவுடையும் காட்டி***
**ஒசிசெய் நுண்ணிடையிளவாய்ச்சியர் நீயுகக்கு நல்லவரொடுமுழிதராயே.** (8)

| | | | |
|---|---|---|---|
| ஆங்கு அசுரர்கள் தலைப் பெய்யில் யவன் கொல் என்று | நீ பசு மேய்க்கப் போகிற காட்டிலே அசுரர்கள் வந்து கூடினால் என்ன அபாய மாகுமோ வென்று | வசி செய் | கண்டவர்களை வசப்படுத்த வல்ல |
| என் ஆருயிர் ஆழும் | அருமையான எனது உயிர் வருந்தா நின்றது; (ஆதலால்) | உன் தாமரை கண்ணும் வாயும் கைகளும் | செந்தாமரை போன்ற உனது கண்களையும் வாயையும் கைகளையும் |
| ஆன் பின் போகேல் | நீ பசுக்களின் பின்னே போகாதே; | பீதகம் உடையும் காட்டி | திருப்பீதாம்பர வுடையழகையுங் காட்டி, |
| கசிகையும் வேட்கையும் கலவியும் உள் கலந்து நலியும் | நெஞ்சிலுள்ள ஈடுபாடும் மேன் மேலுமுண்டாகின்ற குதூஹலமும் கலவியும் இவையொன்று சேர்ந்து நலியா நிற்கும்; (ஆதலால்) | ஒசி செய் நுண் இடை | ஒசிந்த நுண்ணிடையை யுடைய |
| | | நீ உகக்கும் நல்லவரொடும் | உன் காதலி மார்களுடனே |
| | | உழிதராய் | திரிந்து கொண்டு இவ்விடத்திலேயே இரு. |
| என் கைகழியேல் | என்னைப் பிரிந்து போகாதே | | |

***கீழ்ப்பாட்டில் "அசுரர்கள் தலைப்பெய்யில்" என்று அஸுரப்ரஸ்தாவம் வந்ததே; அதுவே மேலும் அநுவர்த்திக்கிறது; இப்பாட்டுத் தொடங்கிப் பதிகம் முடியுமளவும் அஸுரபயமே விஞ்சிச் செல்லுகிறதாயிற்று. பிரானே! நீ போமிடங்களில் அசுரர்கள் வந்து கிட்டினால் என்விளைகிறதோவென்று நடுங்கா நின்றேன்; ஆதலால் நீ பசு மேய்க்கப் போவது கூடாது; நீ போனால், உன் பக்கலில் வைத்திருக்கிற அன்பும், அவ்வன்பின் எல்லை நிலமான அபிநிவேசமும், இப்போது கலக்கிற கலவியும் மருமத்திலே புகுந்து நலியும்; ஆகவே நான் அணைத்த கைக்குள்ளேயே நீ கிடக்க வேண்டுமே யொழிய, கையை விட்டு அகலக் கூடாது என்று இவள் சொன்னவாறே, இதற்கு அவன் சொல்லுகிறான்—'நான் இங்கேயேயிருக்க முடியுமோ? பசு மேய்க்கப் போகவேண்டியது மொன்றுண்டு, அதுவன்றியும் புறம்பேயும் நமக்கு அபிமதவிஷயங்களுண்டே; *தக்கார் பலர் தேவிமார் சாலவுடையீர்* என்றும் *அழகியாரிவ்வுலகு மூன்றுக்கும் தேவிமைதகுவார் பலருளர்* என்றும் அடிக்கடி நீங்களும் சொல்லுவதுண்டே; *ஆழியங்கண்ணாவுன் கோலப்பாதம் பிடித்தது நடுவுனக்கு அரிவையரும் பலர்* என்று இப்போதே நீங்களும் சொன்னீர்களே; பசு மேய்க்கப் போவதென்றொரு வியாஜங்கொண்டு நமக்கு அபிமதைகளுடனே கலந்து பரிமாறுவதும் உத்தேச்யமன்றோ; அது தவிரப்போமோ? என்று. (மேல் இவள் சொல்வது கேட்கைக்காக இங்ஙனே சொன்னான் கண்ணபிரான்);

இதற்கு மேல் ஈட்டு ஸ்ரீஸூக்திகள் பரமபோக்யமாயிருக்கையாலே அவையே மீண்டெடுத்துக் காட்டப் படுகின்றன;—"எங்களுக்கு அந்த நிர்ப்பந்த முண்டோ? நீ கைகழியப்

போகாதொழியுமத்தனையன்றோ வேண்டுவது; நீ விரும்பியிருக்குமவர்களோடே என் கண் வட்டத்தில்தானே பரிமாறப்பார் என்ன; ஆனால் அவர்களை அழைத்துத் தருவார் ஆரென்ன; (**வசிசெயுன் தாமரைக்கண்ணும்**) உனக்கு *தூதுசெய் கண்களுண்டாயிருக்க, புறம்பே பரிகரம்தேடி அழைக்க வேண்டியிருந்ததோ? இனிப் பொருந்தோமென்றிருப்பார் நெஞ்சுகளில் மறத்தை மாற்றி அவர்களை வசப்படுத்தித் தரவல்ல கண்களும், அந்நோக்கில் கருத்தை ஆவிஷ்கரிக்கும் வாயும், அந்நோக்கிலும் முறுவலிலும் நேர்விழிக்கமாட்டாதே வளையாலே கவிந்தவர்களை யெடுத்துக்கொள்ளும் கைகளும், ஸ்பர்சத்துக்குத் தோற்றவர்களைக் கீழ் போகாதபடியாகத் தன் செல்லாமையாலே மேலே யெறிட்டுக் கொள்ளுகிற திருப்பீதாம்பரமும் காட்டினால் இந்த வலைகளிலே அகப்படாதாருண்டோ? உனக்குப் புறம்பே அழைத்துத் தருவார் வேண்டியிருந்ததோ? பீடாத்தை விழவிட்டு வடிவைக்காட்டவமையாதோ”?

[**பிடாத்தை விழவிட்டு** என்றது—மேற்போர்வையைத் தள்ளி என்றபடி.]

**நீ உகக்கும் நல்லவரான ஒசிசெய் நுண்ணிடை யிளவாச்சியரோடும் உழிதராயே** - என்னைவிட்டு வேறொரு மாதரை நீ அபிமானித்தாயாகில் அது எனக்குப் பொறுக்க வொண்ணாத துக்கமேயானாலும், இனி அதைத் துக்கமாகப் பாவிப்பதில்லை; எப்படியாவது நீ என் கண்வட்டத்திலேயிருப்பதுதான் எனக்கு அபிமதம்; பசுமேய்க்க வென்று கானகமே சென்றால் அங்கு அசுரர்கள் தலைப்பெய்யில் என்னாகுமோவென்கிற அச்சம் அபரிஹார்யமாயிருக்கையாலே அந்தப்போக்கு ஸஹிக்கத்தக்கதன்று; என் கண் வட்டத்திலேயேயிருந்து நீ யாரோடு கலந்து பழகினாலும் அதில் விசாரமற்றிருக்கக்கடவேன் என்றாளாயிற்று. (8)

**உகக்குநல்லவரொடுமுழிதந்து உன்தன் திருவுள்ளமிடர்கெடுந்தோறும்* நாங்கள்**
**வியக்கவின்புறுதும்எம்பெண்மையாற்றோம் எம்பெருமான்! பசுமேய்க்கப்போகேல்***
**மிக்கப்பலவசுரர்கள்வேண்டுருவங்கொண்டு நின்றுழிதருவர்கஞ்சனேவ***
**அகப்படிலவரொடும் நின்னொடாங்கே அவத்தங்கள்விளையுமென்சொற்கொளந்தோ! (9)**

| | |
|---|---|
| எம்பெருமான் உகக்கும் நல்லவரொடும் உழிதந்து | எமது தலைவனே; நீ உகக்கும்படியான நன்மைமிக்க ஆய்ச்சிகளோடே திரிந்து |
| உன்தன் திருவுள்ளம் இடர் கெடும்தோறும் | உன் திருவுள்ளம் ஆனந்திக்குமளவில் |
| நாங்கள் வியக்க இன்புறுதும் | (அதைக் கண்டு) நாங்களும் மிக ஆனந்தப்படுவோம்; |
| எம்பெண்மை ஆற்றோம் | பிறரைக் காதலிக்குமளவில் பொறுமைப் படும்படியான பெண்மையையுடையோமல்லோம்; (ஆகவே) |
| பசு மேய்க்க போகேல் | பசு மேய்க்கப் போகாதேகொள்; |
| கஞ்சன் ஏவ | கம்ஸனுடைய ஏவுதலால் |
| பல அசுரர்கள் வேண்டு உருவம் கொண்டு | பலவசுரர்கள் (காமரூபிகளாகையாலே) வேண்டின வடிவுகளைக் கொண்டு |
| மிக நின்று உழிதருவர் | மிகவும் திரிவர்கள்; |
| அகப்படில் | அவர்கள் கையிலே நீ அகப்பட்டால் |
| அவரொடும் நின்னொடு ஆங்கே | அவர்களும் நீயுமாகப் பிணக்கிடவே |
| அவத்தங்கள் விளையும் | ஏதேனும் பொல்லாங்கு விளையும்; |
| என் சொல் கொள் | என் சொல்லைப் பேணியருளாய்; |
| அந்தோ | பிரிவாற்றகில்லேன் |

***—கீழ்ப்பாட்டில் * நீயுகக்கு நல்லவரொடு முழிதராயே* என்று சொன்னதைக் கேட்ட கண்ணபிரான் “இப்படி நீங்கள் சொல்லுகிறது உண்மையான வார்த்தையாகுமோ? ஏதோ நான் போகாமைக்காகச் சொல்லுகிற வார்த்தையேயொழிய, உங்களருகே நான் வேறு சில மாதரோடே கலந்து பரிமாறினால் அதை நீங்கள் பொறுத்திருப்பீர்களோ? கண்ணாலேயே தஹித்து விடமாட்டீர்களோ?” என்று சொல்ல, அதற்கு மறுமாற்றமுரைப்பது இப்பாட்டு;

உன்னோடு நாங்கள் கலவி செய்து அதனாலடையுமுகப்பிற்காட்டிலும், நீ உன் உகப்புக்கு இலக்கானாரோடு கூடி நெஞ்சிடர்தீர, அதனால் நாங்களடையுமுகப்பே எங்கட்கு உயர்ந்தது என்கிறது இப்பாட்டில்.

**உகக்கு நல்லவரொடு முழிதந்து**—எங்களைக்காட்டிலும் நீ மிகவிரும்பும்படியான பாக்யவதிகளோடு ரமித்து; அதனால், **உன்றன் திருவுள்ளமிடர்கெடுந்தோறும்**—'நாம் இன்னாரோடு கலக்கப்பெற்றிலோம்' என்று உன் திருவுள்ளத்தில் இடர் உண்டாகாதபடி ஒரு மகிழ்ச்சி விளையுமாகில், **நாங்கள் வியக்க இன்புறுதும்**—அதுவே எங்களுக்குப்பேறாக நாங்கள் மிக மிக இன்பமெய்துவோம்; இக்குணம் பெண் பிறந்தார்க்கு உண்டாகமாட்டாதேயென்னில்; **எம்பெண்மையாற்றோம்**—உன் உகப்புக்குப்புறம்பாயிருக்கும் ஸத்ரீத்வம் நாங்கள் வேண்டோம்; ஸ்வரூபஜ்ஞான மில்லாத பெண்களின்படி எங்களுக்கில்லை என்றபடி. நாங்கள் நீயுகந்தாரை உகப்பவர்களேயன்றி உன்னை உகக்குமவர்களல்லோம்காண்.

ஆசார்யஹ்ருதயம் மூன்றாம் ப்ரகரணத்தில் "மூன்றில் சுருக்கிய வைந்தையும்" என்று தொடங்கியுள்ள சூர்ணையில் "எம்மாவொழிவில் நெடுவேயென்கிற" என்றுள்ள ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்திக்கத்தக்கது; *எம்மாவீட்டுத்திறமும் செப்பம்* ஒழிவில்காலமெல்லாம்* நெடுமாற்கடிமை* வேய்மருதோளிணை* ஆகிய நான்கு பதிகங்களும் புருஷார்த்தஸ்வரூபத்தை விசதீகரிப்பனவாக அறுதியிடப்பட்டிரா நின்றது. மற்ற மூன்று பதிகங்களில் புருஷார்த்தஸ்வரூபம் நிஷ்கர்ஷிக்கப்பட்டிருப்பது ஸுஸ்பஷ்டம். *வேய்மருதோளிணை யாகிற இப்பதிகத்தில் அது எங்கே தெரிகிறதென்று ஆராய்ந்தால் இங்கேதான் தெரிந்து கொள்ளத்தக்கதாகும்; "உன்றன் திருவுள்ளமிடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்கவின்புறுதும் எம்பெண்மையாற்றோம்" என்னுமிதுவே இப்பதிகத்திற்கு உயிர்நிலையாயிருக்கும், இந்த மஹார்த்தத்தைவெளியிடவேண்டியே இப்பதிகம் உபக்ரமிக்கப்பட்டதென்றும் சொல்லலாம்.

ஆறாயிரப்படியருளிச்செயல்;—"உனக்கு அபிமதைகளாய் விலக்ஷணைகளாயுள்ளவர்களோடு திரிந்து உன்னுடைய திருவுள்ளத்திலிடர்கெடுமளவில், நீ எங்களோடு ஸம்ச்லேஷிக்கதிற்காட்டிலும் நாங்கள் மிகவுமினியராவுதோம்; வேறு சிலரோடே ஸம்ச்லேஷிக்கப் பொறுக்க மாட்டாத பெண்மை வேண்டோம்" என்று. (பெண்மைவேண்டோமென்றது-அப்படிப்பட்ட தீய இயல்பு எங்களிடமில்லை என்றபடி.)

**எம்பெருமான் பசு மேய்க்கப்போகேல்**—பசுமேய்க்கப்போவதென்கிற வியாஜத்தினால் நீ பெறநினைத்திருக்கிற பேறு எங்கள் கண்முகப்பே பெறலாமாதலால், பிரானே! பசுமேய்ப்பதென்றொரு வியாஜமிட்டுக்கொண்டு நீ பிரிந்து போகவேண்டாவென்கை.

இது கேட்டகண்ணபிரான் என்னை நீங்கள் காமுகனென்றே அறுதியிட்டுப் பேசாநின்றீர்கள்; உண்மையில் ஜாதிதருமமாகப்பசுமேய்ப்பதற்கென்றே நான் போகிறேனேயொழிய மாதர்களோடு புணர்வதை நெஞ்சிலும் நினைத்திலேன்; வேறாக நினையாதேகொண்மின்; நான் போய்வருகிறேன், என்ன; அதற்குச்சொல்லுகிறது பின்னடி; [மிகப்பலவசுரர்கள் இக்யாகி] நீ காமுகனே அல்லையோ. அதுஎப்படியாவதுகிடக்கட்டும்; ஏகதாரவ்ரதனான இராமபிரானைக் காட்டிலும் நீ நைஷ்டிகப்ர ஹ்மசாரியாகவே இருக்கவுமாம், அதிலொரு விஸம்வாதமில்லை கிடாய்; பலவசுரர்கள் கம்ஸனாலேவப்பட்டு வேண்டின வடிவுகளைக்கொண்டு ஆங்காங்கு திரியாநிற்பார்கள்; நீயோ வழியேபோய் வழியே வருமவனல்லை; அவர்களோடு பிணங்குவாய்;

தௌ ஹி த்ருச்யேதே யுத்தே ஜயபராஜயௌ* என்பதறியாயோ? ஏதேலும் அவத்யங்கள் விளையக்கூடும்; என்சொல்கொள்ளாய்; பசுமேய்க்கப்போகேல். அவத்யம் என்னும் வடசொல் அவத்தமெனத் திரிந்தது. ... ... ... ... (9)

அவத்தங்கள் விளையுமென்சொற்கொளந்தோ! அசுரர்கள் வன்கையர்கஞ்சனேவ*
தவத்தவர்மறுகநின்றுஉழிதருவர் தனிமையும்பெரிதுனக்கிராமனையும்
உவர்த்தலை*உடன்திரிகிலையும் என்றென்றூடுற என்னுடையாவிவேமால்*
திவத்திலும்பசுநிரைமேய்ப்புஉவத்தி செங்கனிவாயெங்களாயர்தேவே. (10)

| | | | |
|---|---|---|---|
| செம்கனிவாய் எங்கள் ஆயர் தேவே | சிவந்த கனிபோன்ற அத்தரத்தையுடைய எங்களாயர் குலக்கொழுந்தே!, | உடன் திரிகிலையும் என்றென்று | அவனோடுங் கூடித் திரிய மாட்டாய் நீ யென்று இதைப் பல காலும் நினைத்து |
| வன்கையர் அசுரர்கள் | வலிமை மிக்க அசுரர்கள் | என்னுடைய ஆவி ஊடுற வேம் | என்னெஞ்சு உள்ளூற வேவா நின்றது; |
| கஞ்சன் ஏவ | கம்ஸனுடைய ஏவுதலால் | அந்தோஎன் சொல் கொள் | ஐயோ! என்சொல்லைக் கொள்ளாய்; |
| தவத்தவர் மறுக நின்று உழிதருவர் | முனிவர்கள் குடல் குழம்பும்படி திரிவர்கள்; | திவத்திலும் | திரு நாட்டிலிருப்பதிற்காட்டிலும் |
| உனக்கு தனிமையும் பெரிது | நீயோ மிகவும் துணையற்றிரா நின்றாய்; | பசு நிரை மேய்ப்பு உவத்தி | பசுக்கூட்டங்களை மேய்ப்பதையே நீ உகக்கின்றாயே. |
| இராமனையும் உவர்த்தலை | (உனக்குத் துணைவனாக) பலராமனையும் நீ உகவாதவனாய் | | |

***—"அவத்தங்கள் விளையும்" என்றதைக்கேட்ட கண்ணபிரான் *அதிஸ்நேஹ: பாபசங்கீ* என்கிறபடியே உங்களுடைய அளவுகடந்த அன்பினால் இப்படி அதிசங்கையுண்டாகின்றதேயன்றி, உண்மையில் எனக்கு யாதோரவத்யமும் விளையாது; வீணாக அஸ்தானே அஞ்சவேண்டா; வாளாவிருங்கள்" என்று சொல்ல, அப்படியன்றாகாண், உள்ளபடி சொல்லுகிறோம் கேளாய் என்கிறார்கள்.

செங்கனிவாயெங்களாயர் தேவே! அவத்தங்கள் விளையும்—உன்னழகுக்குக் கண்ணெச்சில்பட்டுத்திருங்காண் என்கிறார்கள். அசுரர்கள் வன்கையர்——அசுரஜாதி இயற்கையாகவே பொல்லாது; அதற்குமேலே [கஞ்சனேவ] *கஞ்சன்கறுக்கொண்டு நின்மேல் வஞ்சிப்பதற்கு விடுத்தானென்பதோர் வார்த்தையுமுண்டாகையாலே அந்த கம்ஸப்ரேரணையினால் மிகவும் கடியர்; உனக்கு என்வருகிறதோவென்று மஹரிஷிகளுங்கூடக் கலங்குவர்; நம்பிமூத்தபிரானாவது உன்னைவிட்டுப் பிரியாது உனக்குத் துணைவனாயிருந்தால் அவனுடைய காவலுண்டென்று ஒருவாறு ஆறியிருப்போம்; நீயோ அவன் கூடவிருந்தால் தீம்புசெய்யப் போகாதென்று அவனை விட்டகன்றே திரிவாய்; *மைந்நம்புவேற்கண்ணல்லாள் முன்னம் பெற்ற வளை வண்ண நன்மாமேனித் தன்னம்பி நம்பியுமிங்கு வளர்ந்தது அவனிவை செய்தறியான்* என்று இச்சேரியில் நல்லபேர் பெற்றிருக்கின்ற நம்பிமூத்தபிரானை உடன்கொண்டு திரியமாட்டாய்; அவனோடு நீபொருந்துவாயல்லை; *அண்ணற்கு அண்ணானோர் மகனைப் பெற்ற *என்னும்படியிராநின்றாய்; இதையெல்லாம் நினைக்க நினைக்க என்னுடைய ஹ்ருதயமானது வேவா நின்றது.

என்று சொன்னவாறே, கண்ணன் "நான் போனாலன்றோ இப்படி பயப்பட வேண்டுவது; இதென்ன அன்புதான்" என்று முறுவல் செய்ய, செங்கனிவாயெங்களாயர்தேவே! திவத்திலும் பசு நிரைமேய்ப்பு உவத்தி—*ஹஸந்நிவ ந்ருபோ ஹந்தி* என்னுமாபோலே

*சிரித்தே எங்கள் குடியைக்கெடுக்கிறாயே; பரமபதத்திலிருப்பிலுங்காட்டில் உனக்குப் பசு மேய்க்கையிலன்றோ மிகவிருப்பமுள்ளது; நீயோ போகாதிருக்கப்போகிறாய்! என்கிறார்கள்.*

**வன்கையர்**—*வன்மையையுடையவர்; வன்கை-வன்மை.* **தவத்தவர்மறுகநின்று** *என்பதற்கு இரண்டுபடியாகப் பொருள்கொள்ளலாம்! *சதுர்தசஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணாம், ஏகச் ச ராமோ தர்மாத்மா கதம் யுத்தம் பவிஷ்யதி* என்றாப்போலே கண்ணபிரானுக்கு என்வருகிறதோ வென்று குடல்மறுக* என்பது *ஒருபொருள்;* ***ஏஹி பச்யசரீராணி*** *என்பவர்களாகையாலே தங்களுடலுக்கு வரும் கேடுகளை நினைத்துக் குடல்மறுக. என்பது மற்றொரு பொருள் "உனக்கென்வருகிறதோவென்று ரிஷிகளுங்கூடக் கலங்குவார்கள்" என்பது ஆறாயிரப்படியருளிச் செயல். மூன்றாமடியின் முதற்சொல்,* **உவத்தலை, உவர்த்தலை** *என்று இரு வகையாகக் காண்கிறது.*

**திவத்திலும் பசுநிரைமேய்ப்பு உவத்தி** *என்றவிடத்து* **திவத்திலும்** *என்பதை ஐந்தாம் வேற்றுமையாகக் கொள்வதும் ஏழாம் வேற்றுமையாகக்கொள்வதுமாக இரண்டு நிர்வாஹங்களுள்ளன. (1) பரமபதத்திலிருப்பதைக்காட்டிலும் பசுநிரைமேய்ப்பதை உகக்கின்றாய்; (2) பரம பதத்தில் வஸிக்கும்போதும் பசுமேய்ப்பதிலேயே உகப்புடையை; அங்கும் ஊயோ ஊயோ வென்று வாய்வெருவாநின்றாய்.* ... ... (10)

**செங்கனிவாயெங்களாயர்தேவு அத்திருவடி திருவடிமேல்*பொருநல்**
**சங்கணிதுறைவன்வண்தென்குருகூர் வண்சடகோபன்சொல்லாயிரத்துள்***
**மங்கையராய்ச்சியராய்ந்தமாலை அவனொடும் பிரிவதற்கிரங்கி*தையல்**
**அங்கவன் பசுநிரைமேய்ப்பொழிப்பானுரைத்தன இவையும்பத்தவற்றின்சார்வே.**
(11)

*செம் கனி வாய்* — *செங்கனி-போன்ற அதரத்தையுடைய*
*எங்கள் ஆயர் தேவு—எங்களாயர் கொழுந்தாகிய*
*அத்திருவடி—அந்த ஸ்வாமியினுடைய*
*திரு அடி மேல் —திருவடிகளிலே,*
*பொருநல் சங்கணி துறைவன் வண் தென் குருகூர் வண் சடகோபன் சொல் ஆயிரத்துள்* — *தாமிரபர்ணியில் திருச்சங்கணி துறையை நிரூபகமாகவுடையரான திருக்குருகூராழ்வார் பணித்த ஆயிரம்பாடலினுள்ளும்*
*மங்கையர் ஆய்ச்சியர் ஆய்ந்த மாலை* — *ஆயர் மங்கைகள் அநுஸந்தித்த சொல்மாலையாய்,*
*அவனொடும் பிரிவதற்கு இரங்கி* — *அவனை விட்டுப் பிரிவதற்கு வருந்தி*
*அங்கு தையல் —அத்திருவாய்ப்பாடியிலுள்ள ஒரு ஆய்ச்சி*
*அவன் பசு நிரை மேய்ப்பு ஒழிப்பான் உரைத்தன* — *அவன் பசு மேய்க்கப்போவதைத் தவிர்ப்பதற்காகச் சொன்ன*
*இவையும் பத்து —இப்பதிகமும்*
*அவற்றின் சார்வே—மற்றைப் பதிகங்களுக்குச் சொன்ன பலனைத்தரும்.*

***—*ஆழ்வார் தாமருளிச்செய்த பதிகங்களுள் எம்பெருமானைப் பசுநிரைமேய்க்கப் போகவேண்டாவென்று நிஷேதித்த பாசுரமான இப்பதிகமும் மற்றைப்பதிகங்களோடொக்க ஒருபதிகமே? என்று தாமே விஸ்மிதராகிறார்.* **அத்திருவடி திருவடிமேல்**—*முதலிலுள்ள திருவடியென்னும் சொல் ஸ்வாமியென்னும் பொருளுடையது; அந்த ஸர்வஸ்வாமியானவன் திருவடிகளிலே யென்றபடி.*

**தையல்** *என்றவிடத்து நப்பின்னைபிராட்டி;-"ஸபைபோலே எல்லாரும் கிடந்து வார்த்தை சொன்னால் செவிப்படாதென்று பார்த்து, அவனுக்கு மறுக்கவொண்ணாதபடி. நப்பின்னைப் பிராட்டியுடைய தரமுடையாளொருத்தி பசுமேய்க்கப் போகாமே மீட்கைக்காகச் சொன்னையாய்த்து". பல ஆய்ச்சிகளுக்கும் பிரதிநிதியாக ஒருத்தி சொன்ன சொல் என்க. சில*

பாசுரங்களில்* ஆழும் என்னுருயிர்* என்றும் *என் சொற்கொள்* என்றும்*எனதாவி வேமால்* என்றும் ஒருமையாகவுள்ளது; மற்றுஞ் சில பாசுரங்களில் *அடிச்சியோம்* என்றும் *தொழுத்தையோம்* என்றும் பன்மையாகவுள்ளது; ஒருத்தியே சொன்னதாகை யாலே ஒருமை பொருந்தும்; பலர்க்குமாகச் சொன்னதாகையாலே பன்மையும் பொருந்தும்; **யாமுருமை அடியேன்** செய்யும் விண்ணப்பமே* என்ற திருவிருத்த முதற் பாசுரத்திலுள்ள ஒருமைபன்மைகள் இங்கு நினைக்கத்தக்கன.

**இவையும் பத்து அவற்றின் சார்வே**—மற்றைப் பதிகங்களினருகே இதுவுமொரு பதிகமே! என்று ஆச்சரியத்திலேயாக்கி ஒரு நிர்வாஹம்; கீழ்ப்பதிகங்கட்குச் சொன்ன பலனே இதற்கும் பலன் என்பதாக மற்ரெரு நிர்வாஹம்; முதலடியில் திருவடிகளை ப்ரஸ்தா விக்கையாலே, "அவற்றின் சார்வே" என்று அத்திருவடிகளைச் சேர்விக்கு மென்பதாக மற்று மொரு நிர்வாஹம்; "**அவற்றின்** என்பதனால்*மங்கையராய்ச்சியராய்ந்த மாலையைப் பராமர் சித்ததாகி பசுமேய்க்கப் போகவேண்டா வென்ற அவர்களது சொல்லைக் கேட்டு அவன் போக்குத்தவிர்ந்து அவர்களுடனே கூடியேயிருந்தாப்போலே இது கற்ருரும் அவ னேடு கூடியிருக்கையையே பலனகப் பெறுவர் என்பதாக முடிவான நிர்வாஹம். (11)

*பத்தாம்பத்து மூன்ருந்திருவாய்மொழியின் திவ்யார்த்த தீபிகையுரை முற்றிற்று.*

*ஆழ்வார் எம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்*

---

## பத்தாம்பத்து—நான்காந் திருவாய்மொழி—சார்வேதவநெறி

**உரையவதாரிகை:**—ஆழ்வார் தாமான தன்மையை விட்டுப் பெண்தன்மையெய்திப் பேசும் பரிசு முதற்பத்தில் நான்காம் பதிகமான* அஞ்சிறையமட நாரையிலே தொடக்க மாயிற்று; அது கீழ்ப்பதிகத்தோடு தலைக்கட்டிற்று. இனிமேலுள்ள பதிகங்களிற் பெண்மை தலைநாட்டா தென்க. கீழ்த்திருவாய்மொழியின் ப்ரமேயத்தை அநுவதித்துக்கொண்டு இங்கே நம்பிள்ளை யருளிச் செய்யுமது காண்மின்;—"தம்மைப் பிரிய நினைவின்றிக்கேயிருக்க அதிசங்கையாலே பிரிந்தார்படும் வ்யஸநத்தைப்பட்டு அத்தாலே அவஸந்நரானவரை 'உம்மையொருநாளும் பிரியேன்' என்று அவன் ஆச்வஸிப்பிக்க அத்தாலே தரித்து மிகவும் பரிதரானர் கீழ்" என்று. நூற்றந்தாதியிலே மணவாள மாமுனிகள் "தன்னையின்னம் பூமியிலே வைக்குமெனச் சங்கித்து மால்தெளிவிக்கத் தெளிந்த மாறன்" என்றருளிச் செய்தபடியே ஆழ்வார் தம்முடைய அதிசங்கை தொலையப்பெற்று இனி நமக்குப் பரம பதப்ராப்தியில் ஸந்தேஹமில்லையென்று துணிந்து, திருவாய்மொழியாகிற இந்த மஹா சாஸ்திரத்திற்குச் செய்யவேண்டுவதெல்லாம் செய்து தலைக்கட்டத் தொடங்குகிறார் இனி; "பிணைக்கறவைச் சார்வாக நிகமித்து" என்ற ஆசார்ய ஹ்ருதய ஸ்ரீஸூக்தியின்படியே, ஆகிரிலே பிறர்க்கு உபதேசித்த பக்தி பலத்தோடே சேர்ந்தபடியைச் சொல்லி நிகமிக்கிறார் இதில். விபீஷணாழ்வான் இராவணனைக்குறித்து உபதேசிக்க, அவ்வுபதேசம் அவனுக்குப் பயனின்றிதொழிந்தாலும், உபதேசித்தவற்குப் பெருமாள் பக்கலிலேப்ராவண்யம் கனத்துத் தன் பேற்றுக்கு உறுப்பானுப்போலே இவர்க்கும் பரோபதேசம் தம்முடைய ப்ராவண்யம் கனக்கைக்கு உடலாகி ஸபலமானபடியைச் சொல்லி நிகமிக்கிறாரென்க.

பிள்ளானுடைய நிர்வாஹமாக ஒரு ஸங்கதி ஈட்டிலருளிச் செய்யப்படுகிறது; நீ பசு மேய்க்கப் போகவேண்டாவென்றவாறே அதில் தவிர்ந்தேனென்றான் எம்பெருமான்; அந்த

பெருங்குணத்திலே யீடுபட்டு இவன் பக்திஸாலப னென்பதை நிச்சயித்து அதுதன்னை யருளிச் செய்வது இத்திருவாய்மொழி என்று.

**சார்வே தவநெறிக்குத் தாமோதரன் தாள்கள்***
**கார்மேகவண்ணன் கமலநயனத்தன்***
**நீர்வானம்மண்ணெரிகாலாய் நின்றநேமியான்***
**பேர்வானவர்கள்பிதற்றும் பெருமையனே.** (1)

| | |
|---|---|
| கார்மேகம் வண்ணன் | காளமேகநிறத்தனாய் |
| கமலம் நயனத்தன் | செந்தாமரைக்கண்ணனாய் |
| நீர் வானம் மண் எரிகால் ஆய் நின்ற | பஞ்சபூதஸ்வரூபியாய் |
| நேமியான் | திருவாழியை யுடையனாய் |
| பேர் வானவர்கள் பிதற்றும் பெருமையன் | பெரியவானவர்களான நித்யஸூரிகள் வாய் வெருவும்படியான பெருமையை யுடையனாய் (இப்படி உபய விபூதி நாதனாய் வைத்து) |
| தாமோதரன் | தாம்பாலே கட்டுண்டு அடியார்க்கெளியனானவனுடைய |
| தாள்கள் | திருவடிகளானவை |
| தவம் நெறிக்கு | பக்திமார்க்கத்திற்கு |
| சார்வே | எளியனவாம். |

***-உபயவிபூதி நாதனாயிருந்து வைத்துப் பத்துடையடியவர்க்கெளியனான எம்பெருமானுடைய திருவடிகள் பக்தியோக ஸாலபமென்கிறார், "தவநெறிக்குத் தாமோதரன் தாள்கள்-சார்வே" என்று யோஜிப்பது. ஆதியில் *பத்துடையடியவர்க்கென்கிற பதிகத்தில் "வணக்குடைத் தவநெறி" என்று தவநெறிச்சொல்லால் சொல்லியிருப்பது இங்கே நினைக்கத் தக்கது. தவநெறியாது பக்திமார்க்கம்; அதற்கு, தாமோதரன் தாள்கள் சார்வே-யசோதை போல்வார்கையிலே கட்டுண்டு தழும்பு சுமந்ததுவே திருநாமமாகித் தாமோதரனென்று தன் எளிமையைக் காட்டிக்கொண்டிருக்குமவனுடைய திருவடிகள், சார்வாகும்-எளியனவாகும். அவன் உரலோடு கட்டுண்டிருந்தானென்று நினைத்தலும் சொல்லுதலும் செய்தவாறே நம்முடைய ஸம்ஸாரக் கட்டுகளெல்லாம் ஒழிந்து போவது போவது போல, அவனுடைய ப்ராப்திக்கு விரோதிகளாயுள்ளவையெல்லாம் தொலையுமென்பது பரமதாத்பரியம்.

அவன்றான் எப்படிப்பட்டவனென்ன, மேல் மூன்றடிகளும் அவனை விசேஷிப்பன. **கார்மேகவண்ணன்**—நீர்கொண்டெழுந்த காளமேகம்போன விடாய் தீர்க்கும் வடிவுடையவன்! பக்திக்கு இத்தலையால் க்ருஷியாக வேண்டாதபடி *காதல் கடல்புரைய விளைவித்த காரமர் மேனியன் என்க. **கமலநயனத்தன்**—வாத்ஸல்யம் முதலிய நீர்மைக் குணங்களையும் பெருமேன்மையையும் காட்டிக்கொடுக்குங் கண்ணழகுடைத்தவன். ஆக இரண்டாமடியால் திவ்யமங்கள விக்ரஹவைலக்ஷண்யம் சொல்லிற்று.

இனி ஸ்வரூபவைலக்ஷண்யஞ் சொல்லுகிறது, [**நீர்வானம் மண்ணெரிகாலாய் நின்ற.**] பஞ்சபூதங்களைச் சொன்னது அவற்றாலாகும் பௌதிகபதார்த்தங்களையும் சொன்னபடியாய் லீலாவிபூதிநாத னென்றதாயிற்று. **நேமியான்**—கையுந் திருவாழியுமாகில் நித்ய விபூதியிலிருக்கு மிருப்பைச் சொல்லுகிறது. **பேர்வானவர்கள் பிதற்றும் பெருமையன்**—இதற்கு இரண்டுபடியாக நிர்வாஹம்; பேர் என்பதை வானவர்களுக்கு விசேஷணமாக்கி; பெருமை பொருந்திய வானவர்கள்-நித்யஸூரிகள் என்று கொள்வது. அன்றிக்கே, "வானவர்கள் பேர் பிதற்றும் பெருமையன்" என்று யோசித்து, திருநாமங்களைச் சொல்லிப் பிதற்றுமதாகக் கொள்வது, ஆக, கார்மேக வண்ணனைப், கமலநயனத்தனைப் நீர்வானம்

*மண்ணெரிகாலாய் நின்ற நேமியானைப் பேர்வானவர்கள் பிதற்றும் பெருமையனையிருந்து வைத்துத் தாமோதரனானவனுடைய திருவடிகள் தலைநெறிக்குச் சார்வே என்றதாயிற்று.* (1)

பெருமையனேவானத்திமையோர்க்குங் காண்டற்
கருமையனே* ஆகத்தணையாதார்க்கென்றும்*
திருமெய்யுறைகின்ற செங்கண்மால்*நாளும்
இருமைவினைகடிந்து இங்கென்னையாள்கின்றானே. (2)

| | | | |
|---|---|---|---|
| வானத்து இமையோர்க்கும் பெருமையன் | மேலுலகங்களிலுள்ள பிரமன் முதலானோரினும் பெருமை பெற்றவனாய் | என்றும் திரு மெய் உறைகின்ற | எப்போதும் பிராட்டியானவள் தன் திருமேனியிலேயேவாழப் பெற்ற புண்டரீகாக்ஷன் |
| ஆகத்து அணையாதார்க்கு | அவன்திருவுள்ளத்திலே கொள்ளப் பெறாதவர்களுக்கு | செம் கண் மால் இங்கு இருமை வினை கடிந்து | இவ்விபூதியிலே புண்யபாபரூப உபய கருமங்களையும் போக்கி |
| காண்டற்கு அருமையன் | காண முடியாதிருப்பவனாய். | நாளும் என்னை ஆள்கின்றான் | நாடோறும் என்னை அடிமை கொள்ள நின்றான். |

***கீழ்ப்பாட்டில் *தாமோதரன் தாள்கள் தலைநெறிக்குச் சார்வே* என்று பொதுப்படையாக அருளிச்செய்தார்; அது தம்மளவில் பலித்தபடியை யருளிச்செய்கிறார் இப்பாட்டுத் தொடங்கி. **வானத்திமையோர்க்கும் பெருமையன்**-பிரமன் முதலான இமையோர்கள் தாங்களும் பெருமை பெறும்படி அநுக்ரஹம் செய்தருளினவன் என்றபடி; *யுககோடி ஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ:, புநஸ் த்ரைலோக்ய தாத்ருத்வம் ப்ராப்தவாநிதி சுச்ரும* என்பது முதலான பிரமாணங்கள் காண்க.

**ஆகத்து அணையாதார்க்குக் காண்டற்கருமையன்**—ஆகமாவது ஹ்ருதயம்; ஹ்ருதயத்திலணையாதார் என்றது இரண்டுவகையாகப் பொருள்படும்; தங்களுடைய ஹ்ருதயத்திலே எம்பெருமானைக் கொள்ளாதார் என்றபடியாய், தன்னைக் காணவேணுமென்னும் ருசியில்லாதார்க்குத் தான் காணவரியன் என்பதொன்று; எம்பெருமானுடைய ஹ்ருதயத்திலே அணையப் பெறாதார்க்கு என்றபடியாய், பரகத ஸ்வீகாரத்திற்கு இலக்காகப் பெறாதவர்களுக்குக் காணவரியன் என்பது மற்றொன்று. இவ்விரண்டு பொருள்களையும் சேரப்பிடித்து நம்பிள்ளையருளிச் செய்கிறபடி பாரீர்-"தானே வந்து மேல்விழா நின்றால் விலக்காமையின்றிக்கேயிருப்பார்க்குக் காணவரியனாயிருக்கும்; ஸம்பந்தம் இன்று தேடவேண்டா; பெற வேணுமென்கையும் வேண்டா வென்கையுமிறேயுள்ளது."

**என்றும் திரு மெய்யுறைகின்ற**—சேதநர்களை குற்றங்களுக்குக் கொலைகலமானவர்கள்; ஈச்வரனோ குற்றங்களுக்குத் தக்கபடி தண்டனைகளைத் தருமவன்; இவ்விரண்டையும் நோக்கி என்னாகுமோ வென்றஞ்சி, புருஷகாரம்பண்ணிச் சேர்க்கைக்காகப் பிராட்டி இடைவிடாது உறையுந் திருமார்பையுடையவனென்கை. **செங்கண்மால்**-அப்பிராட்டியின் நித்ய ஸம்ச்லேஷத்தினாலே நீர்பாய்ந்த பயிர்போலே விலக்ஷணமான செவ்வி பெற்ற திருக்கண்களையுடையனாய், அடியார்கள் பக்கல் வியாமோஹமே வடிவெடுத்திப்பவனென்க. ஆக இப்படிப்பட்ட எம்பெருமான், **இருமைவினைகடிந்து நாளும் இங்கென்னையாள்கின்றானே**—இரும்பு விலங்கென்னும்படியான பாபமென்ன, பொன்விலங்கென்னும்படியான புண்யமென்ன, இவ்விருவகைக் கருமங்களையும் போக்கி, திருநாட்டிலே கொள்ளக்கடவதான அடிமையை நாள்தோறுமிங்கே கொள்ளா நின்றான். ... ... ... (2)

ஆள்கின்றானாழியான் ஆரால்குறையுடையம்*
மீள்கின்றதில்லைப் பிறவித்துயர்கடிந்தோம்*
வாள்கெண்டையொண்கண் மடப்பின்னைதன்கேள்வன்*
தாள்கண்டுகொண்டு என்தலைமேற்புனைந்தேனே. (3)

| | |
|---|---|
| ஆழியான் ஆள்கின்றான் | கையுந் திருவாழியுமான பெருமான் காத்தருளா நின்றான்; |
| | (அதனாலே) |
| பிறவி துயர் கடிந்தோம் | பிறவித்துன்பங்கள் தொலையப் பெற்றோம்; |
| மீள்கின்றது இல்லை | இனி ஸம்ஸார ஸம்பந்தம் மறுவலிடாது; |
| ஆரால் குறை உடையம் | இனி ஆரைக்கொண்டு காரிய முடையோம்? |
| வாள் கெண்டை ஒண் கண் | ஒளியையுடைய கெண்டை போன்றழகிய கண்களையுடையளாய் |
| மடம் பின்னை தன் கேள்வன் | குணவதியான நப்பின்னைக்கு நாயகனானவனுடைய |
| தாள் | கண்டுகொண்டு திருவடிகளை. ஸாக்ஷாத்கரித்து |
| என் தலைமேல் புனைந்தேன் | (அத்திருவடிகளை) என் தலை மீது அணியப்பெற்றேன். |

*** எம்பெருமானுடைய திருவடிகளைச் சென்னிக்கணியாகக்கொண்டு அநுபவிக்கப் பெற்றேன்; இனி ஸம்ஸாரம் மறுவலிடாது; என்னகுறை யுண்டென்கிறார். **ஆள்கின்றாழியான்**-*எப்போதுங் கைகழலாநேமியான் நம்மேல் வினைகடிவான்* என்றும் *ப்ரணதரக்ஷாயாம் விலம்பமஸஹந்நிவ, ஸதா பஞ்சாயுதீம் பிப்ரத் ஸ்ரீரங்கநாயக:*என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமான் எப்போதும் கையுந்திருவாழியுமாயிருந்துகொண்டு விரோதியைப் போக்கி அடிமைகொண்டருளாநின்றான்; **ஆரால் குறையுடையம்**-உபாயாந்தரங்களாலும் உபேயாந்தரங்களாலும் அபேக்ஷையுடையோமல்லோம் என்றபடி. *உன்னாலல்லால் யாவராலு மொன்றுங் குறைவேண்டேன்* என்றவிடத்துப் பொருளை நினைப்பது. **மீள்கின்றதில்லை பிறவித்துயர்கடிந்தோம்**-"புநரபி ஜநநம் புநரபி மரணம் புநரபி ஜநநீஜடரே சயநம்" என்னும்படியான நிலைதவிர்ந்தோ மென்கை. இனிமறுவலிடாதபடிஸம்ஸார துரிதத்தைத்தோட்டினோம். மேல் *முனியே நான் முகனில்*மாயஞ் செய்யேலென்னை உன் திருமார்வத்து மாலைநங்கை வாசஞ்செய் பூங்குழலாள் திருவாணை நின்னாணைகண்டாய்* என்று ஆணையிடுமளவும் அநுவர்த்திக்கின்ற ஸம்ஸாரத்திலிருப்பை இப்போதே கடிந்ததாகச் சொல்லுகிறது நெஞ்சி லுண்டான தெளிவாலே யென்க.

**வாள்கெண்டை யொண்கண் மடப்பின்னைதன் கேள்வன்**-முன்னடிகளிற் சொன்ன பேறு நப்பின்னைப்பிராட்டி யடியாக வுண்டானதென்று காட்டுகிறார். ஈச்வரன் நம்முடைய கருமங்களுக்குத் தக்கபடி பலன் தருபவனாயிருந்தாலும் பிராட்டியினுடைய திருக்கண் ணோக்கைப் பின்செல்லுவானும் அவள் புருவம் நெறித்தவிடத்தே குடநீர்வழிக்கக் கடவனாயிருப்பனே; அபராதங்கண்டு சேதநர்களையுபேக்ஷித்தானாகில் பிராட்டிபக்கலிலே நோக்குப் பெறமாட்டானே; *வண்டார் பூ மாமலர்மங்கை மணநோக்கமுண்டானே!* என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடி எம்பெருமானுக்கும் பிராட்டியின் நோக்கமேயன்றோ உணவு; அவ்வுணவை அவன் இழக்க முடியுமோ? ஆகவே அவளுக்காக அடியார்களைக் கடாக்ஷித்தருள்பவன் என்கைக்காக "வாள்கெண்டை யொண்கண்" என்கிற விசேஷண மமைந்ததென்க. ஆக, தன் கண்ணழகாலே துவக்கவல்லளான நப்பின்னைப் பிராட்டிக்கு நாதனானவனுடைய திருவடிகளைத் தலைமேலணிந்து க்ருதக்ருத்யனானேனென்றாராயிற்று. (3)

தலைமேல்புனைந்தேன் சரணங்கள்* ஆலின்
இலைமேல்துயின்றான் இமையோர்வணங்க*
மலைமேல்தான்நின்று என்மனத்துளிருந்தானை*
நிலைபேர்க்கலாகாமை நிச்சித்திருந்தேனே. (4)

| | |
|---|---|
| சரணங்கள் தலைமேல் புனைந்தேன் | அவன் திருவடிகளை என் தலைமேலணிந்து கொண்டேன்; |
| ஆலின் இலை மேல் துயின்றான் | ஆலிலையில் கண் வளர்ந்தவனும், |
| இமையோர் வணங்க மலை மேல் தான் நின்று | நித்யஸூரிகள் வணங்கும்படி திருமலையிலெழுந்தருளி நின்று (ஸமயம் பார்த்து) |

| | | | |
|---|---|---|---|
| என் மனத்துள் இருந்தானை | என்னெஞ்சினுள்ளே புகுந்திருப்பவனுமான எம்பெருமானை | நிலை பேர்க்கல் ஆகாமை | இந்நிலையில் நின்றும் மாற்றவொண்ணாமையை |
| | | நிச்சித்திருந்தேன் | திண்ணமாக வெண்ணியிரா நின்றேன். |

***—அவன் திருவடிகளை நான் தலைமேல் புனைந்தபடி கிடக்கட்டும்; அவன்றான் என் ஹ்ருதயத்தினுள்ளே வந்து புகுகைக்கு க்ருஷிபண்ணினபடியையும் அந்தக்ருஷி பலித்த வாறே அவன் க்ருதக்ருத்யனாயிருக்கிறபடியையும் கண்டு நான் களிக்கின்றேனென்கிறார்.

**தலைமேல் புனைந்தேன் சரணங்கள்**-*ஆழியங்கண்ணா உன் கோலப்பாதம் அடிச்சியோந்தலைமிசை நீயணியாய்* என்று பிரார்த்தித்துப் போகையல்லாமல் திருவடிகளை என் தலைமேலே வைத்துக்கொள்ளப் பெற்றேன். *அமரர் சென்னிப்பூவான திருவடிகள் என் சென்னிப்பூவாம் படி சூடப்பெற்றேன். இப்பேறு எங்ஙனே வாய்த்ததென்ன, அவன்றன்னுடைய க்ருஷிபலித்தபடி யென்கிறார் மேல். 'இமையோர் வணங்க ஆலினிலைமேல் துயின்றான்; பிறகு மலைமேல் நின்றான். அதன்பிறகு என்மனத்துளிருந்தான்'' என்கிறார். இவ்விடத்து ஈட்டு ஸ்ரீஸூக்திகள் பரமபோக்யம்; அவை வருமாறு;–"[**ஆலினிலைமேல் துயின்றான்.**] தன்னைக்கொண்டு காரியமுடையார்சிலரைக் கண்டிலன்; எல்லார்க்குமாராய்ச்சிப்படும்படியான செயலைச்செய்வோமென்று பார்த்தான்; வேண்டாவென்பாரைக் கண்டதில்லை. அது ஸாத்மித்தவாறே நித்யஸூரிகளும் தானுமாகவந்து திருமலையிலே நின்றான்; அதுவும் ஸாத்மித்தவாறே இவருடைய ஹ்ருதயத்திலே வந்து புகுந்தான்; இந்த விலக்குவாரில்லாமையாலே ஸ்தாவரப்ரதிஷ்டையாக இருந்தான். *பணிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட்டோடிவந்து இவருடைய மனக்கடலிலே வாழப் புக்கான்.''

ஸ்ரீவசநபூஷணத்தில் (171.) "அங்குத்தை வாஸம் ஸாதனம்; இங்குத்தைவாஸம் ஸாத்யம். *கல்லுங் கனைகடலுமென்கிறபடியே இது ஸித்தித்தால் அவற்றில் ஆதரம் மட்டமாயிருக்கும்; *இளங்கோயில் கைவிடேலென்று இவன் ப்ரார்த்திக்கவேண்டும்படியாயிருக்கும். ப்ராப்யப்ரீதி விஷயத்வத்தாலும் க்ருதஜ்ஞதையாலும் பின்பு அவை அபிமதங்களாயிருக்கும்." என்றருளிச் செய்யப்படுகிறது. அதற்கு இப்பாசுரம் மூலகாரணமானது. அந்த ஸ்ரீஸூக்திகளின்கருத்தாவது. திவ்ய தேசங்களிற்காட்டிலும்ஞானிகளின் திருமேனியில் எம்பெருமான் பண்ணும் ஆதரம் அளவற்றது. எம்பெருமான் திவ்ய தேசங்களில் எழுந்தருளியிருப்பதானது தக்கவுபாயங்களாலே சேதநரை அகப்படுத்திக்கொள்ளுகைக்காக வாகையாலே அந்த திவ்யதேசவாஸம் ஸாதனம்; இந்தசேதநன் திருந்தி இவனுடைய ஹ்ருதயத்திலுள்ளே தான் வஸிக்கப்பெற்றவது அத்திவ்யதேச வாஸமாகிற க்ருஷியின் பயனாகையாலே ஞானிகளிடத்தில் வாஸமே எம்பெருமானுக்குப் பரமப்ரயோஜனம். ஆழ்வார்போல்வாருடைய உள்ளத்தில் எம்பெருமானுக்கு வாஸம் ஸித்தித்துவிட்டால் திருப்பாற்கடல் பரமபதம் முதலானவிடங்களில் அவனுக்கு ஆதரம் மட்டமாகுமென்பது *கல்லுங் கனைகடலும் வைகுந்த வானாடும் புல்லென்றொழிந்தன கொல் ஏபாவம்!, வெல்ல நெடியான் நிறங்கரியான் உள்புகுந்து நீங்கான், அடியேனதுள்ளத்தகம்*என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரத்தினால் விளங்கும். எம்பெருமான் புராதன திவ்யதேசங்களில் நெடுநாளாகப் பண்ணிக்கொண்டிருந்த ஆதரத்தைக் குலைத்துக்கொண்டு இன்று தன் ஹ்ருதயத்திலே அளவுகடந்த ஆதரத்தைப் பண்ணிக்கொண்டிருக்கும்படியைக் காணும் ஞானியானவன் "பிரானே! என்னுள்ளத்திலுள் புகுருகைக்கு பாலாலயம் போன்றிருந்த திருப்பாற்கடல் திருமலை முதலியவற்றை உபேக்ஷிக்கக் கூடாது" என்று எம்பெருமானை நோக்கிப் பிரார்த்திக்கவேண்டும்படியாகும். பரமபதம் திருப்பாற்கடல் அர்ச்சாவதாரங்கள் முதலிய ஸ்தானங்களிற் காட்டிலும் ஞானிகளின் ஹ்ருதயமே எம்பெருமானுக்

*குப் பரமபுருஷார்த்தமாகில் பரமபதம் முதலியவற்றை எம்பெருமான் விட்டுவிட வேண்டாவோ? அப்படிவிட்டுவிட்டதாகத் தெரியவில்லையே; அவற்றிலும் உகந்து வர்த்திப்பதாகத் தெரிகிறதே, இதற்கு ஹேதுவென்? என்னில்; எம்பெருமான் தனக்கு ப்ராப்யபூதரான ஞானிகள் அந்த ஸ்தலங்களிலே போரவுகப்புக் கொண்டிருப்பதனாலே அவர்கள் உகந்த ஸ்தலம் நமக்கு முத்தேச்யமாகவேணும் என்கிற எண்ணத்தினாலும், இத்தேசங்களில் நாம் வாஸஞ் செய்தபடியாலன்றோ நமக்கு ஞானிகளின் ஹ்ருதயத்தில் வாஸமாகிற மஹத்தான லாபம் கிடைத்தது என்கிற நன்றியுணர்ச்சியினாலும் எம்பெருமானுக்கு திவ்ய தேசவாஸமும் அபிமதமாகின்றது-என்பதாம். ஆக இவ்வர்த்த விசேஷங்கள் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகள் பலவற்றாலும் கிடைத்தாலும், இந்த 'மலைமேல்தான்னின்று என்மனத்துளிருந்தானை, நிலைபேர்க்கலாகாமை நிச்சித்திருந்தேனே'' என்கிற இப்பாசுரம் தலையான ப்ரமாணமாகும்.*

**நிலை பேர்க்கலாகாமை நிச்சித்திருந்தேன்**—*இவ்வளவு விருப்பத்தோடு வந்து சேர்ந்து பெறாப் பேறு பெற்றானாக நினைத்திருக்கிற எம்பெருமான்தான் நிலைபேரமாட்டா னென்பது திண்ணம்; இனி நம்மால் நிலைபேர்க்கலாமோ வென்னில், நாம் ப்ராதிகூல்யம் பண்ணுவது தானே நிலைபேர்த்தலாவது; அதற்கு இடமில்லாதபடி நெஞ்சைக் கொண்டிருக்கையாலே நம்மாலும் நிலைபேர்க்கலாகாது என்றதாயிற்று.* ... ... ... (4)

**நிச்சித்திருந்தேன் எனநெஞ்சங்கழியாமை***
**கைச்சக்கரத்தண்ணல் கள்வம்பெரிதுடையன்***
**மெச்சப்படான்பிறர்க்கு மெய்போலும்பொய்வல்லன்***
**நச்சப்படும் நமக்கு நாகத்தணையானே.** (5)

| | | | |
|---|---|---|---|
| என நெஞ்சம் கழியாமை | எனது நெஞ்சைவிட்டு அகலாதபடியான தன்மையை | பிறர்க்கு மெச்சப்படான் | பிறர்க்குத் தனது குணங்களைக் காட்டிக்கொடாதவனும் |
| நிச்சித்திருந்தேன் | நிச்சயித்திருந்தேன்; | மெய் போலும் பொய் வல்லன் | மெய் செய்வாரைப் போலே பொய் செய்ய வல்லவனும் |
| கை சக்கரத்து அண்ணல் | திருக்கையிலே திருவாழியைக் கொண்ட ஸ்வாமி | நாகத்து அணையான் | சேஷசாயியானவன் |
| கள்வம் பெரிது உடையன் | நாமறியாதன பலவும் பாரியா நின்றான்; | நமக்கு நச்சப்படும் | நமக்கு ப்ராப்யனானவன். |

****—இப்பாட்டில் ''கள்வம்பெரிதுடையன்'' என்பது உயிர்நிலையான வாசகமாயிருக்கும். அப்பெருமான் என்திறத்தில் செய்தருள நினைத்திருக்குமவை ஒருவராலறியப் போமோ? என்கிறார்.* **என நெஞ்சம் கழியாமை நிச்சித்திருந்தேன்**— *நீரிலே கிடந்தும் மலையுச்சியிலே நின்றும் அரிய தவம்புரிந்து வந்து என்னெஞ்சிலேயிருக்கையாலே இனி யொருகாலமும் விட்டுப் போகானென்று நிச்சயித்திருந்தேன். இது கீழ்ப்பாட்டிற் சொன்னதேயாகிலும் மீண்டுஞ் சொல்லுகிறது திடப்படுத்திச் சொல்லுகிறபடி.*

*நெஞ்சங் கழியாமைமாத்திரமன்று; இன்னமும் செய்ய நினைத்திருக்குமவை அபரிமிதமாகவுண்டென்கிறார் இரண்டாமடியால். அவை எவை யென்னில்; அர்ச்சிராதிமார்க்கத்தாலே கொண்டுபோகநினைப்பது, அமாநவ கரஸ்பர்சம் செய்விக்கநினைப்பது, மதிமுகமடந்தையரை வரக்காட்டி எதிர்கொள்ளப் பார்ப்பது ஆக இங்ஙனே அநேகம் எண்க. இந்த எண்ணங்களைக்* **கள்வம்** *என்கிற சொல்லாலே சொல்லுவானென்னென்னில்; இதைச்செய்யப் போகிறேனென்று வாய்விட்டுச் சொல்லாமே தன்னெஞ்சினுள்ளேயே ஏகாந்தமாகப் பாரிப்பது பற்றிக்* **கள்வ** *மென்கிறது. அப்படி ஏகாந்தமாகப் பாரித்தானாகில் அதை ஆழ்வார் தாமறிந்தபடி யென்னென்னில்; அகத்தை முகத்திலே யறியவல்லவரன்றோ ஆழ்வார். ஆச்ரிதரை யொருகாலும் கைவிடாதவனென்கைக்காகக்* **கைச்சக்கரத் தண்ணல்** *என்றது.*

**பிறர்க்கு மெச்சப்படான்**—தான் தன் குணங்களைச் சொல்லிப்புகழுகிறப்போலே பிறர் தன் குணங்களைச் சொல்லிப் புகழலாம்படியிராதவன் என்றபடி. இப்போது இது சொல்லுகிறது எதற்காகவென்னில்; ஆழ்வார் விஷயத்திலே அவன் பார்ப்பது ஸர்வஸாதாரணமானது என்கைக்காக. *பத்துடையடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன் *என்றதுங்காண்க.

**மெய்போலும் பொய்வல்லன்**—மெய்யென்று நினைக்கும்படியான பொய்யிலே வல்லவன், இங்கே ஈடு:—“அர்ஜுநாதிகள் பக்கலிருக்குமா போலேயிறே துர்யோதநாதிகள் பக்கலிலுமிருப்பது; கார்யத்தில் வந்தால் மெய்செய்வாரைப் போலே பொய்செய்து தலைக் கட்டும்” என்று. அடியார்களுக்கு மெய்யே செய்யுமா போலே பிறர்க்குப் பொய்யே செய்ய வல்லவன் என்பது பரமதாற்பரியம். **நச்சப்படும் நமக்கு**—நமக்கு நச்சப்படும் என்று அந்வயம்; உகவாதார் விஷயத்தில் செய்வதை நம் பக்கலில் செய்யானென்றபடி. இதற்கொரு த்ருஷ்டாந்தம் காட்டுகிறார் **நாகத்தணையானே** யென்று. நம்மிலே யொருவனான திருநீறனா தாழ்வான்பக்கல் பரிமாறுகிறபடி கண்டால் அப்பரிமாற்றம் நமக்கும் ப்ராப்தமாகுமெவன் நம்பியிருக்கத் தட்டுண்டோ வென்றாராயிற்று. ... ... (5)

நாகத்தணையானை நாள்தோறும்ஞானத்தால்*
ஆகத்தணைப்பார்க்கு அருள்செய்யுமம்மானை*
மாகத்திளமதியஞ் சேருஞ்சடையானை*
பாகத்துவைத்தான்தன் பாதம்பணிந்தேனே. (6)

| | | | |
|---|---|---|---|
| நாகம் அணையானை | சேஷசயனனை | மாகத்து இள மதியம் சேரும் சடையானை | ஆகாசத்திலுள்ள இளம்பிறை தங்குகின்ற சடையையுடைய சிவனை |
| ஞானத்தால் ஆகத்து அணைப்பார்க்கு | பக்தியாக வடிவெடுத்த ஞானத்தினால் நெஞ்சிலே வைத்து அநுபவிக்கும் முமுக்ஷுக்களுக்கு | பாகத்து வைத்தான் தன் | தன் திருமேனியிலொரு பக்கத்திலே வைத்தவனான பகவானுடைய |
| நாள்தோறும் | எப்போதும் | | |
| அருள் செய்யும் அம்மானை | அருள் செய்கின்ற ஸ்வாமியாய் | பாதம் பணிந்தேன் | திருவடிகளை வணங்கப்பெற்றேன். |

*** இன்று வந்து அடிமைபுக்காரையும் “அல்வழக்கொன்று மில்லாவணி கோட்டியர் கோனபிமானதுங்கன் செல்வனைப் போலத் திருமாலே நானுமுனக்குப் பழவடியேன்” என்று சொல்லும்படி நித்யஸூரிகளைப் போலே விஷயீகரிக்குமவன் திருவடிகளிலே விழப்பெற்றே னென்கிறார். **நாகத்தணையானை**-உகந்தாரைப் படுக்கையாகக் கொள்ளுமவன் என்பது தாற்பரியம். **ஞானத்தால் ஆகத்தணைப்பார்க்கு நாடோறும் அருள் செய்யுமம்மானை**—“ஸேமுஷீ பக்திரூபா” என்று ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச் செய்தபடியே பக்தியை ஞானமென்கிறது இங்கு. பக்தியாலே ஹ்ருதயத்திலே கொண்டு சேர்ப்பார்க்கு நாள் தோறும் அருள் செய்யுமவனென்கை. *தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம், ததாமி புத்தியோகம் தம் யேந மாம் உபயாந்தி தே *என்கிற கீதாவசனம் இங்கே சேர்த்துக் கொள்ளத்தக்கது. **நாடோறும்** என்பதை ஆகத்தணைப்பார்க்கென்பதிலே கூட்டி ‘ஸர்வகாலமும் பக்திசெய்ய வல்லவர்களுக்கு அருள் செய்யுமவன்’ என்று பொருள் சொல்லலாமானாலும் அது சுவைக்கேடு; “இவனால் எப்போதும் நினைக்கப்போகாதே; அக்குறை தீர ஏகரூபனான தான் நாள்தோறும் அருள் செய்யுமாய்த்து” என்பது ஈடு. நாம் செய்யும் கலம் ஸக்ருத்தானாலும் அதற்கு அவன் செய்தருளுமது அஸக்ருத்தாயிருக்குமென்க.

**மாகத்திளமதியஞ் சேருஞ்சடையானைப் பாகத்துவைத்தா**னென்று எம்பெருமான்றனது சீலம் சொல்லுகிறது. மூன்றாமடியினால் **சந்த்ர மௌலீச்வர**னென்கிற சிவனது பெயர் விவரிக்கப் பட்டது. அவனைப் **பாகத்து வைத்தான்**—அவனுக்குத் தன் திருமேனியிலே ஒரு பாகத்திலே இடங்கொடுத்தவனென்று சீல குணாநுபவமிருக்கிறபடி. ஆக இப்படிப்பட்ட எம்பெருமானுடைய பாதம் பணிந்தேன். ... ... (6)

பணிநெஞ்சே்நாளும் பரமபரம்பரனை*
பிணியொன்றுஞ்சாரா பிறவிகெடுத்தாளும்*
மணிநின்றசோதி மதுசூதன் என்னம்மான்*
அணிநின்றசெம்பொன் அடலாழியானே. (7)

| | | | |
|---|---|---|---|
| மணி நின்ற சோதி | நீலரத்னத்தை யொத்த தேஜஸ்ஸை யுடையனாய் | பிறவி கெடுத்து ஆளும் | நம்பிறவித் துன்பத்தைப் போக்கி அடிமைகொண்டருள்பவன்; |
| மதுசூதன் | விரோதி நிரஸந சீலனாய் | பிணி ஒன்றும் சாரா | ஸம்ஸாரக்லேசமொன்றும் தட்டாது; |
| என் அம்மான் | அஸ்மத் ஸ்வாமியாய் | | (ஆனபின்பு) |
| அணி நின்ற செம்பொன் அடல் ஆழியான் | தானே ஆபரணமாகப் போரும்படியாய்ச் சிவந்த பொன்போலே ஸ்ப்ருஹணீயனாய் மிடுக்கையுடையனான திருவாழியாழ்வானைக் கையிலேந்தினவனான பெருமான் | பரமபரம்பரனை நெஞ்சே நாளும் பணி | அப் பரமபுருஷனை நெஞ்சமே! நித்யமும் வணங்கி யநுபவி. |

*** நம் விரோதிகளைப் போக்கி அடிமைகொள்ளுமவனை அப்பெருமானை இடைவீடின்றியநுபவிக்குமாறு திருவுள்ளத்தை நோக்கியருளிச் செய்கிறார். நெஞ்சே! **பரமபரம்பரனை நாளும்பணி**-நெஞ்சே! நல்ல வாய்ப்பாயிருந்தது, நாள்தோறுமநுபவிக்கப் பார்; இந்திரன் முதலானோர்க்கு மேற்பட்டவர்களான (பிரமன் முதலானோர்க்கும் மேற்பட்டவர்களான) நித்யஸூரிகளுக்குத் தலைவனை நாளுமநுபவிக்கப்பார். **பிணியொன்றும் சாரா**-துக்கங்களொன்றும் நம்மை வந்து கிட்டாது. **பிறவி கெடுத்து ஆளும்**-அந்த துக்கங்களுக்கு அடியான ஜன்மத்தை அடிவேரோடே போக்கி நம்மை நித்திய கைங்கரியம்கொள்ளுமவன். **மணி நின்ற சோதி**—துக்கங்களையும் துக்கஹேதுவான ஜன்மத்தையும் போக்குகின்றிலன் என்றே வைத்துக்கொள்வோம்; அப்படியானாலும் விடவொண்ணாத வடிவழகு படைத்தவன். நீலமணியிலொளியை வடிவாக வகுத்தாற்போலேயிருக்கிற வடிவையுடையவன். **மதுசூதன்**—மதுகைடபர்களைக் கொன்றானென்பது மாத்திரம் இங்கு விவக்ஷிதமன்று; கீழ்ச் சொன்ன வடிவழகை யநுபவிப்பார்க்கு வரும் விரோதிகளை மதுகைடபர்களைப் போக்கினாப் போலே தள்ளிக் கொடுக்குமவன் என்று விவக்ஷிதம்.

**அணிநின்ற செம்பொனடலாழியானே**—கையுந்திருவாழியுமான அழகை நமக்கு அநுபவிக்கக் கொடுப்பானென்று கருத்து. ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை நெஞ்சே! நாளும் பணி என்றாராயிற்று. ... ... (7)

ஆழியான் ஆழியமரர்க்குமப்பாலான்*
ஊழியான்ஊழிபடைத்தான் நிரைமேய்த்தான்*
பாழியந்தோளால் வரையெடுத்தான்பாதங்கள்*
வாழியென்நெஞ்சே! மறவாதுவாழ்கண்டாய். (8)

| | | | |
|---|---|---|---|
| ஆழியான் | சக்ரபாணியாய் | பாழிஅம்தோளால் வரை எடுத்தான் | மிடுக்குடைய அழகிய திருத்தோளாலே மலையை யெடுத்துக் காத்தவனை பெருமானுடைய |
| ஆழி அமரர்க்கும் அப்பாலான் | கம்பீரர்களான நித்ய ஸூரிகளுக்கும் நிலமலலாத மேன்மையையுடையனாய் | | |
| ஊழியான் | ப்ரளய காலத்தில் தானொருவனேயுளனாய் | பாதங்கள் | திருவடிகளை |
| ஊழிபடைத்தான் | காலம் முதலிய ஸகல பதார்த்தங்களையும் ஸங்கல்பித்தவனாய் | என் நெஞ்சே மறவாது வாழ் கண்டாய் | என்மனமே! ஒருபோதும் மறவாமல் நித்யாநுபவம் பண்ணி வாழ்வாயாக; |
| நிரைமேய்த்தான் | பசுக்களை ரக்ஷித்தவனாய் (அப்பசுக்களுக்கு ஆபத்து வந்த போது) | | |
| | | வாழி | இவ்வாழ்ச்சி நித்யமாயிடுக. |

***—கீழ்ப்பாட்டில் "பணி நெஞ்சே! நாளும்" என்றவாறே உகந்திருந்தது நெஞ்சு; அதனைக் கொண்டாடி அவனை இடைவிடாதே அநுபவியென்கிறார். **ஆழியான்**—ஸர்வேச்வரத்வ ஸூசகமான திருவாழியைக் கையிலேயுடையவன். **ஆழியமரர்க்கு மப்பாலான்**—கம்பீரமான ஸ்வபாவத்தையுடையவர்களான நித்யஸூரிகளின் ஸ்வரூபம் ஸ்திதி முதலியனவும் தன்னதீன மாம்படியிருக்குமவன். **ஊழியான்**—ஸம்ஹாரஸமயத்திலுளனாயிருக்குமவனென்றபடி. இதற்கு ஈடு "நித்திய ஸூரிகளும் தானுமாய்ப் பரமபதத்திலே பேரோலக்கமாக இருக்குமவன் இங்குண்டான கார்யவர்க்க மடங்கலுமழிந்து காலசேஷமான காலத்திலே தான் வந்து தோற்றுமவன்,"

**ஊழி படைத்தான்**—ஊழியென்று காலத்திற்குப் பெயர்; அது உபலக்ஷணமாகி ஸகல பதார்த்தங்களையும் சொல்லக்கடவது; எல்லாவற்றையும் "பஹுஸ்யாம்" என்கிற ஸங்கல்பத் தாலேயுண்டாக்கினவன் என்க. **நிரை மேய்த்தான்**—இப்படி ஸகல பதார்த்தங்களையும் தானே படைப்பவனாயிருக்கச் செய்தேயும், தன்னைப்படைப்பாரும் சிலருண்டு என்று காட்டிக்கொண்டு வஸுதேவாத்மஜன் நந்தநந்தனன் என்றிப்படி பெயர் பெற்று வந்து, கோபாலக்ருஷ்ணனாய்ப் பசுக்களை மேய்க்குமவன். "நிரை மேய்த்தான்" என்பதனாலே தெரிவிக்கப்படுகிற சாஸ்த்ரார்த்த மொன்றுண்டு; அதனை நம்பிள்ளை காட்டியருளுகிறார் காண்மின்—"ஸ்வரக்ஷணத்தில் அந்வயமின்றிக்கே, பண்ணும் ரக்ஷணத்தை விலக்காத பசுக்களை ரக்ஷித்தவன்" என்று. பகவத் ப்ரவ்ருத்தி விரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியுடையவர்களை ரக்ஷித்தருள்பவனென்றவாறு.

**பாழியந்தோளால் வரையெடுத்தான்**—இப்படி பசுக்களை மேய்த்து வருகையில் இந்திரன் பசிக்கோபத்தாலே ஏழுநாள் விடாமழை பெய்வித்து ஆயர்கட்கும் ஆநிரைகட்கும் தீங்கைவிளைக்க அப்போது மலையைக் குடையாக வெடுத்து நோக்கினவன். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானுடைய, **பாதங்கள் என்னெஞ்சே மறவாது வாழ்கண்டாய்**—திருவடிகளை, எனக்கு விதேயமாய் எனக்குத் துணையாயிருக்கிற நெஞ்சே! கைப் புகுந்த வஸ்துவை உபேக்ஷிக்கிற பழக்க மொன்றுண்டே, அதை இவ்விஷயத்திலும்செய்யாமல் நித்யாநுபவம் பண்ணிக் களிக்கப்பார். இடையிலே **வாழி** யென்று நெஞ்சுக்கு மங்களாசாஸனம் பண்ணுகிறார் ஸந்தோஷாதிசயத்தாலே ... ... ... (8)

கண்டேன்கமலமலர்ப்பாதம் காண்டலுமே*
விண்டேயொழிந்த வினையாயினவெல்லாம்*
தொண்டேசெய்தென்றுந் தொழுதுவழியொழுக*
பண்டேபரமன்பணித்தபணிவகையே. (9)

தொண்டே செய்து — பரபக்தி முதலியவற்றைப் பண்ணி
என்றும் தொழுது வழியொழுக — நித்திய கைங்கரியத்தைச் செய்து அதுவே யாத்திரையாய்ச் சொல்லும்படி
பண்டே — ஏற்கெனவே [கீதாசார்யனை வப்போதே]
பரமன் பணித்த பணி வகையே — ஸர்வேச்வரன் (ஸர்வஸாதாரணமாக) அருளிச் செய்த பாசுரத்தின்படியே
கமலம் மலர் பாதம் கண்டேன் — (அவன்றனது) பாதாரவிந்தங்களைக் காணப்பெற்றேன்;
காண்டலுமே — கண்டபோதே
வினை ஆயின எல்லாம் — விரோதியென்று பேர் பெற்றவை யெல்லாம்
விண்டே ஒழிந்த — வாஸனைபோடே விட்டுப் போயின.

***—"ஜந்மாந்தர ஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதிபி:; நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே" என்றும், "ஒன்றி யொன்றி நற்றவஞ் செய்து ஊழியூழிதோறெலாம் நின்று நின்றவன் குணங்களுள்ளி யுள்ளந் தூயராய், சென்று சென்று தேவதேவர் உம்பரும்பருமபராய், அன்றி யெங்கள் செங்கண்மாலை யாவர்காண வல்லரே" என்றும் சொல்லுகிறபடியே நெடுங்காலம் பரிச்ரமப்பட்டுப் பெறவேண்டுமவனை அவனுடைய நிர்ஹேதுக க்ருபையாலே காணப் பெற்றேனென்கிறார். **கமல மலர்ப்பாதம் கண்டேன்**—என்னுறக்கும் கேட்டேபோம் விஷயத்தைக் கண்ணாலே ஸாக்ஷாத்கரிக்கப் பெற்றேன். **காண்டலுமே**—அப்படி ஸாக்ஷாத்கரித்தவளவிலே, **வினையாயினவெல்லாம் விண்டே யொழிந்த**—"அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்ற அவனுடைய ப்ரதிஜ்ஞை பலித்ததாயிற்று. ஒழிந்த என்றது ஒழிந்தன வென்றபடி. "ஙிச்சாலே, நீயும் வேண்டா நானும் வேண்டா, அவை தன்னடையே விட்டுப்போம்..." என்ற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தி இவ்விடத்திற்குச் சார்பாக அநுஸந்திக்கத்தக்கது.

முன்னடிகளிற் சொன்ன விஷயத்திற்குப் பின்னடிகளால் ப்ரமாணங்காட்டியருளுகிறார் ஆழ்வார்தாமே. "பண்டேபரமன் பணித்த பணிவகையே" என்றது சரமச் லோகத்தைக் கணிசித்தே. "பரமன் ஞானவிதி பணிவகை யென்று இவரங்கீகாரத்தாலே அதுக்கு உத்கர்ஷம்" என்ற ஆசார்யஹ்ருதய சூர்ணை இங்கு அநுஸந்தேயம். அந்த சரமச்லோகத்தில் **"ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி"** என்று பாபங்களைப் போக்குவது மாத்திரம் சொல்லப்பட்டுள்ளதேயன்றி ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யவ்ருத்தியைக் கொடுப்பதாகவும் சொல்லிற்றில்லை; ஆனாலும் அதுவும் கண்ணபிரானுக்கு விவக்ஷிதமே யென்று அறியறிந்தவிவர் "தொண்டே செய்தென்றுந் தொழுது வழி யொழுக" என்று விளங்க வைத்தருளினர். ஸ்வரூபம் நித்யமான பின்பு ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியும் நித்யமாய்ச் செல்ல வேண்டுமன்றோ. ... ... ... ... ... (9)

வகையால்மனமொன்றி மாதவனை* நாளும்*
புகையால்விளக்கால் புதுமலரால்நீரால்*
திசைதோறமரர்கள் சென்றிறைஞ்சநின்ற*
தகையான்சரணம் தமர்கட்கோர்பற்றே. (10)

வகையால் மனம் ஒன்றி — சாஸ்திரங்களிற் சொல்லுகிறபடியே நெஞ்சையொருங்கப் பிடித்து
மாதவனை — திருமாலான தன்னை
நாளும் — காலந்தோறும்
புதி புகையால் விளக்கால் மலரால் நீரால் — விலக்ஷணமான தூப தீப புஷ்ப தீர்த்தங்களாலே
திசை தோறு அமரர்கள் சென்று இறைஞ்ச நின்ற — நின்ற நின்ற திக்குக்கள் தோறும் பிரமன் முதலிய தேவர்கள் வந்து பணியும்படியான
தகையான் — ஸ்வபாவத்தையுடையனான எம்பெருமானுடைய
சரணம் — திருவடிகள்
தமர்கட்கு ஓர் பற்று — பக்தர்களுக்குச் சிறந்த புகலிடம்.

***—ப்ரயோஜநாந்தர பரர்களோ, உபாயாந்தர நிஷ்டர்களோ, ப்ரபந்நர்களோ யாராயினும் யாவர்க்கும் எம்பெருமானே உபாயமென்று தலைக்கட்டுகிறார். **வகையால்** என்றது சரமச்லோகத்தில் சொல்லப்பட்ட வகையிலே யென்றபடி. உபாஸநசாஸ்த்ரங்களிலும் ப்ரபத்தி சாஸ்த்ரங்களிலும் சொல்லப்பட்ட படியே யென்றுமாம். **மனம் ஒன்றி**—நெஞ்சு ஒருமைப்பட்டு. அந்த:கரணத்தை நியமித்து எம்பெருமானொருவனிடத்திலேயே தத்பரமாக்கியென்க. **மாதவனை**—புருஷகாரக்ருத்யம் பண்ணிக் கூட்டுமவளோடே கூடியிருக்கிறவனையென்றபடி. சரமச் லோகத்தில் லக்ஷ்மீஸம்பந்தம் வ்யக்தமாக இல்லையாகிலும் பூர்வார்த்தத்தில் **மாம்** என்றதிலே. உத்தரார்த்தத்தில் **அஹம்** என்றதிலே அது அநுஸந்தேயமென்று ஆழ்வார்க்குத் திருவுள்ளம். ரஹஸ்யத்ரயத்திலே மத்யமரஹஸ்யமான த்வயத்திலே வ்யக்தமாகச் சொன்னவிது மற்றையிரண்டு ரஹஸ்யங்களிலும் ஆர்த்தமாக நின்றது.

**நாளும் புகையால் விளக்கால் புதுமலரால் நீரால் திசைதோறு அமரர்கள் சென்றிறைஞ்ச நின்ற தகையான்**-கால நியமமில்லாமலும், ஆராதநோபகரணங்களிலும் நியமமில்லாமலும் தங்களுக்குக் கைவந்த பூஜாபரிகரங்களைக்கொண்டு பிரமன் முதலான தேவர்கள் வந்து பணியும்படியான பெருமையையுடையவன்; அவனுடைய **சரணமே தமர்கட்கு ஓர் பற்று**—தன் திருவடிகளைப் பற்றினோர்க்குப் பின்னையும் புறம்புபோய் ஒருபற்றுத் தேடவேண்டாத திடமானபற்று என்றபடி.

"மாதவனை" என்ற சொல் இப்பாட்டில் செவ்வனே அந்வயிக்க முடியாதபடியுள்ளது. ஏனெனில் (இச்சொல்லில் விவக்ஷிதனான எம்பெருமானே) மேல் "சென்றிறைஞ்ச நின்ற தகையான்" என்றவிடத்தும் விவக்ஷிதனாயிருக்கையாலே ஏகவாக்யத்தில் ஏகவ்யக்திவிஷயமாக விபக்திபேதம் பொருந்தாது; ஆகவே, மாதவனையென்றவிடத்துள்ள ஐகாரத்தைச் சாரியையாகத்தள்ளி,......"அமரர்கள் சென்றிறைஞ்ச நின்ற தகையானை மாதவன் சரணம் தமர்கட்கோர் பற்றே' என்றோ "மாதவனை தகையான் சரணம்..." என்றோ அந்வயிக்கப்ராப்தம். (10)

பற்றென்றுபற்றிப் பரமபரம்பரனை*
மல்திண்டோள்மாலை வழுதிவளநாடன்*
சொல்தொடையந்தாதிஓராயிரத்துளிப்பத்தும்*
கற்றார்க்கோர்பற்றாகுங் கண்ணன்கழலிணையே,

| | | | |
|---|---|---|---|
| பரம பரம்பரனை | பராத்பரனையும் | வழுதி வளநாடன் சொல் | ஆழ்வார் அருளிச் செய்த |
| மல் திண், தோள் | மிடுக்கும் பொருந்திய திருத்தோள்களையுடையனு யுமிருக்கிற | தொடை அந்தாதி ஓர் ஆயிரத்துள் | அந்தாதித் தொடையான ஆயிரத்திலுள் |
| மாலை | ஸர்வேச்வரனை | இப் பத்தும் கற்றார்க்கு | இப்பதிகத்தைப் பயின்றவர்களுக்கு |
| பற்று என்று பற்றி | தமக்குப் புகலாக வறுதியிட்டு | கண்ணன் கழல் இணை ஓர் பற்று | கண்ணனது உபயபாதங்கள் |
| | | ஆகும் | ஒப்பற்ற ப்ராப்யமாகும். |

***இத் திருவாய்மொழியைக் கற்றார்க்கு எம்பெருமான் திருவடிகள் ஸுலபமாமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். **பரமபரம்பர** னென்பதனால் ஸர்வேச்வரத்வஞ் சொல்லுகிறது; **மல்திண்டோள்மா** லென்பதனால் விரோதிகளைப்போக்குகைக் கீடான மிடுக்குடைமையும் அடியார் திறத்து வியாமோஹமுடைமையும் சொல்லுகிறது, ... ... (11)

நான்காந் திருவாய்மொழி முற்றிற்று.

ஆழ்வாரெம் பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஐந்தாவது திருவாய்மொழி—கண்ணன் கழலிணை.

**உரையவதாரிகை :**—முதற்பத்தில் * வீடுமின் முற்றவுமென்கிற பதிகத்திலே பரோபதேசம் பண்ணத் தொடங்கின வாழ்வார் பத்துத்தோறும் உபதேசபரமான பதிகம் அருளிச்செய்துவந்து, இப்பதிகத்தோடே பரோபதேசத்தைத் தலைக்கட்டுகிறாராயிற்று. பெரியார்கள் தாங்கள் திருநாட்டுக்கெழுந்தருளும் சரம ஸமயத்திலே அந்தரங்கரானார்க்கு அருமையான சில வுபதேசங்களைச் செய்து போவதுண்டு. அதற்குச் சரம ஸந்தேசமென்று பெயர். இப்பதிகமும் அதுவாயிரா நின்றது. எம்பெருமானே ஆழ்வாரைத் திருநாட்டுக்குக் கொண்டு போக விரையாநின்றான்; ஆழ்வாரும் இனி நமக்கு ப்ராப்தி தப்பாதென்று துணிவு கொண்டார். இவர்தாம் ஸம்ஸாரிகள் பக்கலிலே பரம கருணையே வடிவெடுத்தவராகையாலே, ஸம்ஸாரிகளுக்கு இதுகாறும் வேண்டியபடி உபதேசங்கள் செய்தருளியிருந்தாலும், விபீஷணாழ்வான் ராவண பவனத்தை விட்டுப் பெருமாள்திருவடியேறப் போவதாகக் கிளம்பின பின்பும் "நசயந்தமுபேக்ஷயம் ப்ரதீப்தம் சரணம் யதா" என்று சொல்லிப் பின்னையும் உபதேசிக்கவொருப்பட்டாப்போலே இவரும் சரமோபதேசம் செய்து நிகமித்தருளுகிறார்.

இவர்தாம் பெரிய திருவந்தாதியில்*ஆரானுமாதானுஞ் செய்க, அகலிடத்தையாராய்ந்து அது திருத்தலாவதே!* என்று, ஸம்ஸாரிகளுக்கு உபதேசிப்பது கஷ்டம் கஷ்டம். இது நம்மாலாகாது என்று சொல்லியிருந்தும் * பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத்திருத்திப் பணி கொள்ளவே தாம் அவதரித்தபடியைத் திருவுள்ளம் பற்றி *சொன்னால் விரோதமிதுவாகிலுஞ் சொல்லுவன் கேண்மினோவென்று உபதேசத்தில் ருசி குலையாமே போந்தவர் *மண்ணவர்க்குத் தானுபதேசிக்கை தலைக்கட்டினான் மாறன்* என்று நூற்றந்தாதியில் மணவாள மாமுனிகளருளிச் செய்தபடியே அவ்வுபதேசத்தை இப்பதிகத்தோடு தலைக்கட்டுகிறாராயிற்று.

ஆசார்ய ஹ்ருதயத்தில் "எண்பெருக்கிலெண்ணுந் திருநாமத்தின் சப்தார்த்தங்களைச் சுருக்கி மாதவனென்று த்வயமாக்கிக் கரணத்ரய ப்ரயோக வ்ருத்தி ஸம்ஸாரிகளுக்குக் கையோலை செய்து கொடுத்து" (228) என்றருளிச் செய்ததும் இங்கே அநுஸந்தேயம்...*

கண்ணன்கழலிணை நண்ணும்மனமுடையீர் !*
எண்ணுந்திருநாமம் திண்ணம்நாரணமே. (1)

| | | | |
|---|---|---|---|
| கண்ணன் கழல் இணை | அடியவர்க்கெளியனான பெருமானது திருவடியிணைகளை | எண்ணும் திருநாமம் | (நீங்கள்) சிந்திக்க வேண்டிய திருநாமம் |
| நண்ணும் மனம் உடையீர் | அடையவேணுமென்கிற நெஞ்சையுடையவர்களே! | நாரணம் ஏ திண்ணம் | நாராயணமே; மற்றொன்றில்லை யென்பது திடம். |

** முதலிலே *வீடுமின் முற்றத்தில் "எண் பெருக்கந்நலத்தொண் பொருளீறில வண்புகழ் நாரணன்" என்று பஜனத்திற்கு ஆலம்பனமாகச் சொல்லப்பட்டதான மந்த்ரத்தை *எண்ணுந் திருநாமம் திண்ணம் நாரணமே * என்று காட்டுகிறார். 'கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர் !* என்று விளிக்கையாலே *ச்ரத்தைவ காரணம் பும்ஸாம் அஷ்டாக்ஷர பரிக்ரஹே* என்னுமாபோலே எம்பெருமான் திருவடிகளை யடைய வேணு

மென்கிற ருசிக்கு மேற்பட வேறோர் அதிகாரமில்லையென்றும், அந்த ருசியுடையாரெல்லா ரும் அதிகாரிகளேயென்றும் காட்டப் பட்டதாயிற்று. "தோல்புரையே போமதுக்குப் பழுதிலா போக்யதை வேணும்; மனமுடையீரென்கிற ச்ரத்தையே அமைந்த மர்மஸ்பர்சிக்கு நாளும் நமருமென்னுமபடி ஸர்வரு மதிகாரிகள்" என்கிற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையும் அதன் வியாக்கியானமுமிங்குக் காணத்தக்கன. மனமுடையீர்! என்றது நிதியுடையீரென்னுமா போலேயிராநின்றது. எம்பெருமானது திருவடிகளைச் சேரப்பெறவேணுமென்கிற மனம் ஒருவர்க்குண்டாகில் நிதியுடையபேரவர். இங்கே ஈடு;—"இதுக்கு அதிகார ஸம்பத்தி தேட வேண்டா; ருசியுடையாரெல்லாரு மதிகாரிகள்; ஸ்வர்க்க பலமானதுக்கு அதிகாரி நியதியும் ப்ராயச்சித்தமும் வேண்டா நின்றது; அபுநராவ்ருத்தி லக்ஷண மோக்ஷத்துக்கு அது வேண்டாதொழிகிறது, ப்ராப்யத்துக்கு அநுரூபமான அதிகாரம் இவனால் ஸம்பாதிக்க முடியாமையாலே." என்று. உண்மையில் மிகச் சிறந்த புருஷார்த்தமானவிதற்கு அபரிமித மான யோக்யதைகள் வேண்டியதுதான்; ஆனால் அதில் ஏகதேசமும் ஒருவராலும் ஸம்பா தித்துக்கொள்ள முடியாமையாலே மனமுடைமைதானே போதுமென்கிறது என்றதாயிற்று.

எம்பெருமான்கழலிணையென்று சொல்லவேண்டு மிடத்து வேறு திருநாமங்களை யிடாதே கண்ணனென்ற திருநாமத்தை யிட்டபடியாலே, ஸர்வஸுலபனானவனுடைய திருவடிகளாகையால் பெறுதற்கு எளியவையென்பது காட்டப்பட்டது. அடியார்கட்காகத் தூதுபோயும் ஸாரத்யம் பண்ணியும் ஸர்வாத்மநா ஸௌலப்யத்தைக் காட்டினவனுடைய திருவடிகளன்றோ.

**எண்ணுந் திருநாமம் திண்ணம் நாரணமே**—முமுக்ஷுக்களான வுங்களுக்கு எப்போது மநுஸந்திக்கப்படவேண்டிய திருநாமம் நாராயண சப்தமே; இதொழிய வேறொன்றுமில்லை. "எண்ணும் திருமந்த்ரம்" என்னாதே திருநாமமென்றது—இதுக்கு ஓர் அதிகாரி நியமம் அங்க நியமம் வேண்டா; குழந்தை தாய்பேரைச் சொல்லுமாபோலே சொல்ல வமையும் என்கைக்காக. அம்மே யென்கைக்கு எல்லாரு மதிகாரிகளன்றோ. கனத்த பேற்றுக்கு இவ்வளவு போதுமோவென்று சிலர் சங்கிக்கக் கூடுமென்று நினைத்துத் **திண்ண** மென்கிறார். *ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யமுத்த்ருத்ய புஜமுச்யதே* என்னுமாபோலே. ப்ரணவம் நமஸ்ஸு சதுர்த்தி இவையொழியவும் நாராயண சப்தமாத்ரமே போதுமென்கிறார். '**நாராயண**' என்றுகூடச் சொல்லாமல் **நாரணம்** என்று குறைத்துச் சொல்லி யிருப்பதுபற்றி நம்பிள்ளை யருளிச் செய்வது பாரீர்; "நாரணமென்று இல்லாத மகாரத்தைக் கூட்டி உள்ள வற்றைக் குறைத்துச் சொல்லுகையாலே அளத்தில் பட்டதெல்லாம் உப்பாமாப்போலே இத் தோடே கூடினதெல்லாம் உத்தேச்யமென்றும், குறைந்தாலும் அங்கம் தப்பிற்று ஸ்வரம் தப்பிற்றென்று ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸாய்ப் போகவேண்டுமவற்றிற் காட்டில் இதுக்குண்டான வாசி சொல்லுகிறதாயிற்று" என்று. ... ... ... (1)

நாரணனெம்மான் பாரணங்காளன்*
வாரணந்தொலைத்த காரணன்தானே. (2)

| | | | |
|---|---|---|---|
| நாரணன் எம்மான் | நாராயணனாய் எமக்கு ஸ்வாமியானவன் | | (அன்றியும்) |
| பார் அணங்கு ஆளன் | பூமிப் பிராட்டிக்கு நாயகன்; | வாரணம் தொலைத்த | கம்ஸனது மத யானையை முடித்தருளின |
| | | காரணன் தானே | ஜகத்காரண பூதனும் அவனே. |

***..."எண்பெருக்கி லெண்ணுந் திருநாமத்தின் சப்தார்த்தங்களைச் சுருக்கி" என்ற ஆசார்யஹ்ருதய சூர்ணையின்படி கீழ்ப்பாட்டில் நாரணமென்று சப்தம் சுருக்கப்பட்டது. இப்

காட்டிலும் மேற்பாட்டிலுமாக அர்த்தம் சுருக்கப்படுகிறது. ஆழ்வார்களுக்குத் திருமந்த்ரம் (அல்லது நாராயணத் திருநாமம்)ஸ்ம்ருதி விஷயமானால் உடனே அதன் அர்த்தத்தையும் ஒருபடி அநுஸந்தித்தே தீருவர்கள். முன்னே அர்த்தத்தைச் சொல்லிப் பின்னே சப்தத்தைச் சொல்லுவதோ, முன்னே சப்தத்தைச் சொல்லிப் பின்னே அர்த்தத்தைச் சொல்லுவதோ இரண்டத்தொன்று நிகழ்ந்து தீரும். இங்கு, முன்னே சப்தாநு ஸந்தானமாயிற்று; இப்போது அர்த்தாநுபவமாகிறது, அர்த்தம் உபந்யஸிப்பதற்காக மீண்டும் சப்தத்தை உபாதானம் பண்ணுகிறார் **நாரணன்** என்று. இதற்கு அர்த்தம்—எம்மான் பாரணங்காளன் என்று. **பாரணங்கு**-பூமிப்பிராட்டி; (அணங்கு-தெய்வப்பெண், "சூருமணங்கும் தெய்வப்பெண்ணே' என்பது நிகண்டு.) பூமிப்பிராட்டிக்கு வல்லபனென்று சொன்னவிது, பெரிய பிராட்டியார் தொடக்கமான மஹிஷிவர்க்கங்களையெல்லாம் சொன்னபடியாய் நித்ய ஸூரிகளையும் விவக்ஷித்ததாகி நித்ய விபூதி நாதனென்றபடியாம். **எம்மானென்று** லீலா விபூதி நாதத்வம் சொன்னதாகக் கொள்க: ஆக, உபய விபூதி நாதனென்றதாயிற்று. திருவஷ்டாக்ஷர மஹா மந்த்ரத்தில் லக்ஷ்மீ ஸம்பந்தம் ஸ்பஷ்டமாகச் சொல்லிற்றில்லையாகிலும் "ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸந்நிதி வேண்டுகையாலே இதிலே ஸ்ரீ ஸம்பந்த மநுஸந்தேயம்" என்று ஆசார்யர்கள் அருளிச்செய்கிறார்கள். *லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்யரூபயா, ரக்ஷகஸ் ஸர்வஸித்தாந்தே வேதாந்தேபிச கீயதே* என்று, எம்பெருமான் பிராட்டியோடு கூடியே ரக்ஷகனென்று சொல்லுகையாலே லக்ஷ்மீ ஸம்பந்தாநு ஸந்தானம் ப்ரதானமென்று தோற்றுவிக்கைக்காகவே 'நாரணனெம்மான் பாரணங்காளன்' என்றது.

**வாரணம் தொலைத்த**—கம்ஸனுடைய குவலயாபீட மதயானையைக் கொன்றொழித்ததைச் சொன்னவிது விரோதி நிரஸநசீலன் என்று காட்டினபடி. நாராயண மந்த்ரத்தில் ரக்ஷகத்வஞ் சொல்லுவது முக்கியம்; இஷ்டங்களைத் தலைக்கட்டிக் கொடுக்கையும் அநிஷ்டங்களைத் தவிர்க்கையுமே ரக்ஷகத்வமாகையாலே விரோதி நிரஸனம் இங்குச் சொல்லப்ராப்தமாயிற்றென்க. ப்ரணவத்தின் முதலெழுத்தான அகாரமானது தாதுசக்தியினால் ரக்ஷகத்வத்தையும் ப்ரக்ருதி சக்தியினால் காரணத்வத்தையும் சொல்லுமதாகையாலே "காரணன் தானே" என்றார். ... ... ... .... (2)

தானேயுலகெல்லாம் தானேபடைத்திடந்து*
தானேயுண்டுமிழ்ந்து தானேயாள்வானே, (3)

| | | | |
|---|---|---|---|
| தானே | நாராயணனே தானே | படைத்து இடந்து | ஸ்ருஷ்டித்து (பிரளயத்திலே) இடந்தெடுத்து |
| உலகு எல்லாம் | ஸகல ஜகத்துக்கும் சரீரியாயுள்ளவன்; | தானே உண்டு உமிழ்ந்து | ஒருவருடைய அபேக்ஷையுமில்லாதபடி தானே (ஸமயங்களில்) உண்பதும் உமிழ்வதுஞ் செய்து |
| தானே | அப்பெருமான் தானே (வேறொரு துணையின்றியே) | தானே ஆள்வான் | தானே நிர்வஹிக்குமவன். |

***நாராயண சப்தார்த்தமாகக் கீழ்ப்பாட்டில் ப்ரஸ்துதமான ரக்ஷகத்வம் விவரிக்கப்படுகிறது இதில். **உலகெல்லாம் தானே**—*ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம* என்றதை அநுவதிக்கிறபடி. சரீராத்ம பாவ நிபந்தனமாக ஐக்ய நிர்வாஹம் பண்ணுவது வேதாந்திகளின் முறைமையாகையாலும், சரீரியானவன் சரீரத்தை ரக்ஷிக்கக் கடமைப்பட்டவனாகையாலும் இதுவும் ரக்ஷகத்வம் சொல்லுகையிலே முடிந்து நிற்கும்.

"உலகெல்லாம் தானே" என்றதற்கு நியாமகத்வ சொல்லுகிறது மேலெல்லாம்; தானே படைத்திடந்து தானே யுண்டுமிழ்ந்து தானே யாள்வானாகையாலே உலகெல்லாம் தானே

*மென்னக் குறையில்லை யென்றபடி. பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்திலே*ஸ்தித்யுத்பத்தி ப்ரவ்ருத்தி க்ரஸநநியமநவ்யாபநைராத்மநஸ் தே சேஷோ சேஷ: ப்ரபஞ்சோ வபுரிதி பவதஸ் தஸ்ய சாபேதவாதா:* என்றருளிச் செய்ததற்கு இப்பாசுரமும் மூலமென்னலாம்.* ... ... ... ... (3)

ஆள்வானாழிநீர், கோள்வாயரவணையான்*
தாள்வாய்மலரிட்டு, நாள்வாய்நாடீரே. (4)

| | | | |
|---|---|---|---|
| *ஆழி நீர்* | *காரணபூதமான ஏகார்ணவத்திலே* | *ஆள்வான்* | *ஆளுமவனான அப்பெருமானுடைய* |
| *கோள் வாய் அரவு அணையான்* | *மிடுக்குப் பொருந்திய வாயையுடையனான ஆதிசேஷனைப் படுக்கையாகவுடையனைக்கொண்டு* | *தாள் வாய்* | *திருவடிகளிலே* |
| | | *மலர் இட்டு* | *புஷ்பங்களை ஸமர்ப்பித்து* |
| | | *நாள் வாய்* | *நாடோறும்* |
| | | *நாடீர்* | *ஆச்ரயியுங்கோள்.* |

****—நாராயண மந்த்ரத்தில் சதுர்த்தியின் அர்த்தத்தை யநுஸந்திக்குமாசாரியர்கள் "அஸ்மை காலம் ஸகலமபி ஸர்வத்ர ஸகலாஸு அவஸ்தாஸு ஆவிஸ்ஸ்யுர் மம ஸஹஜகைங்கர்ய விதய:" (அஷ்டச்லோகி -3.) என்று கைங்கர்ய ப்ரார்த்தனையைப் பொருளாகக்காட்டுகையாலே, இங்கு ஸம்ஸாரிகளை நோக்கிக் கைங்கரியத்தை விதித்தருளுகிறார்.* **ஆள்வான்** *என்று, கீழே சொன்ன ரக்ஷகத்வத்தை அநுபாஷித்தபடி. ஆழி நீரில் கோள்வாயரவணையானைக் கொண்டு ஆள்வான்—* ஐந்து பைந்தலை யாடரவணை மேவிப் பாற்கடல் யோக நித்திரை சிந்தை செய்யுமவனுகையாலே ஆர்த்தர்களின் கூப்பீடு கேட்கைக்காகவே சயனித்திருந்து ஆர்த்தத்வநி செவிப்பட்டவாறே * நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்* என்கிறபடியே ஓடிவந்து ரக்ஷித்தருளுமவன். அன்னவனுடைய,* **தாள்வாய் மலரிட்டு**-*திருவடிவாரத்திலே கைப்பட்ட பூக்களைப் பணிமாறி, இத்தால் எம்பெருமான் ஆராதனைக் கெளியன் என்று காட்டினபடி.* **நாள்வாய் நாடீர்**-*நாள் தோறும் ஆச்ரயியுங்கள். ஒருகால் ஆச்ரயிப்பது போதுமாயினும், ஸாதநாநுஷ்டானமன்றே; ஸ்வயம் போக்யமானசெயலாகையாலே காலக்ஷேப மிதுவேயாகுக வென்கை. "அரவணையானை நாடீரே" என்கையாலே திருவனந்தாழ்வான்பெற்ற பேற்றை நீங்கள் பெறலாமென்று காட்டுகிறபடியாகக் கொள்ளலாம்; *சென்றால் குடையாமிருந்தால் சிங்காசனமாம் நின்றால்மரவடியாம் நீள்கடலுள், என்றும் புணையாமணி விளக்காம் பூம்பட்டாம் புல்குமணையாம் திருமாற்குஅரவு * என்று சொல்லப்பட்ட பேறு.*(4)

நாடீர்நாள்தோறும், வாடாமலர்கொண்டு*
பாடீர் அவன்நாமம், வீடேபெறலாமே. (5)

| | | | |
|---|---|---|---|
| *நாள்தோறும்* | *தினந்தோறும்* | *அவன் நாமம்* | *அப்பெருமானது திருநாமங்களை* |
| *வாடா மலர் கொண்டு* | *செவ்வி மாறாத பூக்களைக் கொண்டு* | *பாடீர்* | *பாடுங்கள்;* |
| *நாடீர்* | *பணியுங்கள்;* | | *(இங்ஙனே செய்தக்கால்)* |
| | | *வீடே பெறலாம்* | *மோக்ஷமே பெறலாகும்.* |

****ஸ்வரூபாநுரூபமான காரியத்தைச் செய்யவே ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்தைப் பெறலாமென்கிறாரிதில்.* **வாடாமலர்கொண்டு நாடோறும் நாடீர்**—**மார்வமென்பதோர் கோயிலமைத்து மாதவனென்னுந் தெய்வத்தைநாட்டி, ஆர்வமென்பதோர்பூவிடவல்லார்க்கு* என்று பெரியாழ்வார் ஆர்வத்தைப் பூவாக அருளிச் செய்திருக்கையாலே இங்கு* **வாடாமல**ரென்று *ஆர்வத்தைச் சொன்னதாகக் கொள்ளலாம். ஆத்மபுஷ்பத்தைச் சொன்னதாவுங் கொள்ளலாம். *அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் *என்று தொடங்கி *ஸத்யமஷ்டவிதம் புஷ்பம்*

விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத்* என்பதளவாகச் சொன்ன அஷ்டவித புஷ்பங்களை ஆழ்வார்கள் *கந்தமாமல ரெட்டுமிட்டு*என்றும்*இனமலரெட்டுமிட்டு *என்றும் அருளிச் செய்வதுண்டாகையாலே இங்கு அவற்றையே வாடாமலராகச் சொல்லிற்றாகவுங் கொள்ளலாம். *செண்பக மல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி முதலிய செவ்விப்பூக்களைக்கொண்டு என்கிறபொருள் உள்ளதே. **நாடீர் நாடோறும்** என்பதற்கு "பசித்த போதெல்லா முண்ணுமாபோலே" என்று ஈடு. ... ... ... ... ... ....

"அவனுமம் சொல்லீர்" என்னாதே '**பாடீர்**' என்கையாலே *ஏதத் ஸாம காயந் ஆஸ்தே*என்கிறபடியே மேலே பாடுகையாகிற புருஷார்த்தம் இங்குமாகக் கடவதென்று தோற்றுவிக்கப்படுகின்றதென்க. இப்பாட்டில், மனமொழி மெய்களாகிற முக்கரணங்களுக்கும் காரியமிடப்பட்டது; **நாடீ**ரென்றது-மாநஸவ்யாபாரம்; **மலர்கொண்**டென்றது காயிகவ்யாபாரம்; பாடீர் என்றது வாசிகவ்யாபாரம். ... ... (5)

**மேயான்வேங்கடம், காயாமலர்வண்ணன்***
**பேயார்முலையுண்ட, வாயான்மாதவனே.** (6)

| | | | |
|---|---|---|---|
| காயா மலர் வண்ணன் | காயாம் பூப்போன்ற திருமேனி நிறத்தையுடையனாய் | மாதவன் | திருமால் |
| பேயார் முலை உண்ட வாயான் | பூதனையின் முலையைச் சுவைத்துண்டு அவளை முடித்தவனை | வேங்கடம்மேயான் | திருவேங்கட மலையிலுள்ளான். |

***-கீழ்ப்பாட்டில்**நாடீ**ரென்றதற்கு இடம்காட்டுகிறாரிப்பாட்டில். எம்பெருமானுக்கு ரூபமில்லையென்றும் அவன் கண்ணுக்குப்புலப்படானென்றும் சாஸ்த்ரங்களிற் சிலவிடங்களிற் சொல்லியிருப்பதுண்டு; * **இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:***என்று அவன் தன்னுடைய ஸங்கல்பத்தினால் பரிக்ரஹிக்கப்பட்ட பல திருவுருவங்களையுடையவன் என்றும் சொல்லியிருப்பதுண்டு. இவற்றால், அஸ்மதாதிகளுக்குப் போல கர்ம நிபந்தநமான தேஹ மில்லாதவனென்றும் பஞ்சோப நிஷந்மயமான திவ்யமங்கள விக்ரஹங்களையுடையவனென்றும் விளங்கும். அத்திருமேனியைக்கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான உகந்தருளின நிலங்களிலே அடியார்க்குக் காட்டிக்கொடுத்தருளா நின்றான். பண்டு ராமக்ருஷ்ண நிவிபவாவதாரங்களிலும் காட்டிக்கொடுத்தருளினான். அத்திருமேனியை இப்போதுகாண இயலாதாயினும் திவ்யதேசத் திருமேனியை நன்கு கண்டு களிக்கலாமேயென்கிறாரிப்பாட்டில். பேயார் முலையுண்ட வாயான் மாதவனை காயாமலர் வண்ணனை வேங்கடம்மேயான்; அவ்விடத்தே நாடீர் நாடோறும் வாடாமலர் கொண்டு, பாடீரவன்னாமம் வீடே பெறலாமே-என்று கீழ்ப்பாட்டையுங் கூட்டிக்கொண்டு பொருள்கொள்வது.

**வேங்கடம் மேயான்**-ஸம்ஸாரிகளான வுங்களைத் திருவடிபணிவித்துக் கொள்வதற்காகவே திருமலையிலே பொருந்திவர்த்திக்கிறவன். *அடிக்கீழமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மினென்றென்றருள் கொடுக்கும் பெருமானன்றோ அவன். "காயாமலர் வண்ணன்" என்பதற்கு ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்,—'துரும்பெழுந்தாடி அடிமையிலே மூண்டல்லது நிற்கவொண்ணாதபடியான வடிவுபடைத்தவன்" என்று. வடிவழகின் வீறு கண்டால் அசேதநவர்க்கமுங் கூட அடிமை செய்ய ஆசைப்படவேண்டும்படியாயிருக்குமென்றதாயிற்று. **பேயார் முலையுண்ட வாயான்**—அவ்வடிவுகண்டால் பின்பு நம்முடைய விரோதிவர்க்கமெல்லாம் பூதனைபட்டது படுமென்றவாறு. "பேய்முலை" "பேய்ச்சிமுலை" என்ன வேண்டுமிடத்துப் பேயார் முலையென்றது சீற்றத்தினாலாயது.

**மாதவனே**—நம்முடைய குற்றங்குறைகளைச் சிறிதும் பாராதே குற்றங்களையே நற்றமாக வுபபாதித்துச் சேர்ப்பிக்கவல்ல பிராட்டியாரும் அருகேயுண்டு என்கிறது. ... (6)

**மாதவனென்றென்று, ஓதவல்லீரேல்***
**தீதொன்றுமடையா, ஏதஞ்சாராவே.** (7)

| | | | |
|---|---|---|---|
| மாதவன் என்று என்று ஓத வல்லீர் ஏல் | த்வயமென்கிற மந்த்ரரத்னத்தை அநுஸந்திக்க வல்லீர்களாகில் | தீது ஒன்றும் அடையா | அதீத பாபங்களில் ஒன்றும் கிட்டாது; |
| | | ஏதம் சாரா | மேலுள்ள பாவங்களும் வந்து கூடாது. |

***வாடாமலர் கொண்டு நாடோறும் நாடமுடியாமலும், வேங்கடம்மேயானை அடி பணிய முடியாமலுமிருப்பார்க்கும் ஒருவழியருளிச் செய்கிறாரிப்பாட்டில். **மாதவனென்றென்று ஓதவல்லீரேல்**—"மாதவனென்று" என்னாமல் "என்றென்று" என்று இரட்டித்துச் சொன்னதனால் லக்ஷ்மீஸம்பந்தத்தை இரண்டுதடவை அநுஸந்திக்க நியமிக்கின்றமை விளங்குகின்றது. இரண்டு கண்டமாகவுள்ள த்வயமென்னும்மந்த்ரரத்னத்தில் பூர்வ வாக்யத்திலும் உத்தரவாக்யத்திலுமாக இரண்டு தடவை லக்ஷ்மீஸம்பந்தம் ஸுவ்யக்தமாகவுள்ளதனால் த்வயாநுஸந்தானம் செய்ய நியமிக்கிறாராழ்வார் என்று கொள்ளக்கடவது. ஆசார்யஹ்ருதயத்திலும் (228) "மாதவனென்று த்வயமாக்கி" என்றருளிச்செய்தது காண்க. த்வயத்தின் பூர்வவாக்யத்திலும் உத்தரவாக்கியத்திலும் ஸ்ரீமத் பதமுள்ளது. இரண்டிடத்தில் லக்ஷ்மீ ஸம்பந்தம் சொன்னதன் கருத்தை நம் ஆசிரியர்கள் விவரித்துள்ளார்கள்;—"இதில் முற்கூற்றால் பெரியபிராட்டியாரை முன்னிட்டு ஈச்வரன் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது. பிற்கூற்றால் அச்சேர்த்தியில் அடிமை இரக்கிறது" (122) என்பது முமுக்ஷுப்படி திவ்ய ஸூக்தி. பூர்வகண்டத்தில் லக்ஷ்மீஸம்பந்தம் சொன்னது புருஷகாரமாக; உத்தரகண்டத்தில் அது சொன்னது பெரிய பிராட்டியாரும் அவனுமான சேர்த்தியிலே கைங்கரியம் செய்கைக்காக என்றதாயிற்று. ஆக ஆச்ரயிக்கும் தசையோடு அநுபவிக்கும் தசையோடு வாசியற இரண்டு தசையிலும் லக்ஷ்மீ ஸம்பந்தம் உத்தேச்யமாயிருக்கையாலே இங்கு "மாதவன் **என்றென்று**" என்று இரட்டித்தபடி. இப்பதிகத்தில் முதற்பாட்டிற் சொன்ன நாராயண சப்தத்தோடே மாதவனென்கிற வித்தை இரண்டு தடவை சேர்த்துக்கொண்டு சொல்லவல்லீர்களாகில் என்றதாயிற்று. திருவஷ்டாக்ஷர மஹா மந்த்ரத்தின் அநுஸந்தானத்தோடு மாத்திரம் நில்லாமல் த்வயாநுஸந்தானமும் செய்ய வல்லீர்களாகில் என்றதாயிற்று.

**ஓதவல்லீரேல்** என்றதன் உட்கருத்தைக் கண்டுபிடித்து ஆசாரியர்கள் அருளிச்செய்வது பாரீர்-"பரப்ரேரிதராய்க் கொண்டு சொல்லவல்லிகோளாகில்" என்று. ஆறாயிரப்படியிலுமிங்ஙனே யுள்ளது. ஒருவர் முன்னே சொல்ல மற்றொருவர் பின்னே சொல்லுகையாகிற அத்யயனத்திற்கு ஓதுகை யென்று பெயராதலால், நீங்கள் தாங்களே ருசிபூர்வகமாகச் சொல்லாதொழியினும் ஒருவருடைய ப்ரேரணையினாலாவது சொல்ல நேர்ந்தால் என்றதாயிற்று.

**தீதொன்றுமடையா ஏதம் சாராவே**—தீது என்றும் ஏதமென்றும் பர்யாயமாகி ஒன்றேயாயிருக்க இரண்டுபோலச் சொன்னது, பூர்வ பாபமென்றும் உத்தர பாபமென்றும் இரண்டாயிருப்பது பற்றி. *ததகிகமே உத்தர பூர்வாகயோரச்லேஷ விநாசௌ தத்வ்யபதேசாத்* என்ற ப்ரஹ்மஸூத்ரமு முணர்க. ப்ரஹ்மஜ்ஞானம் பிறப்பதற்கு முன்பு செய்யும் பாபங்கள் பூர்வ பாபங்களெனப்படும்; பின்பு நேரும் பாபங்கள் உத்தர பாபங்களெனப்படும். "போய பிழையும் புகுதருவானின்றனவும் தீயினில் தூசாகும்" என்ற திருப்பாவையுங்காண்க.

போய பிழைகள் தீயிலிட்ட தூசுபோலே தொலைந்தொழியும்; இனி வரும் பிழைகள் தாமரையிலைத் தண்ணீர்போலே பற்றுதலின்றிக்கே யொழியும்—என்பது உபநிஷத்துக்களின் கொள்கை, இது தோன்றவே, **தீது ஏதம்** என்ற இரண்டு சொற்களை யிட்டு ஆழ்வாரருளிச் செய்தபடி.

இப்பாட்டின் முடிவிலே ஈட்டு ஸ்ரீ ஸூக்தி காண்மின்;—கீழ்ச்சொன்ன திருமந்த்ரமும் இப்பாட்டில் சொன்ன ஸ்ரீமத் பதமும் தனித்தனியே பேற்றுக்குப் பர்யாப்தமான பின்பு இரண்டையும் சேர்த்துச் சொன்னவர்களுக்குப் பேறு சொல்லவேண்டாவிறே." ... (7)

சாராவேதங்கள், நீரார்முகில் வண்ணன்*
பேரார் ஓதுவர், ஆரா ரமரரே. (8)

| | |
|---|---|
| ஏதங்கள் சாரா | ஒரு பொல்லாங்கும் வந்து கிட்டாது; |
| நீர் ஆர் முகில் வண்ணன் | நீர் நிரம்பிய மேகம் போன்றவனை எம்பெருமானுடைய |
| பேர் ஆர் ஓதுவார் | திருநாமங்களை ஓதுமவர்கள் யாவரோ |
| ஆர் ஆர் | அவர்கள் எது பிறப்பு எதியல்லாக நின்றவர்களாயினும் |
| அமரர் ஏ | நித்யஸூரிகளோடொப்பர். |

***—"நாராயணத் திருநாமத்தையோ ஸ்ரீமத் பதத்தையோ அநுஸந்திக்க நாங்கள் அதிகாரிகளோ? மிகமிக நீசரான எங்களுக்கு அத்தனையதிகாரமுண்டோ?" என்று சங்கிப்பார்க்குச் சொல்லுகிறது இப்பாட்டு. அதிகாரி நியதியில்லை; ஆரேனுமாகத் திருநாமத்தைச் சொல்லலாம், அப்படிச்சொல்லுவார் நித்ய ஸூரிகளோடொப்பர்கள் என்கிறார். "ஏதம் சாராவே" என்று கீழே சொல்லியிருக்கச் செய்தேயும் மீண்டும் "சாராவேதங்கள்" என்றது—அநதிகாரிகளான நாம் சொன்னோமென்று ஒரு பொல்லாங்கும் வாராது என்றபடி.

**நீரார் முகில்வண்ணன் பேர் ஆர் ஓதுவார்**—நீர்கொண்டெழுந்த காளமேகம் போன்ற திருநிறத்தையுடையவனென்று அநுஸந்தித்தவாறே அவனது திருநாமங்களைப் பரவசமாகச் சொல்ல நேருமே; வாய்மூடியிருக்க வொண்ணுமோ; தாம் அதிகாரிகள் அநதிகாரிகள் என்று பார்க்கத் தோன்றுமோ? அப்படிப்பட்டவர்கள், **ஆர் ஆர்**—ஏதேனும் ஜன்ம வ்ருத்தங்களையுடையரேயாகிலும் என்றபடி. **அமரரே**—நித்யஸூரிகள் எப்படி கைங்கரியமே போது போக்காயிருக்கின்றார்களோ அப்படியே யிருக்கப் பெறுவர்களென்கை. "ஆராமரரே" என்றவிடத்து 'ஆர் ஆர்' என்று இரண்டு சொல்லாகப் பிரிப்பதே பொருத்தம். பன்னீராயிரவுரைகாரர் 'ஆரார்' என்று முழுச்சொல்லாகக் கொண்டு "த்ருப்தி பிறவாதவளவாய்க் கொண்டு" என்றுரைத்தனர். ... ... ... (8)

அமர்க்கு அரியானை, தமர்கட்கெளியானை*
அமரத்தொழுவார்கட்கு அமராவினைகளே, (9)

| | |
|---|---|
| அமரர்க்கு அரியானை | பிரமன் முதலானோர்க்கும் அரியனாய் |
| தமர்கட்கு எளியானை | அடியவர்க்கு எளியனாயுள்ள பெருமானை |
| அமர தொழுவார்கட்கு | பலனொன்றும் விரும்பாதே தொழுமவர்களுக்கு |
| வினைகள் அமரா | விரோதிகள் வந்து இட்டாது. |

***—இப்பாட்டில் "அமரத் தொழுவார்கட்கு" என்பது உயிரான சொல்; அமரத் தொழுகையாவதென்னென்னில்; ப்ரயோஜநாந்தர மொன்றையுங் கணிசியாமே தொழுகை; திருமங்கையாழ்வார் "**மிக்க சீர்த்தொண்டர்**" என்று ஒரு விலக்ஷண பதப்ரயோகஞ் செய்தருளுகிறார்; க்ஷுத்ர ப்ரயோஜனங்களைக் கணிசிப்பவர்கள் தொண்டர்; அவற்றைத் தள்ளி

பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தையே விரும்புமவர் சிர்த்தொண்டர்; "நின் புகழில் வைகும் தஞ்சிந்தையிலும் மற்றினிதோ நீ யவர்க்கு வைகுந்த மென்றருளும் வான்" (பெரிய திருவந்தாதி) என்றருளிச் செய்தபடியே வைகுந்த நாட்டையும் ஒரு பொருளாக மதியாது *எம்மா வீட்டுத்திறமும் செப்பம்* என்றிருப்பார் மிக்க சிர்த்தொண்டர். ப்ரயோஜனத்துக் கொருப்ரயோஜன முண்டோ?" என்ற கணக்கிலே, தொழுகைதானே ப்ரயோஜனமாயிருக்க அதற்கொருப்ரயோஜனமுண்டோவென்றிருக்கையே **அமரத்தொழுகையாம்**; அப்படித்தொழத் தகுந்தவன் யாவனென்னில்; **அமரர்க்கு அரியான், தமர்கட்கு எளியான்**—அமரர் என்றும் தமர்என் என்றும் இரண்டுபடப் பேசுகிறார்காண்மின்; அமரர்கள் தமர்களிற் சேர்ந்தவர்களல்லரோவென்று கேள்வி பிறக்கும்; "அமரர்க்கு இடர்கெட அசுரர்கட்கு இடர்செய்" என்றார் இவ்வாழ்வார்தாமே. *முப்பத்து மூவரமரர்க்கு முன்சென்று கப்பந்தவிர்க்குங்கலியே * என்கிறாள் ஆண்டாள். ஆகவே அமரர்கள் தமர்களாயிருக்க இங்கு வேறுபடுத்திச் சொல்லுவதேன்? என்று சங்கைதோன்றும். கேண்மின்; எம்பெருமான் ஆர்த்திதார்த்த பரித்ராண தீக்ஷிதனாகையாலே வேண்டுவோர்க்குக் காரியஞ்செய்பவனாய், அமரர்வேண்ட அவர்கட்குங்காரியஞ் செய்பவனென்பதில் தட்டில்லை. அவர்கள் ப்ரயோஜனம் வேண்டும்போது திருவடிகளிலே குனிந்து நிற்பதும், ப்ரயோஜனம் கைப்பட்டவாறே எதிரம்பு கோப்பதுமாயிருப்பவர்களென்பது இதிஹாஸ புராணஸித்தம்; எம்பெருமானுடைய வடிவழகு முதலியவற்றில் ஈடுபடவுமறியார் அவர்கள். திருவிருத்தத்தில் *பேணலமில்லாவரக்கர் முந்நீரபெரும்பதிவாய் நீணகர் நீளெரி வைத்தருளாயென்று நின்னை விண்ணோர் தாள்நிலந்தோய்ந்து தொழுவர்*என்றவுடனே *நின்மூர்த்தி பல் கூற்றிலொன்று காணலுமாங்கொல் என்றே?* என்றருளிச்செய்திருப்பதன் சுவையறிக. ஆகவே அன்னவர்களைத் தமர்களில் வேறுபட்டவர்களாக ஆழ்வாரருளிச்செய்வது பொருந்தும். *நேரே கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணனடிக்கமலந்தன்னை யயன்* என்று பொய்கையாழ்வார் பணித்தபடி எம்பெருமான் திருவடி பிரமனுக்கே தெரிந்திலதென்றால் மற்றையமரர்களைப்பற்றிக் கேட்கவேணுமோ?

இங்கு ஆறாயிரப்படியில் "ஆச்ரிதரானதேவாதிகளுக்குங்கூட அரியனாய், ஆச்ரிதர்க்கு எளியனாயிருந்தவனை" என்றருளிச்செய்யப்படுகிறது. இதுவொரு சமத்காரமான ஸ்ரீஸூக்தியாகவுள்ளது. 'ஆச்ரிதரான' என்னும் விசேஷணத்தை தேவர்களுக்கும் இட்டுவைத்து, அவர்கட்கும் அரியன் என்று சொல்லி, உடனே 'ஆச்ரிதர்க்கு எளியன்' என்கையாலே ஆச்ரிதர் என்கிற சொல்லில் ஒரு வைலக்ஷண்யமிருப்பதாக நன்கு தெரிகின்றதன்றோ. ஆச்ரயிப்பவர்களெல்லாரும் ஆச்ரிதர்களல்லர்; சில விலக்ஷணவ்யக்திகளே ஆச்ரிதர்களெனப்படுவார் என்று தெரிகின்றது. அவர்களே தமராவார். அவர்க்கு எளியன்; மற்றையோர்க்கு அரியன்; அப்படிப்பட்ட பெருமானை அமரத்தொழுவார்கட்கு, **அமராவினைகளே**—ப்ரயோஜநாந்தரங்களை விரும்புகைக்கடியான பாவங்கள் தொலைந்து போம் என்றதாயிற்று. (9)

வினைவல்லிருளென்னும், முனைகள்வெருவிப்போம்*
சுனைநன்மலரிட்டு, நினைமின்நெடியானே. (10)

| | | | |
|---|---|---|---|
| வினை | கருமங்களென்ன | வெருவி போம் | தாமே அஞ்சி அகன்றொழியும்; |
| வல் இருள் | கொடிய அஞ்ஞானமென்ன | சுனை நல் மலர் இட்டு | சுனைகளிலுண்டான நல்ல பூக்களையிட்டு |
| என்னும் முனைகள் | ஆகவிப்படி சொல்லப்படுகிற விரோதிகள் | நெடியான் நினைமின் | ஸர்வேச்வரனைச் சிந்தியுங்கள். |

**இப்பதிகத்தில், முதற்பாட்டில் திருமந்த்ரப்ரஸ்தாவம் செய்தருளினார்; ஏழாம்பாட்டில் த்வயப்ரஸ்தாவம் செய்தருளினார். அதற்குமேலெல்லாம் பெரும்பாலும் சரமச்லோகப்ரஸ்

தாவமேயாயிருக்கிறது. *ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி * என்பதுதானே சரமச்லோகத்தின் ஸாரம். அது இப்பாட்டில் "வினைவல்லிருளென்னும் முனைகள் வெருவிப்போம்" என்று தலைக்கட்டப்படுகிறது. கருமம், ப்ரபவமான அஜ்ஞானம், அதுக்கடியான தேஹஸம்பந்தம் இயற்கைப்பற்றி வருகிற ருசிவாஸனைகள் ஆகிற இத்திரள்கள், **வெருவிப்போம்**—"நமக்கு இது நிலமன்று" என்று அஞ்சி யோடிப்போம் **முனைகள்**—திரள்களென்றபடி. "முனையென்று முகமாய், முகங்கெட்டுப் யோமென்றுமாம்" என்பது ஈடு. இப்பொருளில், வினை வல்லிருளென்னுமிவை முனைகள் வெருவிப்போமென்க.

இதற்காகச் செய்யவேண்டுவதென்னென்ன, அது சொல்லுவன பின்னடிகள். **சுனைநன் மலரிட்டு**-ப்ராக்ருத த்ரவ்யம் தேடியோட வேண்டா; அப்ராக்ருத த்ரவ்யங்களையும் விலைதந்து வாங்க வருந்தவேண்டா; சுனைகளிலே தாமாகத்தோன்றி எளியனவாய்க் கிடைக்கின்ற மலர்களைப் பறித்து இடவமையும். **நினைமின் நெடியானே**—அதுகூடவேண்டா; "சிற்றவேண்டா சிந்திப்பேயமையுங் கண்டீர்களந்தோ" என்று பண்டே சொன்னேனே; உங்களுக்குப் பாங்கான ஸமயத்திலே ஒருகால் நினையுங்கோள். அப்படி ஒருகால் நினைத்தால் போதுமோ? என்று சங்கிப்பார்க்கு அவன்படியை யெடுத்துக் காட்டுகிறார் **நெடியான்** என்பதனால். நாம் ஒருகால் நினைக்க, அதையே பலகால் நினைத்ததாகக்கொண்டு என்செய்வோம் என் செய்வோம்!! என்று தெருடாடியிருப்பவனன்றோ நெடியான். "**அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்**" என்றிலனோ? ... ... (10)

நெடியானருள்சூடும், படியான்சடகோபன்*
நொடியாயிரத்திப்பத்து, அடியார்க்கருள்பேறே. (11)

| | | | |
|---|---|---|---|
| நெடியன் அருள் | ஸர்வேச்வரனுடைய க்ருபையை. | நொடி | அருளிச் செய்ததான |
| | | ஆயிரத்து இருபத்து | ஆயிரத்தினுள் இப்பதிகமானது |
| சூடும் படியான் | அநுபவிக்குமியல்வினரான | அடியார்க்கு | பக்தர்களுக்கு |
| சடகோபன் | ஆழ்வார் | அருள் பேறு | ப்ரஸாத லாபமாயிருக்கும் |

***—இப்பதிகம் வல்லார், தம்மைப்போலே நெடியானருள் சூடும்படியாவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். "நெடியானருள் சூடும்படியான் சடகோபன்" என்று தமக்கு நிருபகமருளிச் செய்கிறார்போலும். திருவாய்மொழி தொடங்கும்போதே *மயர்வற மதிநல மருளினன்*என்றார். இடையில் *திருமாலாலருளப்பட்ட சடகோபன்* என்றார். இப்போது *நெடியானருள் சூடும்படியான் சடகோபனென்கிறார். இதனால், ஸ்ரீராமாயணத்திற் காட்டிலும் ஸ்ரீ விஷ்ணுபுராணத்திற் காட்டிலும் திருவாய் மொழிக்குண்டான ஏற்றம் தெரிவிக்கப்பட்டதாகிறது. எங்ஙனேயென்னில்; ஒருநிலையின்றிக்கே வாய்வந்தபடி பிதற்றுமவனான நான்முகனது அருளினால் தோன்றிற்று ஸ்ரீராமாயணம். மோஹ சாஸ்த்ர ப்ரவர்த்தகனாய் ச்மசானஸஞ்சாரியாய் சவபஸ்மத்தை உடம்பெங்கும் பூசி எலும்பு மாலையைப்பூண்டு புலித்தோலுடுத்து அறிவுகேட்டுக்கு எல்லைநிலமான இடபத்தை யூர்தியாகக்கொண்டு காலகூடத்தைக் கழுத்திலே யுடையனான ருத்ரனிடத்தில் உபதேசங் கேட்டவர்களான நால்வரில் ஒருவனான புலஸ்தியனுடைய அருளினால் தோன்றிற்று ஸ்ரீ விஷ்ணு புராணம். அப்படியன்றிக்கே, திருவுக்குந் திருவாகிய செல்வனைப் பரமஸத்வ நிதியாய்ப் புண்டரீகாக்ஷனை புருஷோத்தமனுடைய திருவருளடியாகவே தோன்றிற்று திருவாய்மொழி. இனி மிக வினாவாகவே எம்பெருமானுடைய பேரருளைப் பெறவிருக்கிறாராதலால் அது சொல்லுயித்தசொல் என்னவுமாம். *ஆழியானருள் தருவானமைகின்றான் அது நமது விதிவகையே* என்றன்றோ அடுத்த பாசுரமுள்ளது.

நொடியாயிரத்து இப்பத்து—நொடிதல்-சொல்லுதல். சடகோபன் சொன்ன ஆயிரத்தில் இப்பத்தானது, அடியார்க்கு அருள் பேறே—ஆழ்வார்தாம் 'நெடியானருள் சூடும்படியான்' என்று சொல்லிக்கொள்ளும்படியாகப் பெற்ற பேற்றை இப்பத்து பெறுவிக்கு மென்றபடி. ... ... ... ... (11).

திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையில் பத்தாம் பத்து ஐந்தாந்திருவாய்மொழி முற்றிற்று

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்
நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பத்தாம்பத்து-ஆருந்திருவாய்மொழி-அருள்பெறுவாரடியார்.

**உரையவதாரிகை**--இத்திருவாய்மொழிக்கு அவதாரிகையிடத் தொடங்கும்போதே நம்பிள்ளை யருளிச் செய்வது பாரீர்—"*பொய்ந் நின்ற ஞானந் தொடங்கி இவ்வளவும் வர ஈச்வரனை ஆழ்வார் பின் தொடர்ந்தபடி சொல்லிற்று; இது தொடங்கி ஆழ்வாரை ஸர்வேச்வரன் பின்தொடருகிறபடி சொல்லுகிறது" என்று. அதாவது, இதுவரையில் ஆழ்வார் எம்பெருமானிடத்தில் யாசகராய் நின்றார்; இனி (*முனியே நான்முக னென்னும் பதிகத்தளவும்) எம்பெருமான் ஆழ்வார் பக்கலிலே யாசகனுய் நிற்கிருனென்கை. இத்திருவாய்மொழியில் மூன்றும்பாட்டில் *இன்று விண்ணுலகந் தருவானுய் விரைகின்றுன்* என்றருளிச் செய்கை யாலே ஆழ்வாரைப் பரமபதத் தேறக் கொண்டுபோகையிலே எம்பெருமான் தான் விரைந்து 'ஆழ்வாரே! வாரீர், வாரீர்' என்று வேண்டுகின்றமை தெரிகின்றது. அவ்வளவேயு மன்றிக்கே சரமசரீரமாகையாலே ஆழ்வாருடைய திருமேனியில் தனக்குண்டான வியாமோஹத்தாலே கொண்டுபோக விரைந்ததையுங்கூட மறந்து இத்திருமேனி யநுபவத்திலே மிகவும் சபலனுய் முன்பு ஆய்ச்சியரோடு குரவை கோத்தபோது அநேக விக்ரஹபரிக்ரஹம் பண்ணி யநுபவித்தாப் போலவும், நரகனைத் தொலைத்துக் கவர்ந்த பதினாறாயிரம் தேவிமார்களை த்வாரகையில் பதினாறாயிரம் விக்ரஹங்கள் கொண்டு அநுபவித்தாப்போலவும் அநேக விக்ரஹங்கொண்டு ஆழ்வாருடைய அவயவங்கள் தோறு மநுபவிக்கவும் விரும்பி அதற்கு அநுமதி பண்ணுமாறு வேண்டிக்கொண்டான். அதை ஆழ்வார் வெகு சிரமப்பட்டு விடுவித்துக்கொள்ள வேண்டியதாயிற்று. ஆயினும் எம்பெருமானுடைய அநுவர்த்தனத்தில் குறைவில்லையே. இதையெல்லாம் திருவுள்ளம்பற்றியே நம்பிள்ளை "இது தொடங்கி ஆழ்வாரை ஸர்வேச்வரன் பின் தொடருகிறபடி சொல்லுகிறது" என்று மருமமறிந்து அருளிச்செய்தார்.

எம்பெருமானைப் பெறவேணுமென்று ஆழ்வார்க்கு விடாய் அதிகமா? ஆழ்வாரைப பெற வேணுமென்று எம்பெருமானுக்கு விடாய் அதிகமா? என்று ஆராய்ந்து பார்க்குமளவில், ஆழ்வாருடைய விடாய் சிறிது; எம்பெருமானுடைய விடாய் தானே பெரிது என்று ஸித்தாந்தம் செய்ய வேண்டியதாகிறது. இவ்விஷயம் கீழேயே (9-6-10)* வாரிக் கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற வென்னை யொழிய என்னின் முன்னம் பாரித்துத் தானென்னை முற்றப்பருகினன்* என்னும் பாசுரத்தினுல் ஆழ்வார் தம்மாலேயே வெளியிடப்பட்டுள்ளது.

எம்பெருமான் அப்படி பெருவிடாயனுயிருந்து வைத்தும், ஆழ்வாரைக்கொண்டு இவ்வுலகுக்கு [*தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்*என்னும்படியாக] உணவளிக்க விரும்பியிருந்ததனுல் தன் விடாயை யடக்கிக்கொண்டு ஸமய மெதிர்பார்த்திருக்க வேண்டியதாயிற்று. அக்காரியமும் ஒருவாறு தலைக்கட்டுமளவானவாறே இனி

யெம்பெருமான் ஆறியிருக்கமாட்டானே. திருவாட்டாற்றிலே தங்கு வேட்கையாக வந்து நிற்கிறவனாகையாலே ஆழ்வாரைக் கொண்டு போகையிலே அவனுக்கு விரைவுமிக்கது; ஏன்? திருநாட்டிலே கொண்டுபோய் அநுபவிக்க வேணுமென்று என்ன நிர்ப்பந்தம்! இங்கே நான் அநுபவிக்கலாகாதோ? என்று சிலர் கேட்கக்கூடும்; *பாவியேனைப் பல நீ காட்டிப்படுப்பாயோ*; என்னும்படியான இருள் தருமா ஞாலத்திலே அவிச்சின்னமான அநுபவம் வாய்க்கமாட்டாதே; "ஒருவிச்சேதமும் வாராதபடி ஏகாந்தமாயிருப்பதொரு தேச விசேஷத்திலே கொண்டுபோய் வைத்து அநுபவிக்கவேணும்" என்று பாரித்தான். அதுதானும் கிடந்தானை கண்டேறுமா போலன்றிக்கே ஆழ்வார் நியமித்தருளுகிறபடியே செய்தோமாகவேணும் என்று பாரதந்திரியத்திலும் ருசியுண்டாகப் பெற்றான். ஆழ்வாரோ பாரதந்திரியத்தின் எல்லையிலே நிற்பவர். ஸர்வேச்வரனைத் தாம் நியமிக்கமாட்டாரே. அவனோ கையுமஞ்ஜலியுமாய் நின்று 'ஆழ்வாரே! நியமித்தருளீர்; என்கிறான். ஆழ்வார்க்கோ நியமிக்க வாய் எழவில்லை. பராத்பரனாயிருந்து வைத்து இப்படி நம்பக்கலில் பரதந்திரனாய்த்தாழ நிற்கிறானே! இதுவென்." என்று அந்த சீல குணத்தையநுபவிக்க விழிந்தாராழ்வார். அநுபவிக்குமிடத்துக் கைவல்யாநுபவம் போலே தனியநுபவம் ரஸிக்கமாட்டாதாகையாலே நால்வரோடேகூடி யநுபவிப்போமென்று நாட்டார் பக்கலிலே கண் வைத்தார். அவர்கள் உண்டியே உடையே உகந்தோடுவாராய் சப்தாதி விஷயங்களிலே அந்யபரராய் அவற்றோடே பணிபோந்திருந்தார்கள். அவர்களைவிட்டு, பரமரஸிகனானஸர்வேச்வரனோடுதான் கூடி இக்குணத்தையநுபவிப்போமேயென்று அவன் மேலும் கண்செலுத்தினார்; அவனோ ஆழ்வாரைக் கொண்டுபோகையிலே விரைந்திருப்பானொருவனாகையாலே அதிலே அந்யபரனாய் ஆழ்வாருடைய அநுபவத்திற்கு உசாத்துணையாக மாட்டிற்றிலன். இப்படி ஸம்ஸாரிகளும் துணையன்றிக்கே ஸர்வேச்வரனும் துணையன்றிக்கே யானவிடத்து *யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம்* என்று முன்னமே சொல்லியிருக்கிறாரே யாழ்வார், தம்மோடு உடன் கேடான நெஞ்சிருக்க இனி என்னகுறையென்று தேறி அந்த நெஞ்சோடே யநுபவிக்கிறார்—நெஞ்சே! அவனுடைய மேன்மையிருந்தபடி கண்டாயே, அப்படி மேன்மையுடையவன் நம்பக்கல் இப்போது தாழநிற்கும் நிலைகண்டாயே; நாம் பெற்ற பேற்றின் கனமிருந்தபடி கண்டாயே! என்று சொல்லிச் சொல்லி உள்குழைகிறார்.

ஸர்வேச்வரனாகிறான் ஸர்வ நியாமகனாய் ஸ்வதந்த்ரனாயிருப்பானொருவன் என்று இதுவரை நினைத்திருந்தாராழ்வார்; ஆச்ரித பாரதந்திரியமே அவனுக்கு ஸ்வரூபமென்கிற உண்மையை இப்போதறிந்து இஃது என்ன சீலம்! என்று வியக்கிறாராயிற்று. (1)

அருள்பெறுவாரடியார்தம்மடியனேற்கு* ஆழியான்
அருள்தருவானமைகின்றான் அதுநமதுவிதிவகையே*
இருள்தருமாஞாலத்துள் இனிப்பிறவியான்வேண்டேன்*
மருளொழிநீமடநெஞ்சே! வாட்டாற்றானடிவணங்கே. (1)

அருள் பெறுவார் அடியார் தம் — எம்பெருமானுடைய அருளைப் பெறுவதையே நிரூபகமாகவுடைய பாகவதர்களுக்கு
அடியனேற்கு — அடிமைப்பட்டிருக்குமெனக்கு
ஆழியான் — திருவாழியையுடையவனான எம்பெருமான்
அருள் தருவான் அமைகின்றான். — க்ருபை பண்ணுவானாகப் பொருந்தியிரா நின்றான்:
அது — அப்படி க்ருபை பண்ணுவது
நமது விதி வகையே — நாம் விதித்தபடியேயாம்;
(ஆன பின்பு)

இனி — இனியொருநாளும்
இருள் தருமா ஞாலத்துள் பிறவி — இவ்விருள் தருமா ஞாலத்திற் பிறப்பை
யான் வேண்டேன் — நான் இச்சிக்கமாட்டேன்;
மட நெஞ்சே — சபலமான மனமே!
நீ மருள் ஒழி — இங்கேயிருந்து அநுபவிக்கவேணுமென்கிற வொரு மருளைத் தவிரப்பார்.
வாட்டாற்றான் அடி வணங்கு — திருவாட்டாற்றெம் பெருமானது திருவடிகளை வணங்கு.

***—நெஞ்சே! எம்பெருமான் இன்று நமக்குப் பேரருள் செய்யக் கோலாநின்றான்: அதுவும் நாம் விதித்தபடியே செய்யவேணுமென்று நம்முடைய நியமனத்தை யெதிர்பாரா நின்றான்; அந்தோ! இஃது என்ன குணம்! இக்குணத்தை யநுபவிக்க இந்நிலவுலகில் ஆளில்லாமையாலே நாம் திருநாட்டிலேபோய் முதுவரோடு கூடியநுபவிக்கலாமா? வருகிறாயா? என்று தம் திருவுள்ளத்தோடே உசாவுகிறார். இப்பாட்டுக்கு இரண்டாமடியே உயிர்நிலையானது. **ஆழியான் அருள் தருவானமைகின்றான்**—நெஞ்சே! கையுந் திருவாழியுமான ஸர்வேச்வரன் நம்மேல் முழுநோக்காக நோக்கிப் பரம க்ருபையைப் பண்ணுவானாகப் பாரிக்கின்றான், திருவாழியை ஒரு கண்ணாலே பார்ப்பது, என்னை யொருகண்ணாலே பார்ப்பதாகா நின்றான்; திருவாழியை விட்டாலன்றோ உம்மை நான் விடுவது என்னா நின்றான்; திருவாழியாழ்வான் முதலான நித்யஸூரிகள் பக்கலிலே பண்ணும் ப்ரேமத்தையெல்லாம் என்னொருவன் திறத்து ஒரு மடைசெய்து பண்ணாநின்றான். இங்ஙனே செய்வது ஆர்பக்கலிலேயென்ன, **அருள் பெறுவாரடியார்தம் அடியனேற்கு** என்கிறார். எம்பெருமான் இப்படிப்பட்ட பேரருளைத் தம்பக்கலிலே செய்வதற்குக் காரணமுங் காட்டிக்கொண்டு சொல்லுகிறபடி. எம்பெருமான் பண்ணும் பேரருளுக்கு இலக்காயிருப்பார் சிலருண்டு; அவர்கள் நமக்கு ஸ்வாமிகள். அவர்கள் பக்கலிலே அவன் பண்ணின அருள் அவர்களளவிலே பர்யவஸியாமல் நம்மளவிலும் வெள்ளங்கோத்ததுகாண் என்கிறார். நாம் அவன் தன்னையே பற்றியிருந்து அவனையே பார்த்திருந்தோமாகில் இப்பேரருள்பெற முடியாதுகாண்; அவனருளுக்கிலக்கான அடியார்களையே நாம் பற்றினோமானது பற்றியே இப்பேரருளுக்கு நாம் இலக்காகவேண்டிற்று என்கிறார். எட்டாம்பத்தில் *நெடுமாற்கடிமைப் பதிகம் பாடினதற்குப் பலன் இன்று பெற்றோம் என்கிறார்போலும்.

‘அவனோ அருள்தருவானாயிருந்தான்; நீரோ அருளைப்பெற அவகாசம் பார்த்திருந்தீர்; அது கிடைக்கிறபோது பெறவேண்டியதுதானே, பெற்றுக்கொள்ளும்; இதற்குத் தடையென்ன?’ என்றது நெஞ்சு; அதற்குமேல் கூறுகிறாராழ்வார் **அது நமது விதிவகையே** என்று. நெஞ்சே! அவன் வெறுமருளையே தருவானாயிருந்தால் அதை நான் பெற்றுவிடமாட்டேனோ? அவன் அருள்தருவதோடு நிற்கவில்லையே? *அஹம் ஸர்வம் கரிஷ்யாமி* என்று பாரித்துவந்த இளையபெருமாள் ***க்ரியதாமிதி மாம் வத*** என்று ஒரு நிர்ப்பந்தங் கொண்டாரன்றோ. ஏவிக்கொள்ளவேணும் என்றாரே; அதுபோல இந்த ஸர்வேச்வரன் தானும் ‘ஆழ்வீர்! என்னை ஏவி அடிமைகொள்வீர்’ என்னா நின்றானே; என்னுடைய விதிநிஷேதங்களுக்குத் தான் கட்டுப்பட்டவனாய். இன்னதை இன்னவிதமாகச் செய்யுமாறு தன்னை நோக்கி விதிக்கவேணுமென்று வேண்டாநின்றானே; இப்படியுமொரு அநியாயமுண்டோ?

எம்பெருமானார்க்கு முன்புள்ளார் சிலர் “அது நமது விதிவகையே” என்பதற்கு ‘அது நம்முடைய பாக்யாநுகுணமாக’ என்று பொருள் பணித்தார்களாம்; *தைவம் திஷ்டம் பாகதேயம் பாக்யம் ஸ்த்ரீ நியதிர் **விதி:***என்ற அமரகோசத்தை அவர்கள் கருத்திற்கொண்டனர் போலும். அப்படியன்றிக்கே எம்பெருமானார் “அப்பொருள் பொருந்தாது, இத்திருவாய்மொழியில் மேலோடுகிற ரஸத்தோடு சேராது; நாம் விதித்தபடியே செய்வானாயிருந்தான் என்னும் பொருளே இணங்கும்” என்றருளிச்செய்வராம். “அது நமது சொல்வகையே” என்றும் பாசுரம்பணித்திருக்கலாம்; அங்ஙனன்றி **‘விதிவகையே’** என்றதில் ஒரு விசேஷமுண்டு. விதியைக் கடந்தால் ப்ரத்யவாயம் வருமென்று அஞ்சுவாரைப்போலே அஞ்சாநின்றானாம் எம்பெருமான். ‘நமக்கு இஷ்டமானதை ஆழ்வாருடைய நியமனமின்றி நம் மனம் போனபடி செய்துவிட்டோமாகில் என்ன ப்ரத்யவாயம் நேருமோ? என்று அஞ்சி

'ஆழ்வீர்! விதிக்கவேணும், விதிக்கவேணும்' என்றானும்; அதை அப்படியே அநுவதிக்கிறாராழ்வார். "என்னைப் பரமபதத்திற்குக் கொண்டுபோ; வழியெல்லாம் குடைகளும் சாமரமும் தோரணமும் வாத்யமுமாக இருக்கவேணும்; நீ கைப்பந்தம் பிடித்துக்கொண்டு ஸ்வாமியெச் சரிக்கை! என்று சொல்லிக்கொண்டு முன்னே செல்லவேணும்; நடைபாவாடை பரப்பவேணும்; திருச்சின்னமும் காஹளியும் பணிமாறவேணும்; திருவிருத்தம் விண்ணப்பம் செய்வாரும் ஸ்தோத்ரரத்னம் சொல்லுவாரும் புடைசூழவேணும்—இப்படிப்பட்ட ஏற்பாடுகள் நீ செய்யவேணும்; என்று ஆழ்வார் திருவாக்கிலே விதிவாசகங்கள் வெளிவரவேணுமென்று எம்பெருமான் நிரீக்ஷிக்கிறபடி.

**நமது விதிவகையே** என்றவிடத்து ஈட்டில் **"ததா அநுஜாநந்த முதார வீக்ஷணை:"** என்ற ஸ்தோத்ர ரத்நஸூக்தியை ப்ரஸங்கித்து நம்பிள்ளையருளிச்செய்துள்ள திவ்யஸூக்திகளுக்கு விண்ணெல்லா முண்டோவிலே! என்ன வேண்டும்படியாயிரா நின்றது. கல்லுங்கரைய நின்ற அந்த ஸ்ரீஸூக்திகளை அப்படியே அநுவதிப்போம்:—

"(**நமது விதிவகையே**) [ததாநுஜாநந்த முதாரவீக்ஷணை:] இது பட்டர்தாமேயருளிச்செய்ய நான் கேட்டேனென்றருளிச் செய்தார். சேனை முதலியார் சட்டையும் மயிர்க்கட்டும் கையும் பிரம்புமாய் வந்து புகுரப்புக்கவாறே நாச்சிமாரும் தானுமாய் ஸ்வைரமாக விருக்கிறவது தவிர்ந்து, நாச்சிமாரும் ஸிம்ஹாஸனத்திலொரு மூலைகளிலே யொதுங்க, தானும் ஸவிநயமாக விருக்குமாய்த்து வ்ருத்தஸாமந்தரைக் கண்ட ராஜாக்களைப்போலே. இவர்தாமும் 'இவ்விருப்புக்குத் தண்ணீர்த் துரும்பாக வொண்ணாது' என்று ஜகந்நிர்வாஹத்துக்கு வேண்டுமவற்றைப் பாசுரப்பரப்பற விண்ணப்பஞ் செய்வராய்த்து. பிராட்டிமாரோடிருக்கு மதிலும் இனிதாயிருக்குமிறே அவனுக்கு இவர்தம்மைக்காண. *ப்ரியேணவிறே, இன்னானை ப்ரஹ்மாவாக்க வேணும் இன்னானை மாற்றவேணும்' என்று வேண்டுமவற்றைச் சுருங்க விண்ணப்பஞ் செய்வர். ஐயர் யாதொன்று சொல்லிற்று அவையெல்லாமப்படியே' என்று கண்களாலே மேலெழுத்திட்டுக் கொடுக்கும்—இவ்வார்த்தை யருளிச் செய்தபோது கிடாம்பியாச்சானோடு அல்லாதாரோடு வாசியறக் குமிழ்நீருண்டது. ஆச்சான்தான் பட்டருக்கு ஸ்நேஹித்திருக்கும் போர. இளையாழ்வான் ஆச்சானை 'பட்டர்தம்மையாச்ரயித்தவர்களிற் காட்டிலும் நீர் தாழ அநுவர்த்திப்பானென்?' என்று கேட்க, நீ அன்று கண்டிலைகாண்; எம்பெருமானார் பட்டர்கையிலே புஸ்தகத்தைக் கொடுத்துத் திருமுன்பே ஒரு ச்லோகத்தை விண்ணப்பஞ் செய்வித்துத் திருப்பிரம்புக்குப் புறம்பாகக்கொண்டு புறப்பட்டுச் சுற்றும் பார்த்தருளி நம்முடையாரடங்கலும் நம்மை நினைத்திருக்குமாபோலே இவனை நினைத்திருங்கோள் என்றருளிச் செய்தார்."

**இருள் தருமாஞாலத்துளினிப்பிறவியான் வேண்டேன்**—இது ஆழ்வார் என்று, தம் திருவுள்ளத்தோடே சொல்லுகிறபடி. "ஆழியானருள் தருவானமைகின்றான் அது நமது விதிவகையே" என்று சொன்ன ஆழ்வாரை நோக்கி நெஞ்சு கேட்டது 'எம்பெருமானுடைய ஆசையிருக்கிறபடி தெரிந்து கொண்டேன், நீர் அவனுடைய ஆசையின்படியே ஒழுகுவதாயிருக்கிறீரா? இங்கேயே குணநுபவம் செய்வதாயிருக்கிறீரா?' என்று. அதற்கு ஆழ்வார் விடை கூறினர் அவன்வழியே போவதாகத் தானிருக்கிறேனென்றார். அதற்கு நெஞ்சு சொல்லிற்று "வானுயரின்பமெய்திலென்? மற்றை நரகமே யெய்திலென்? என்று சொன்னவரன்றோ நீர். அங்குப்போனால் திருநாடு ஒன்றே; இங்கு *சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே, மதிட்கச்சியூரகமே பேரகமே; பேராமருதிறுத்தான் வெள்ளறையே வெஃகாவே, பேராலி தண்கால் நறையூர் திருப்புலியூர், ஆராமஞ் சூழ்ந்தவரங்கம், கணமங்கைக்

காரார் மணிநிறக்கண்ணனூர் விண்ணகரம், சீரார்கணபுரம் சேறை திருவழுந்தூர், காரார் குடந்தை கடிகை கடன்மல்லை, ஏரார் பொழில்சூழிட வெந்தை நீர்மலை, சீராரும் மாலிருஞ் சோலை திருமோகூர், பாரோர்புகழும் வதரிவட மதுரை யென்றிப்படி நாற்றேழு திருப்பதிகளை யநுபவிக்கலாமே; ஏரார் முயல்விட்டுக் காக்கைப்பின் போகவா நினைக்கிறீர்." என்று. அதற்குமேல் ஆழ்வார் சொல்லுகிறார்—[**இருள்தருமாஞாலத்து ளினிப் பிறவி யான் வேண்டேன்**] நெஞ்சே! இந்நிலம் இருள் தருமாஞாலமென்பதறியாயோ? நித்யஸூரிகள் தாமேஇங்குவந்தாலும் அவர்களையும் மருளச்செய்யுமதன்றோ இந்நிலம். நித்யஸூரிகளென்று என்ன? நித்யஸூரி நாதன்தானே வந்தாலும் அங்ஙனே யன்றோ?* *உபமாநமசேஷாணும் ஸாதூநாம் யஸ் ஸதாபவத்* என்று புகழப்பட்ட ப்ரஹ்லாதாழ்வானையுமன்றோ மருளப் பண்ணிற்று இந்நிலம். இருக்கவிருக்க அஜ்ஞானத்தை வளர்ப்பதாள இந்நிலத்திலே யிருப்பதை இனி யான் வேண்டேன்.

"இனியிருக்க யான் வேண்டேன்" என்ன வேண்டுமிடத்து "இனிப்பிறவியான் வேண்டேன்" என்றதில் ஒரு மருமமுண்டு; அதாவது—*க்ருதாதிஷு நரா ராஜந் கலௌ இச்சந்தி ஸம்பவம்* என்று ஸ்ரீ பாகவதத்திற் கூறியபடி ஆழ்வார் ஆசைப்பட்டு வந்து பிறந்தவராதலால், இப்படி நான் ஆசைப்படப் பெற்றதாயினும் இப்பிறவி இனி வேண்டா; கலியுகத்தில் வந்து பிறந்து இந்த யுகத்தவர்களுக்குத் திருவாய்மொழி பாடித்தரவேணுமென்று ஆசைப்பட்டேன்; [**இனி**] அக்காரியம் நிறைவேறியானபின்பு இதுவரையிலும் மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்ததுபோல இனிப்பிறக்க விரும்பமாட்டேனென்கிறார் என்பதாம்.

இப்படிச் சொன்ன ஆழ்வாரை நோக்கி மீண்டும் நெஞ்சு சொல்லிற்று—ஆழ்வீர்! உமக்கு ஒன்று நினைப்பூட்டுகிறேன்; கீழே நீர் திருவாறன் விளையை யநுபவிக்கும்போது எம்பெருமான் வந்து உம்மைத் திருநாட்டுக்கு அழைத்தான்; அப்போது "தீவினை யுள்ளத்தின் சார்வல்லவாகித் தெளிவிசும் பேறலுற்றால்......திருவாறன் விளையதனை மேவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலென்னு மென்சிந்தனையே" என்று சொல்லியிருக்கிறீர். அதனை மறந்தீரோ? 'இது பரமபதத்துக்குப் போம்வழி, இது திருவாறன் விளைக்குப்போம்வழி, எந்தவழியிற் செல்ல விரும்புகிறீர்?' என்றால் திருவாறன் விளைக்கே என்னெஞ்சு செல்லுமென்றீர்; அப்படியிருக்க அதற்குமாறாக இப்போது சொல்லத்தகுமோ? என்றது (நெஞ்சு). அதற்குமேல்சொல்லுகிறாராழ்வார்—**மருளொழிநீ மடநெஞ்சே!**—அப்படி நான் நினைத்திருந்தது உண்மையே; ஆனால் இவ்விருள்தருமா ஞாலத்தின் தன்மையை அறியவறிய அந்நினைவு மருளேயாய்த் தோன்றிற்று. நெஞ்சே! அந்தமருளை நீயும் தவிர்ந்திடு. உகந்தருளின நிலங்களிலுண்டான ஆதராதிசயத்தில் ஒருகுறையில்லை. ஆனால் ப்ரக்ருதிவச்யனாக்கி சப்தாதி விஷயங்களிலே கொண்டுபோய்மூட்டும் ஸம்ஸாரஸ்வபாவத்தை யுணர்ந்த பின்பு *இருபாடெரி கொள்ளியினுள்ளெறும்பேபோல் நலிவுபடப்பாராதே. *பாம்போடொரு கூரையிலே பயிலப்பாராதே; பின்னை என் செய்யவேணு மென்கிறயோ;

**வாட்டாற்றானடி வணங்கே**—திருவாட்டாற்றெம்பெருமானுடைய மனோரதத்தின் வழியே யொழுகப்பார் என்றபடி. திவ்யதேசங்களைவிட்டுப் பரமபதத்தேறப் போவதாக நிச்சயித்திருக்குமாழ்வார் இப்போது "வைகுந்தனடி வணங்கே" என்றன்றோ சொல்லப்ராப்தம்; அதைவிட்டு, மீண்டும் திவ்யதேசத்தில் நசை தோன்ற "வாட்டாற்றானடி வணங்கே" என்று சொல்லுவதென்? என்று சங்கைதோன்றும். கேண்மின்; இப்போது திருவாட்டாற்றில் வந்து காட்சிதரும் பெருமான் ஆழ்வாரைத் திருநாட்டுக்கு அழைத்துச் செல்ல விரைந்திருப்பவன்; அது மேற்பாசுரங்களில் வியக்தமாகவுள்ளது. ஆகவே, வாட்டாற்றானென்பதற்கு-நமக்கு ஹிதகாமனாய் நம்மைக் கொண்டுபோகவந்திருப்பவனென்றிவ்வளவே பொருள்.

**அடிவணங்கே** யென்றதும்—அவன்வழியையே பின் செல்லப்பார் என்றபடி. வேறு அபிப்ராயமின்றிக்கே ஒரேவிதமான அபிப்ராயமுடையவன் என்பதைக் காட்டும்படியான அடிவணங்குகையைச் சொன்னது—'நமஸ்காரம் பண்ணு' என்ற பொருளில் சொன்னதன்று; அவனுடைய கருத்துக்கிணங்கியிரு என்றவாறு. இங்கே நம்பிள்ளையீடு;—"நமக்கு ஹிதகாமனாய் வந்திருக்கிற அவன்வழியேபோய் அவனை யநுபவிக்கப்பாராய். உகந்தருளின நிலங்களிலே வந்து நிற்கிறது நம்மை அவ்வருகே கொடுபோகைக்காயிருக்கும். நீயும் அவனினைவிலே போகப் பாராய். அடிவணங்குகையாவது— ஈரரசு தவிருகையிறே; அவன்கருத்திலே போகை." ... ... ... ... ... (1)

வாட்டாற்றானடிவணங்கி மாஞாலப்பிறப்பறுப்பான்*
கேட்டாயேமடநெஞ்சே கேசவனெம்பெருமானை*
பாட்டாயபலபாடிப் பழவினைகள்பற்றறுத்து*
நாட்டாரோடியல்வொழிந்து நாரணனைநண்ணினமே. (2)

| | | | |
|---|---|---|---|
| மாஞாலம் பிறப்பு அறுப்பான் | இருள் தருமா ஞாலத்தில் ஜன்ம ஸம்பந்தத்தைத் தொலைப்பதற்காக | பழ வினைகள் பற்று அறுத்து | அவித்யை கருமம் முதலான அநாதியான தொல்லைகளை யறுத்து |
| வாட்டாற்றான் அடி வணங்கி | திருவாட்டாற் றெம்பெருமானுடைய திருவடிகளை வணங்கி | நாட்டாரோடு இயல்வு ஒழிந்து | உலகத்தாரோடு ஸம்பந்தத்தையும் தவிர்த்து |
| கேசவன் எம்பெருமானை | கேசவனை பெருமானை | நாரணனை நண்ணினம் | ஸ்ரீமந் நாராயணனை கிட்டப்பெற்றோம்; |
| பாட்டுஆயபலபாடி | பாட்டானவை பலவும் பாடி | மட நெஞ்சே கேட்டாயே | நெஞ்சே! பெற்ற பேற்றின் கனத்தைக் கண்டாயே. |

***—இப்பாட்டும் நெஞ்சோடே ஸம்வாதமாயிருக்கிறது. 'ஆழியானருள் தருவானமைகின்றான்" என்று எம்பெருமான் அருள் செய்வதாகச் சொல்வதற்கு இங்குவிஷயமில்லையே; *பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்புமிந்நின்ற நீர்மையினி யாமுறாமை யென்று அடிதொடங்கியே நீர்பிரார்த்தித்தவரன்றோ. பலகாலும் பிரார்த்தித்துக் கேட்டதற்குப் பலன்பெற்றால் அது அருள் பெற்றதாகுமோ? என்று நெஞ்சங்கேட்க; அதற்கு விடையிறுக்கிறாராழ்வார்—அறிவிலியான நெஞ்சே! நாம் அபேக்ஷித்தது எவ்வளவு? பெற்றது எவ்வளவு? என்று ஆராயமாட்டிற்றிலையே; இப்போது எவ்வளவு பெற்றோமோ, அவ்வளவும் முன்பு அபேக்ஷித்திருக்கிறோமாவென்று சிறிது விமர்சித்துப்பார். பொய்ந்நின்ற ஞானம் போகவேணும், பொல்லாவொழுக்கு கழியவேணும், அழுக்குடம்பு தொலையவேணும் என்று இவ்வளவேயன்றோ நாம் இரந்தது. அதாவது விரோதிகள் கழியவேணுமென்று இவ்வளவு மாத்திரமன்றோ நாம் வேண்டினது. நாம் பெற்றது இவ்வளவேயோ? பழவினைகள் பற்றறுத்து மேற்பட, பாட்டாயபலபாடப்பெற்றோம், நாட்டாரோடியல்வொழியப் பெற்றோம்; நாரணனை நண்ணப்பெற்றோம்; இவ்வளவும் அவனருள் பலித்தபடியன்றோ; இதை நன்கு உணர்ந்து பாராய் நெஞ்சே என்று சொல்லும் முகத்தால் தாம்பெற்றபேற்றின் கனத்தைப் பாராட்டிக் கூறுகிறாராயிற்று.

**மாஞாலப்பிறப்பறுப்பான் வாட்டாற்றானடிவணங்கி**—எம்பெருமானையடிவணங்கி நாம் பிரார்த்தித்தது மாஞாலப்பிறப்பறுப்பது மாத்திரமே; மற்றொன்றன்று. ஆயினும் நாம்பெற்ற பேறுகளைப். "கேட்டாயே நெஞ்சே." என்பது ஆனந்தமேலீட்டால் சொல்லுகிற வார்த்தை. **கேட்டாயே** யென்றது—நன்றாக ஆராய்ந்துபார் என்றபடி. நாம் பெற்றபேறு

என்னவெனில், **கேசவனெம்பெருமானைப் பாட்டாயபலபாடி**—தன்னுடைய குழலழகைக் காட்டி நம்மைபடிமைகொண்டான்; *பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம்பாடலை நம்மை யிட்டுக் கவிபாடுவித்துக்கொண்டான். இது பெரும்பேறன்றோ? பச்சைப்பசும் பொய்கள்பேசி மானிடத்தைக்கவிபாடுவார் மலிந்தவுலகில் *என்னையென்னப்ப னெம் பெருமானைக்கவிபாடப் பெற்றதும், அதுதானும் ஒருநூறு இருநூறன்றிக்கே ஆயிரமாகப் பாடப்பெற்றதும் நாம் வேண்டிப்பெற்றதோ? இதற்குமேலே, **நாட்டாரோடியல்வொழிந்து**—உண்டியே உடையே உகந்தோடுமிம்மண்டலத்தாரோடுஸங்கமொழியப்பெற்றபடி கண்டாயே; "யானேயென்றனதே" என்று அஹங்காரமமகாரவச்யராயிருக்குமிந்த நாட்டாரோடு ஸங்க மறுகை ஸாமான்யமானதோ? இதற்கும்மேலே, **நாரணனை நண்ணினமே**—ஔபாதிகபந்துக் களைவிட்டு நிருபாதிகபந்துவான நாராயணனையே ஸகலவிதபந்துவுமாக நண்ணப்பெற்றோம். இவ்வளவும் நாம் இரந்து பெற்றதன்றிக்கே அவனருள் பலித்தபடிகாண்—என்றாராயிற்று.(2)

**நண்ணினம்நாராயணனை நாமங்கள்பலசொல்லி***
**மண்ணுலகில்வளம்மிக்க வாட்டாற்றான்வந்து*இன்று**
**விண்ணுலகந்தருவானாய் விரைகின்றான்விதிவகையே***
**எண்ணினவாறாகா இக்கருமங்கள்என்னெஞ்சே!** (3)

| | | | |
|---|---|---|---|
| என் நெஞ்சே | என்னுடைய அநுபவத்திற்கு வாய்த்த நெஞ்சே!, | இன்று விதிவகையே விண் உலகம் தருவான் ஆய் | இப்போது நமது நியமனப் படியே திருநாடு தருபவ னாகி |
| பல நாமங்கள் சொல்லி | பல திருநாமங்களையுஞ் சொல்லி | | |
| நாராயணனை நண்ணினம் | பரமபந்துவான ஸ்ரீமந் நாராயணனைக் கிட்டப்பெற்றோம்; | விரைகின்றான் | த்வரிதனாயிரா நின்றான்; |
| மண் உலகில் | இந்நிலத்திலே | இக்கருமங்கள் | இக்காரியங்கள் |
| வளம் மிக்க வாட்டாற்றான் வந்து | திருக்கல்யாண குணஸம்ருத்தி பொருந்திய திருவாட்டாற் றெம்பெருமான் தானே வந்து | எண்ணின ஆறு ஆகா | நாம் எண்ணினபடிக்கு மேற் பட்டு விட்டதே. |

***—இப்பாட்டும் நெஞ்சோடே கொண்டாடிச்சொல்லுகிறது. நம்முடைய பேற்றுக்கு அவன் விரையும்படியாயிற்றே, இப்படியாகுமென்று நாம் கனவிலாவது எண்ணினதுண்டோ? நாமெண்ணினதொன்று, நிகழ்ந்தது மற்றொன்றாயிற்றே! இது வென்! என்று வியக்கிறார். ப்ரேமம் தூண்டச்சொல்லுவார்க்கு இன்ன திருநாமந்தான் சொல்லவேணுமென்கிற நியதியில்லாமையாலே **"நாமங்கள் பல சொல்லி"** என்கிறார். **மண்ணுலகில் வளம்மிக்க வாட்டாறு**—பரமபதத்திலே எம்பெருமானுடைய திருக்குணங்கள் பகல்விளக்குப்போலே அப்ரகாசமாயும் அல்பப்ரகாசமாயுமிருக்கும்; இருட்டறையில் விளக்குப்போலே ப்ரகாசிப்பதிங்கேயாகையாலே, வளம் மண்ணுலகில் மிக்கதாயிற்று.

ஆசார்ய ஹ்ருதயத்தில் (184) "மோக்ஷதானத்தில் ப்ரணத பாரதந்த்ர்யம் வளம்மிக்க நதியிலே கரைபுரளும்" என்றருளிச் செய்தார். இங்கு, திருவாட்டாற்றை வளம்மிக்க நதியென்று வ்யபதேசித்து, இதில் ப்ரணத பாரதந்த்ர்யம் மிக மிக விளங்குமென்கையாலே இக்குணம் விளங்கப்பெறுகையே இத்தலத்திற்கு வளமிகுதியென்க. கேட்பாரற்ற ஸ்வதந்த்ரனாய் ஸர்வநியந்தாவாயிருக்கிற ஸர்வேச்வரன் "நமது விதிவகையே" என்று ஆழ்வார் பலகாலுஞ் சொல்லும்படி பரதந்த்ரனாய் நியாம்யனாயிருந்தானென்றால் இதனில் மிக்க வளமில்லையிறே.

"இன்று விண்ணுலகம் விதிவகையே தருவானாய் விரைகின்றான்" என்று மூன்று மடியை அந்வயித்துக் கொள்வது. [இன்று] நேற்றுவரை எதிர் பார்த்ததன்று இது; இன்று இங்ஙனே விடியக்கண்டதித்தனை. "விண்ணுலகில் வாழ்ச்சி தருவானாய்" என்னாமல் "விண்ணுலகம் தருவானாய்" என்றதை நோக்கி நம்பிள்ளையருளிச் செய்வது பாரீர்; "அங்கே ஒரு குடியிருப்பு மாத்ரமே கொடுத்து விடுவானாயிருக்கிறிலன்; *வானவர்நாடு* *ஆண்மின்கள் வானகம்* என்கிற பொதுவையறுத்து நமக்கே தருவானாகத் த்வரியா நின்றான்" என்று. [விரைகின்றான்] எம்பெருமான் தான் மூட்டை கட்டிக்கொண்டு முன்னேபோவது, பின்னே ஆழ்வார் புறப்பட்டு வராமைகண்டு திரும்பிவந்து 'ஆழ்வீர்! வாரும் வாரும்' என்று சொல்லிப் பதறா நின்றானாம். இன்று இப்படிப் பதறுகிறவன் "காவிவையங்கொண்ட நடந்தாமரை கட்கே கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ" என்று கதறினபோது எங்கே யுறங்கினானென்று கேட்கவேண்டா? ஒரு காரியத்திற்காக வைத்திருந்தான்; அக்காரியம் முடியுமளவானவாறே விரைகின்றானென்பது யுக்தமேயன்றோ. (காரியமாவது—*தொண்டர்க் கமுதுண்ணச் சொன் மாலைகள் சொல்லுவிக்கை.)

விரைகின்றானென்கைக்கு விஷயமுண்டோ? ஸர்வசக்தனான தனக்கு ஆழ்வாரைக் கொண்டுபோக ருசியிருந்ததாகில் கொண்டுபோகத் தடையென்ன? தடுப்பாரொருவருமில்லையே. 'விரைகின்றான்' என்கையாலே ஏதோ தடையிருப்பது போலவன்றோ தெரிகிறது; அது என்னதடை? என்று கேட்க நேரும். கேண்மின்; தன்னிஷ்டப்படி ஆழ்வாரைக் கொண்டுபோவதில் அவனுக்கு ஈஷத்தும் ருசியில்லை; 'இப்படிசெய், இப்படிசெய்' என்று ஆழ்வார் விதிக்க, அதன்படி நடந்துகொண்டால்தான் தனக்கு ஸ்வரூபஸித்தியென்று அவன் நினைத்திருக்கையாலே அந்த நியமனம் பெறுவதற்காகவே அவன் விரைகின்றானென்றுணர்க. அதற்காகவே முதற்பாட்டிற்போல இப்பாட்டிலும் "விதிவகையே" என்றது.

விரைகின்றானென்றதில் ஒரு சிறந்த சாஸ்த்ரார்த்தம் தொனிக்கும்; உலகில், உடைமையைப் பெறுவது உடையவனுக்கே பணி. உடைமை தவறிவிட்டால் அது கரையமாட்டாது, அதைத் தேடிப்பெற்றுப் பூண்டுகளிக்கவேணுமென்று உடையவன்தான் விரைவது இயல்பு, அதுபோல, சேதநலாபம் ஈச்வரனுக்கே யாகையாலே அவன் விரைவதுதான் ப்ராப்தம்; ஸபலமாகக் கூடியதும் அதுதான்—என்பது சாஸ்த்ரார்த்தம்.

**எண்ணினவாறாகா**—*பொய்ந்நின்ற ஞானமும்...இந்நின்ற நீர்மை யினியாமுறாமை* என்று இவ்வளவேயன்றோ நாமெண்ணினது. அவன் இங்ஙனே விரையவேணுமென்றாவது, விரையப்போகிறானென்றாவது எண்ணினோமோ? [இக்கருமங்கள்] எம்பெருமான் விஷயமான காரியமெல்லாம் இப்படியே யென்றவாறு. நாம் எண்ணினவளவுக்குப் பதின்மடங்காகக் காரியம் பலிப்பது பகவத்விஷயத்திலே யென்க. லௌகிகரிலே சிலரை நோக்கி "என்காரியத்திற்கு நீயே கடவை" என்கிறோம்; அவர்களும் அப்படியேயென்று தலையாலுக்குவதுண்டு; ஆயினும் எண்ணினதில் நூற்றிலொருபங்கும் பலிக்கக் காணமாட்டோம்; சிறிது பலித்தாலும் அதற்கும் நம்முடைய முயற்சியே ஊடுருவச் செல்லும். இதற்கு மாறாயிருக்கும் பகவத்விஷயம்.

இப்படிப்பட்ட கனத்தபேறுபெறுகைக்கு அடி நீயேயென்று நெஞ்சைக் கொண்டாடிச் செல்லுகிறார் **என்னெஞ்சே யென்று.** **என்** என்பதைப் பிரித்து என்னே! யென்கிற பொருளிற்கொண்டு, வியந்து சொல்லுகிறவாறாகவும் கொள்ளலாம். ... (3)

**என்னெஞ்சத்துள்ளிருந்து இங்கிருந்தமிழ் நூலிவைமொழிந்து***
**வன்னெஞ்சத்திரணியனை மார்விடந்தவாட்டாற்றான்***
**மன்னஞ்சப்பாரதத்துப் பாண்டவர்க்காய்ப்படை தொட்டான்***
**நன்னெஞ்சே! நம்பெருமான் நமக்கருள்தான்செய்வானே,** (4)

| | | | |
|---|---|---|---|
| நல் நெஞ்சே | நல்ல மனமே ! | படைதொட்டான் | ஆயுதமெடுத்த பக்ஷபாதியாய் |
| வல் நெஞ்சத்து இரணியனை | வலிய நெஞ்சையுடையனான இரணியாசுரனது | நம்பெருமான் | நமக்கு ஸ்வாமியானவன் |
| மார்பு இடந்த | மார்பை இருபிளவாக்கி முடித்தவனாய் | என் நெஞ்சத்துள் இருந்து | என்னெஞ்சினுள்ளே பொருந்தியிருந்து |
| வாட்டாற்றான் | திருவாட்டாற்றிலே ஸன்னிதி பண்ணியிருப்பவனாய் | இங்கு | இவ்விருப்பிலே |
| மன் அஞ்ச | அரசர்களெல்லாரும் அஞ்சும்படி | இரு தமிழ் நூல் இவை | பெரிய தமிழ் நூலாகிய இத்திருவாய்மொழியை |
| பாரதத்து | பாரதப் போரிலே | மொழிந்து | தானே யருளிச்செய்து (அவ்வளவோடும் நில்லாமல்) |
| பாண்டவர்க்கு ஆய் | தன்னடியார்களான பாண்டவர்களுக்காக; | நமக்கு அருள் தான் செய்வானே | நமக்கு மேன்மேலு முதவிகளைச் செய்வானுயிரா நின்றான். |

***கீழ் முதற்பாட்டிலும் மூன்றாம் பாட்டிலும் "...வகையே" என்று, எம்பெருமான் நியாமகனாயிருக்கு மிருப்புத்தவிர்ந்து நியாம்யனாயிருக்கும்படியை யருளிச்செய்தாரே, ஸர்வேச்வரனிடத்தில் இது ஸம்பவிக்குமோ வென்று சிலர் சங்கிப்பர்களென்று கருதி அந்த சங்கைக்குப் பரிஹாரமாக இப்பாட்டு அருளிச்செய்கிறபடி. இப்பாட்டில் இரண்டாமடியும் மூன்றாமடியும் உயிர்நிலையாயிருக்கும். எம்பெருமான் தான் அடியார்கட்கு விதேயனென்னுமிடத்தை ப்ரஹ்லாதாழ்வான் திறத்திலும் பாண்டவர்கள் திறத்திலும் காட்டினானாயிற்று. முன்னே நின்ற தூணைக்காட்டி "நீ சொல்லுகிற பகவான் இங்குளனோ?" என்று இரணியன் கேட்க, எங்குமுளனென்று ப்ரஹ்லாதன் சொல்ல, அவனுடைய சொல்லை மெய்ப்பிக்கைக்காகவே அப்போதே அத்தூணில் நின்றும் தோன்றினபடியாலே இந்த அபதானத்தாலே பக்தவிதேயத்வம் வெளியாயிற்று. அர்ஜுநன் *ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மே அச்யுத* என்றுசொல்ல, அப்படியே உபய ஸேனைகளினிடையே ஸேனையைக் கொண்டுபோய் நிறுத்துவது முதலிய பலகாரியங்களினால் அவ்வவதாரத்தில் ஆச்ரிதவிதேயத்வத்தை வெளியிட்டுக் கொண்டானாயிற்று.

**என்னெஞ்சத்துள்ளிருந்து**—நெடுங்காலம் ஸம்ஸாரத்திலே விஷயாந்தரங்களிலே மண்டிக் கிடந்தமையாகிற தண்மைதோற்ற **என்னெஞ்சு** என்றார் ஆழ்வார்; ஆழ்வாருடைய மமகாரத்திற்கு இலக்கான வஸ்துவே நமக்கு உத்தேச்ய மென்றிருக்கும் எம்பெருமான் இவர் **என்னெஞ்சு** என்றதுவே ஹேதுவாக மேல்விழுந்து உள்ளே புகுந்தான்; மறுபடியும் வெளியே வந்தால் மீண்டும் உள்ளேபுக வழிகிடைப்பது அரிதாகுமோ வென்கிற அச்சத்தினால் அங்கேயே ஸ்தாவரப்ரதிஷ்டையாயிருந்தான்; அப்படியிருந்து செய்ததென்? என்னில், **இங்கு இருந்தமிழ் நூலிவை மொழிந்து**—இப்படிப்பட்ட திருவாய்மொழியை யருளிச் செய்தானாயிற்று. "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் **சொன்னேன்**" என்கிறார் ஒருகால்; மற்றொரு கால் இத்தமிழ் நூலை அவன்மொழிந்தானாகச் சொல்லுகிறார்; உண்மைதானிருந்தபடியென்னென்னில் இரண்டும் உண்மையே. வடமொழி வேதத்தைப் பற்றிச் சொல்லுமிடத்து ***அநாதி நிதநா :ஹ்யேஷா வாகுத்ஸ்ருஷ்டா ஸ்வயம்புவா*** என்றது. 'அநாதிநிதநா' என்று சொல்லி வைத்து ஸ்யம்புவா உத்ஸ்ருஷ்டா வாக், என்றதில்லையோ? அதுபோலவே இங்குங் கொள்க.

இப்படி திருவாய்மொழியைப் பேசி வெளியிடுவித்துக்கொண்ட குணம் பரத்வமன்று ஸௌலப்யமேயென்று காட்டிக்கொண்டுமேல் அருளிச்செய்கிறார் **வன்னெஞ்சத்திரணியனை மார்விடந்த**—இங்கு இரணியன் மார்விடந்ததைச் சொல்லுவதில் நோக்கில்லை; சிறுக்கனுக்கு உதவினபடியைச் சொல்லுவதே விவக்ஷிதம். சிறுக்கன் நினைத்தபடி செய்தவன் நான் சொன்னபடி செய்யானே என்கைக்காக இது சொல்லிற்று. **மன் அஞ்ச**—*மலைபுரை தோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர் குலைய நூற்றுவரும் பட்டழிய என்றபடி. பாண்டவர்க்காய்ப் படை தொட்டது—ஆயுதமெடேனென்று சொல்லிவைத்து ஆயுதமெடுத்தது. பெரியாழ்வார் திருமொழியில்* மன்னர் மறுக மைத்துனன்மார்க்கொரு தேரின்மேல் முன்னங்கு நின்று மோழை யெழுவித்தவன் மலை* என்று ஒரு கதை யருளிச்செய்திருப்பதுண்டு; அதையும் இங்கு நம்பிள்ளை யெடுத்துக்காட்டியருளினர். அர்ஜுனனுடைய தேர்க்குதிரைகள் இளைத்த போது, கடினமானவிடங்களிலும் நீர் நரம்பு அறியுமவனாகையாலே வாருணாஸ்த்ரத்தைவிட்டு அங்கே நீரையுண்டாக்கிக் குதிரைகளைவிட்டு நீரூட்டிப் புரட்டி யெழுப்பிக் கொண்டுபோனானென்பது கதை. இதைக் கண்ட எதிரரசர்கள் 'இவனுடைய ஆச்ரித பக்ஷபாத மிப்படியிருக்கையாலே நாம் இவர்களை வெல்லுகை கூடுமோ!' என்று குடல்மறுகினராகையாலே இங்கு **மன்னஞ்ச** என்றது ... (4)

**வானேறவழிதந்தவாட்டாற்றான் பணிவகையே***
**நானேறப்பெறுகின்றேன் நரகத்தைநகுநெஞ்சே!***
**தேனேறுமலர்த்துளவம் திகழ்பாதன்செழும்பறவை***
**தானேறித்திரிவான தாளிணையென்தலைமேலே.** (5)

| | | | |
|---|---|---|---|
| வான் ஏற வழி தந்த | அர்ச்சிராதி மார்க்கத்தைக்காட்டிக்கொடுப்பதாக விருக்கிற | தேன் ஏறு மலர் துளபம் திகழ் பாதன் | தேன் மிகுந்த துளவமலர் விளங்கும் திருவடிகளையுடையனாய் |
| வாட்டாற்றான் | திருவாட்டாற் றெம்பெருமான் | செழு பறவை தான் ஏறி திரிவான | அழகிய கருடன்மீதேறித் திரியுமவனானபெருமானுடைய |
| பணி வகையே | பண்டு பணித்திருந்தபடியே | தாள் இணை | உபயபாதங்கள் |
| நான் ஏற பெறுகின்றேன் | நான் மேலே செல்லப் பெறநின்றேன்; | என் தலை மேலே | என் தலை மேலாயின. |
| நெஞ்சே நரகத்தை நகு | மனமே! ஸம்ஸார பூமியை நோக்கிச் சிரித்திடு; | | |

***—அர்ச்சிராதி மார்க்கத்தாலே போகப் பெறுகை தமக்கு ஸமீபித்துவிட்டதென்பதை மிகுந்த களிப்புடன் கூறுகிறார். திருவாட்டாற்றெம்பெருமானுக்கு **"வானேற வழி தந்த"** என்றே நிரூபகம்போல அருளிச்செய்கிறார்காண்மின், வானேறுவதற்கானவழி—அர்ச்சிராதி மார்க்கம். ***முக்தோர்ச்சிர் திநபூர்வபக்ஷ ஷடுதங்மாஸே** த்யாதியாக நடாதூரம்மாளருளிச்செய்தது காண்க. *நடைபெறவங்கிப் பகலொளி நாளுத்தராயணமாண்டு* இத்யாதி தேசிகப்ரபந்தப் பாசுரமுங்காண்க. வானேறும் வழியைத் தரவிருக்கிறானேயல்லது தந்துவிடவில்லை; ஆயினும் **தந்த** வென்று இறந்தகாலமாகக் கூறினது தேற்றம் பற்றியென்க.

**பணிவகையே நானேறப் பெறுகின்றேன்**—அவன் கீதையிலே* **மோக்ஷயிஷ்யாமி மா சுச:*** என்று பண்டே சொல்லி வைத்திட்டானே; அப்பேறுதன்னை விரைவில் நான்பெறவிருக்கின்றேனென்று திருவுள்ளத்தைக் குறித்துக் கூறினாராழ்வார்; அதற்கு நானென்ன செய்யவேண்டுமென்று திருவுள்ளம் கேட்க; **நரகத்தை நகு நெஞ்சே!** என்கிறார். நெடுநாளாக நம்மை ஸம்ஸாரியாக்கி யெளிவரவுபடுத்தின ஸம்ஸாரத்தைப் புரிந்து பார்த்துச் சிரி; உன்னை அடியறுத்தோமே யென்று சொல்லிச் சிரி என்கிறார். பிள்ளையழகிய மணவாளப் பெருமாளரையர் ஒரு வியாதி-விசேஷத்தாலே மிகவும் நோவுபட்டிருந்தார்; அவர்க்கு

ஸ்ரீ ரங்கநாதன் பரமபதமருளத் திருவுள்ளம்பற்றித் திருமாலை திருப்பரிவட்டம் முதலான வரிசைகளை வரவிட்டருளினவளவிலே "நானேறப்பெறுகின்றேன் நரகத்தை நகு நெஞ்சே" என்று இப்பாசுரத்தைச் சொல்லி நோயைப்பார்த்துச் சிரித்தாராம். "நரகத்தைநகு" என்ற இவ்விடத்திற்கு நரகலோகத்தைப்பார்த்துச் சிரியென்று சிலர் பொருள் கூறுவர்; அது வேண்டா; ஸம்ஸாரத்திற்கே நரகமென்று பெயராதலால் ஸம்ஸாரபூமி யென்கிற பொருளே இங்குக் கொள்ளத் தகும்.

பேறு கைபுகுந்தாலன்றோ நரகத்தைச் சிரிக்கலாம்; அது கைபுகுந்து விட்டதோ வென்ன; அதில் ஸந்தேஹமென்? என்கிறார் பின்னடிகளால். எம்பெருமான் தாளிலணிந்த துளபமாலையுடன் பெரிய திருவடியின்மேலேறி வந்து நின்று ஸேவை ஸாதிக்கின்றானே, இனி நான் வானேறுவதில் ஐயமுண்டோ என்பது பின்னடிகளின் பரமதாற்பரியம். **தேனேறு மலர்த்துளவந் திகழ்பாதன்**—*தேனே மலருந் திருப்பாதம் *என்றபடி எம்பெருமானுடைய திருவடிகளில் தேன் வெள்ளமிடுமே; ***விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:*** என்று வேதமும் ஓதிற்றே; அந்தத் தேனும் திருத்துழாயில் ஏறித் தேனேறு மலர்த்துளவமாயிற்றென்க. **செழும் பறவை தானேறி**—*பறவையேறு பரம்புருடா! நீயென்னைக் கைக்கொண்டபின்* என்கிறபடியே ஆழ்வாரைக் கைக்கொள்ளுகைக்கு செழும்பறவை மீதேறி வந்தானாயிற்று. **திரிவான**—திரிவானுடைய; **அ**—ஆறம் வேற்றுமையுருபு; பெரிய திருமொழியில் (8-7-10) *கலியன தமிழிவை * என்ற பிரயோகமுங்காண்க. **தாளிணை என் தலைமேலே**—பெரிய திருவடியின் தோளிலேயிருந்த திருவடிகள் தம் தலைமேலேயேறப்பெற்ற அதிசயம் என்னே! என்று வியக்கிறார். ... ... ... ... (5)

**தலைமேலதாளிணைகள் தாமரைக்கண்என்னம்மான்***
**நிலைபேரானென்னெஞ்சத்து எப்பொழுதும்எம்பெருமான்***
**மலைமாடத்தரவணைமேல் வாட்டாற்றான்மதமிக்க***
**கொலையானைமருப்பொசித்தான்குரைகழல்கள்குறுகினமே.** (6)

| | | | |
|---|---|---|---|
| தாள் இணைகள் தலை மேல | (அவனது உபய பாதங்கள் எனது தலைமேலுள்ளன; | மலை மாடத்து வாட்டாறு | மலைபோன்ற மாடங்களையுடைய திருவாட்டாற்றிலே |
| தாமரை கண் என் அம்மான் | புண்டரீகாக்ஷனை அஸ்மத் ஸ்வாமியாய் | அரவு அணை மேலான் | சேஷசயனத்தின் மீது கண் வளர்ந்தருள்பவனும் |
| என் நெஞ்சத்து | எனது நெஞ்சிலே | மதம் மிக்க கொலை யானை மருப்பு ஒசித்தான் | மதமிகுதியினால் கொலையிலே முயன்ற குவலயாபீடயானையின் கொம்பை முறித்தவனை பெருமானுடைய |
| எப் பொழுதும் நிலை பேரான் | ஒருபோதும் நிலைபெயராது நிரந்தரவாஸம் செய்பவனும் | குரை கழல்கள் | வீரக்கழலிறைசை பொருந்திய திருவடிகளை |
| எம்பெருமான் | தன்னுடைய பெருமையை எமக்குக் காட்டிக்கொடுத்தவனும் | குறுகினம் | கிட்டப்பெற்றோம். |

***—தாம்பெற்ற பேறுகளை ஒன்றிரண்டு மூன்றென்று எண்ணுகிறார். திருவடிகளை என் தலைமேலே வைத்தருளினான், அழகிய திருக்கண்களாலே என்னைக் குளிர நோக்கியருளா நின்றான்; ஒருகாலும் என்னெஞ்சில் நின்றும் நிலை பேரான்—இவையன்றோ நான் பெற்ற பேறுகளென்கிறார். **தாளிணைகள் தலைமேல**—* நீயொருநாள் படிக்களவாக நிமிர்த்த நின் பாத பங்கயமே தலைக்கணியாய்*என்று நான் பிரார்த்தித்தபடியே அழகிய திருவடிகளாலே என் தலையை அலங்கரித் தருளினான். **தாமரைக்கண்ணென்னம்மான்**—இங்கு எழுவாய்போலேயிருந்தாலும், என்முன்னே நின்று தாமரைக் கண்களாலே குளிர நோக்கினானென்னுங்

கருத்துப்பட நின்றது. **என்னெஞ்சத்து நிலைபேரான்**—நெஞ்சைவிட்டுப் பேராதே நின்று மிற்று இதெல்லாம் செய்தாகிறது.—தலைமேலே நிற்கிறானென்பதும், முன்னே நின்று திருக் கண்களால் நோக்குகிறானென்பதும், நெஞ்சினுள்ளே பேராமல் நிற்கிறானென்பதும் பொருந்துமோ? ஏக காலத்திலேயா இவையெல்லாம் செய்கிறான்? என்று சங்கிப்பார்க்கு நம்பிள்ளை யருளிச்செய்வது காண்மின்;—"ஸௌபரி ஐம்பது வடிவு கொண்டாப்போலே எம்பெருமான் ஆழ்வாரையநுபவிக்க அநேக விக்ரஹம் கொள்ளாநின்றான்."— என்று.

உபநிஷத்தில் பர்யங்க வித்யையிற் சொல்லுகிறபடியே முக்தாத்மா திருவனந்தாழ்வான்மேலே அடியிட்டு ஏறப்பெறுவதொரு பேறு உண்டு, அதை நினைத்தருளிச் செய்கிறார்—"மலைமாடத் **தரவணைமேல்** வாட்டாற்றான்" என்று. மலைகளைப் புடைபடத் துளைத்து நெருங்க வைத்தாற்போலே யிருக்கிற மாடங்களையுடைத்தான திருவாட்டாற்றிலே திருவனந்தாழ்வான்மேலே திருக்கண் வளர்ந்தருள்பவன்.

அநுபவ விரோதிகள் பலவுண்டே, அவை என்னாயிற்றென்ன; குவலயாபீடமதயானை பட்டது பட்டதாக வருளிச்செய்கிறார் ஈற்றடியில். மதம்மிக்க கொலையானை மருப்பொசித்ததைக் கூறும் முகத்தால் தம்முடைய விரோதிகளாகிற மதயானையை முடித்தமை கூறினாராயிற்று. ... ... ... ... ... (6)

**குரைகழல்கள்குறுகினம் நம்கோவிந்தன்குடிகொண்டான்***
**திரைகுழுவுகடல்புடைசூழ் தென்னாட்டுத்திலதமன்ன***
**வரைகுழுவுமணிமாட வாட்டாற்றான்மலரடிமேல்***
**விரைகுழுவுநறுந்துளவம் மெய்ந்நின்றுகமழுமே.** (7)

| | | | |
|---|---|---|---|
| கோவிந்தன் | கண்ணபிரான் | வாட்டாற்றான் | திருவாட்டாற்றி லெழுந்தருளியிருக்கு மெம்பெருமானுடைய |
| நம் குடி கொண்டான் | நம்மையே தனக்குக் குடியிருப்பாகக் கொண்டான். (அப்படி குடி கொண்டதனால்) | மலர் அடி மேல் | திருவடித்தாமரைகளின் மீது சாத்தின |
| திரை குழுவு கடல் புடை சூழ் | அலைத்திரட்சியையுடைய கடலாலே புடை சூழப்பட்டு | விரை குழுவு நறு துளபம் | பரிமளம் திரண்டு கமழ்கிற திருத்துழாயானது |
| தென் நாடு திலதம் அன்ன | தென்னாட்டுக்குத் திலகம் போன்றிருப்பதாய் | மெய் நின்று கமழும் | என்னுடம்பிலே நிலைநின்று வாஸிக்கின்றது. |
| வரை குழுவு மணி மாடம் | மலைகள் திரளவிருந்தாற் போன்றுள்ள மாடங்களையுடைத்தான | | |

***—கீழ் எட்டாம் பத்தில் குட்டநாட்டுத் திருப்புலியூரெம்பெருமானுடைய திருவருள் தமக்குப் பலித்தபடியைத் தோழிபேச்சாலே வெளியிடுமளவில் * அன்றி மற்றோருபாயமென்? இவளந்தண்டுழாய் கமழ்தல் * என்று திருத்துழாய்ப் பரிமளம் திருமேனியிலே கமழ்வதையிட்டு நிரூபித்தாராழ்வார்; இப்போது திருவாட்டாற்றெம்பெருமானுடைய திருவருள் பலித்தபடியையும் அந்த நிரூபகத்தையிட்டே தம்வாயாலே பேசுகிறார். "குரைகழல்கள் குறுகினமே" யென்றார் கீழ்ப்பாட்டில்; அது மெய்யேயென்கைக்காக மீண்டுமிப்பாட்டில் குரைகழல்கள் குறுகினமென்கிறார்; அதை ஸ்மர்த்திக்கிறார் **வாட்டாற்றான் மலரடிமேல் விரை குழுவு நறுந்துளவம் மெய்ந்நின்று கமழுமே** யென்பதனால்.

"கோவிந்தன் நம் குடிகொண்டான்" என்றும் "நம் கோவிந்தன் குடிகொண்டான்" என்றும் அந்வயிக்கலாம். பசுக்களோடுங் கலந்து பரிமாறிக் கோவிந்தனென்று

பெயர்படைத்த பெருமான் * அரவத்தமளியினேடு மழகிய பாற்கடலோடும்அரவிந்தப்பாவை யுந்தானு மகம்படி வந்து புகுந்து * என்றாப்போலே பரிஜநபரிவார ஸமேதனுய் வந்து, திருவாய்ப்பாடியில் பஞ்ச லக்ஷங்குடியோடுங்கூட வந்து என்னெஞ்சிலே குடிகொண்டபடி பாரீரென்கிருர். அதற்கு அடையாளங்கூறுவது மேலெல்லாம். [திரை குழுவு கடல்புடை சூழ் இத்யாதி] திரைமிக்கிருந்துள்ள கடலாலே சுற்றுஞ் சூழப்பட்டிருப்பதாய் தென்னாட்டுக்குத் திலகம்போலேயாய், மலைகளை நெருங்க வைத்தாற்போலே மணிமயமான மாடங்கள் நெருங்கியிருப்பதான திருவாட்டாற்றை யிருப்பிடமாகவுடைய ஸர்வேச்வரனது திருவடித் தாமரைகளின்மீது சாத்தியிருந்தபரிமளப்ரசுரமான திருத்துழாயானது என்னுடம்பிலே நிலை நின்று நாறுகின்றது. என் வார்த்தையிலே ஸந்தேஹமுண்டாகில் என்னுடம்பை மோந்து பார்க்க மாட்டீர்களோ? என்கிருர் போலும். ... ... (7)

மெய்ந்நின்றுகமழ்துளவ விரையேறுதிருமுடியன்*
கைந்நின்றசக்கரத்தன் கருதுமிடம்பொருதுபுனல்*
மைந்நின்றவரைபோலும் திருவுருவ வாட்டாற்ருற்கு*
எந்நன்றிசெய்தேனு என்னெஞ்சில்திகழ்வதுவே? (8)

| | |
|---|---|
| மெய் நின்று கமழ் | திருமேனியிலே நிலை நின்று கமழா நின்ற |
| துளபம் | திருத்துழாயினுடைய |
| விரை ஏறு திரு முடியன் | பரிமளம் மிகப்பெற்ற திருமுடியையுடையனுய், |
| கருதும் இடம் பொருது | திருவுள்ளம் நினைத்தவிடத்தே சென்று போரை நடத்தி |
| கை நின்ற | உடனே திருக்கையிலே வந்து சேருகிற |
| சக்கரத்தன் | திருவாழிப்படையை யுடையனுய் |

| | |
|---|---|
| புனல் மை நின்ற வரை போலும் திரு உருவன் | புனலையும் அஞ்சனத்தையும் நின்ற மலையையு மொத்திருக்கின்ற திருவுருவத்தை யுடையனுன |
| வாட்டாற்ருற்கு | திருவாட்டாற்றெம்பெருமானுக்கு |
| எந்நன்றி செய்தேன் ஆ | நான் என்ன நன்மை செய்தேனுகக்கொண்டு |
| என் நெஞ்சில் திகழ்வது | அவன் எனது நெஞ்சில் விளங்குவது? |

***—தாம்பெற்ற பேற்றின் கனத்தையாராய்ந்தார்; அந்தோ! இப்படிப்பட்ட விஷயீகாரம் என் திறத்தேயுண்டாகுமாறு நான் என்ன ஸுக்ருதம் செய்தேன்! ஒன்றும் செய்திலேன்! அப்படியிருக்கவும் இது என்ன விலக்ஷண விஷயீகாரம்! என்று நெஞ்சு குழைகிருர். **மெய்ந்நின்றுகமழ் துளபவிரையேறு திருமுடியன்**—இங்கு மெய் என்று ஆழ்வாருடைய திருமேனியைச் சொல்லிற்ருகவுமாம், எம்பெருமானுடைய திருமேனியைச் சொல்லிற்ருகவுமாம். என்னுடையவுடம்பிலே வியாபித்துக் கமழும்படியான திருத்துழாய் மாலையைத் தன் திருமுடியிலே யுடையவன் என்ருவது, தன்னுடைய திருமேனியிலே நின்று கமழா நின்றுள்ள திருத்துழாயில் பரிமளமானது கொழித்து எறடா நின்றுள்ள திருமுடியையுடையவன் என்ருவது பொருள் கொள்ளலாம். இங்கு ஈட்டு ஸ்ரீ ஸூக்தி—"கடலில் நீர் ஸஹ்யத்திலேறக்கொழித்தாற்போலே காணும் திருமேனியில் திருத்துழாயின் பரிமளமானது மெய்யெல்லாங்கொண்டு தலைக்குமேலே போனபடி".

**கருதுமிடம் பொருது கைந்நின்ற சக்கரத்தன்**—எம்பெருமானுக்கு ஆச்ரித விரோதி நிரஸநம் செய்யவேண்டி வருமே; அதற்காக அங்கங்கே தான் புறப்பட்டெழுந்தருளவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை; இன்னவிடத்திலே இன்னகாரியமாகவேணுமென்று திருவுள்ளத்தில் நினைப்பிட்ட மாத்திரத்திலே திருவாழி யாழ்வான்சென்று ஒரு நொடிப் பொழுதில் காரியந் தலைக்கட்டி அடுத்த க்ஷணத்திலே மீண்டுவந்து திருக்கையிலே நிற்பனும். ஆழ்வான் அதிமாநுஷ ஸ்தவத்தில் "அக்ஷேஷு ஸக்தமதிநா ச நிராதரேண வாராணஸீ ஹரபுரீ பவதா விதக்தா" என்றருளிச் செய்த ச்லோகம் இங்கு நினைக்கத்தக்கது.

**புனல் மைந்நின்றவரை போலுந் திருவுருவன்**—*புனல் போலவும் மைபோலவும் நின்ற வரை போலவு மிருக்கின்ற வடிவையுடையவன். ஆக மூன்றடிகளாலும் தெரிவிக்கப்பட்டதாவ தென்னென்னில்; தன்னுடைய திருத்துழாய் நறுமணம் என்னளவிலே வீசும்படி செய்தும் கையுந் திருவாழியுமான அழகைக்காட்டியும், பச்சைமாமலைபோல் மேனியை முற்றூட்டாக வநுபவிக்கக் கொடுத்தும் இப்படியன்றோ என்னிடத்தில் விலக்ஷணமான விஷயீகாரம் காட்டினதென்றதாயிற்று. இதற்குத் தம்பக்கலிலே ஒரு கைம்முதலில்லாமையை ஈற்றடியினால் பேசுகிறார்* **எந்நன்றி செய்தேனோ என்னெஞ்சில் திகழ்வதுவே**யென்று. "செய்தநன்றி தேடிக் காணாதே கெடுத்தாய் தந்தாயென்ற அத்வேஷாபிமுக்க்யங்களும் ஸத்கர்மத்தாலல்ல." (108) *என்ற ஆசார்ய ஹ்ருதய சூர்ணை இங்கு அநுஸந்தேயம்.* [**எந்நன்றி செய்தேனோ**] *நன்மையென்று பேரிடலாவதொரு தீமைதான் நான் செய்தேனோ? அதுவுமில்லையே; என்னுடைய எந்த காரியத்தை அவன் நன்மையாகத் திருவுள்ளம் பற்றினானோ தெரியவில்லையே யென்று தடுமாறுகின்றார். இங்கே ஈடு;—"பெரிய வுடையாரைப்போலே தலையோடே முடிந்தேனோ? திருவடியைப்போலே *த்ருஷ்டா ஸீதா* என்று வந்தேனோ? அன்றியே தன்னுடைய ஆஜ்ஞாநுவர்த்தனம் பண்ணினேனும்படி விஹிதகர்மங்களை யநுஷ்டித்தேனோ? என்ன நன்மைசெய்தேனாக என்னெஞ்சிலே புகுந்து பெறும்பேறு பெற்றாப்போலே விளங்கா நின்றான்!"* (8)

திகழ்கின்றதிருமார்பில் திருமங்கைதன்னோடும்*
திகழ்கின்றதிருமாலார் சேர்விடம்தண் வாட்டாறு*
புகழ்நின்றபுள்ளூர்தி போரரக்கர்குலம் கெடுத்தான்*
இகழ்வின்றியென்னெஞ்சத்து எப்பொழுதும்பிரியானே. (9)

| | | | |
|---|---|---|---|
| திகழ்கின்ற திரு மார்வில் | விளங்குகின்ற திருமார்பிலே | புள் ஊர்தி | பெரிய திருவடியை வாஹனமாகக் கொண்டு |
| திரு மங்கை தன்னோடும் | பெரிய பிராட்டியாரோடுங் கூட | போர் அரக்கர் குலம் கெடுத்தான் | போரிலே முயன்ற ராக்ஷஸர்களின் கூட்டங்களைத் தொலைத்த அப்பெருமான் |
| திகழ்கின்ற திரு மாலார் | விளங்குகின்ற லக்ஷ்மீ நாதன் | என் நெஞ்சத்து | எனது நெஞ்சிலே |
| சேர்வு இடம் | நித்ய வாஸம் பண்ணுமிடம் | இகழ்வு இன்றி எப்பொழுதும் பிரியான் | வெறுப்பின்றியே ஒரு போதும் பிரியாதேயுள்ளன். |
| தண் வாட்டாறு | குளிர்ந்த திருவாட்டாற்றுப் பதியாம்; | | |
| நின்ற புகழ் | நிலை நின்ற புகழையுடைய | | |

***—*இகழுகைக்கு வேண்டுவன வுண்டான வென்னிடத்தில் சிறிது மிகழ்வின்றியே எப்பொழுதும் பிரியாதே யிராநின்றானே! இது என்ன வியாமோஹமென்று தம்மிலே தாம் வியக்கிறார். தனக்கு திவ்ய மஹிஷியோ ஸர்வலோகேச்வரியான பெரிய பிராட்டியார்; தான் உறையுமிடமோ திருநாட்டிற் காட்டிலும் வீறுபெற்ற திருவாட்டாறு; தனக்கு திவ்யவாஹனமும் அடியாருடைய விரோதிகளைத் தொலைக்கும் பரிகரமும் பெரிய திருவடி; இப்படிப்பட்ட பெருமைகளைப் பெற்றுவைத்து, என்னுடைய தாழ்வுகளைப்பார்த்து என்னையிகழாதே ஒரு நொடிப்பொழுது என்னைப்பிரிந்தால் தரிக்கமாட்டாதானாய்க்கொண்டு என்னெஞ்சினுள்ளே புகுந்திருந்தருளினான்! இது என்ன வியாமோஹம்! என்கிறார்.*

**திகழ்கின்ற திருமார்வில்**—*திருமார்புக்கு ஓர் ஆபரணமிட்டு அதனால் விளக்கம் பெறுவிக்கவேணுமோ? வெறும் புறத்திலேயே ஆலத்திவழிக்க வேண்டும்படியன்றோ விளங்கா நிற்*

பது; அதற்குமேலே பெரிய பிராட்டியாரும் சேர்ந்ததனுலுண்டான வழகு பேச்சுக்கு நிலமாமோ? உலகில் பலரையும் ஸ்ரீமான்களென்று சொல்லுவதுண்டு; அது உபசாரவழக்கேயன்றி வேறில்லை; திருமங்கை தன்னோடும் திகழ்கையாலே உள்ளபடி ஸ்ரீமானுயிருப்பவன் எம்பெருமானொருவனே. அப்படிப்பட்டவன் திருவாட்டாற்றில் வாஸம் பெற்றது பெருமைக்குமேல் பெருமையாயிற்று. *வேதாத்மா விஹகேச்வர:*என்னப்பட்ட பெரிய திருவடியை வாஹனமாகக் கொள்ளப் பெற்றது இன்னமும் பெருமையாயிற்று இப்படி பெருமைக்கெல்லாம் எல்லையான பெருமை பெற்றவன் **இகழ்வின்றி யென்னெஞ்சத்து எப்பொழுதும் பிரியானே**—*மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்த நித்ய ஸம்ஸாரி யிவனென்று தண்மைபாராதே ஒரு க்ஷணமும் விட்டுப் பிரியாதே யிருக்கிற இவ்விருப்புக்கு அடியான வியாமோஹமென்கொல்! என்கிறார். ... ... ... (9)

பிரியாதாட்செய்யென்று பிறப்பறுத்து ஆளறக்கொண்டான்*
அரியாகியிரணியனை ஆகங்கீண்டானன்று*
பெரியார்க்காட்பட்டக்கால் பெருதபயன்பெறுமாறு*
வரிவாள்வாயரவணைமேல் வாட்டாற்றான்காட்டினனே. (10)

| | |
|---|---|
| பிரியாது ஆள் செய் என்று | ஒரு க்ஷணமும் பிரியாதிருந்து அடிமை செய்யக் கடவாயென்று அநுக்ரஹித்து |
| பிறப்பு அறுத்து அற ஆள் கொண்டான் | ஸம்ஸாரப் பற்றைப் போக்கி மிகவும் அடிமை கொண்டவனாய் |
| அன்று அரி ஆகி இரணியனை | முன்பொரு காலத்தில் நரசிங்க மூர்த்தியாகி இரணியாசுரனுடைய |
| ஆகம் கீண்டான் | உடலைப் பிளந்தவனாய் (அந்த சிரமம் தீர) |
| வாட்டாறு | திருவாட்டாற்றிலே |
| வரி வாள் வாய் அரவு அணை மேலான் | சேஷசாயீ யாயிருக்குமெம் பெருமான், |
| பெரியார்க்கு ஆள்பட்டக்கால் பெருத பயன் பெறும் ஆறு காட்டினன் | பெரியவர்களுக்கு அடிமைப் பட்டால் பெறுதற் கரிய பயனையும் பெறலாகுமென்பதைக் காட்டிவிட்டான். |

*** "பெரியார்க்கு ஆட்பட்டக்கால் பெறுதபயன் பெறலாகும்" என்கிற பழமொழியுண்டாம்; அதனைத் திருவாட்டாற்றெம்பெருமான் அனுஷ்டாந பர்யவஸாயி யாக்கினனென்று ஆனந்தம் பொங்கி யருளிச் செய்கிறார். இப்போது தாம் பெற்ற பெறுதபயன் எது வென்னில்; இனியொரு நாளும் பிரியாதேயிருந்து அடிமை செய்யுமாறு சோதிவாய் திறந்து அருளிச்செய்த தொன்று; இனிமேல் பிறப்பு நேராதபடி வேரோடறுத்த தொன்று; அடிமை செய்யென்று சொல்லி விட்டவளவேயன்றிக்கே கைங்கரியங் கொண்ட தொன்று—ஆகிய இவை பெற்ற பேறுகள். இவை எம்பெருமானுடைய நிர்ஹேதுகக்ருபையாலன்றி மற்றொன்றால் பெறமுடியாதவை யாதலால் **பெருதபய** னென்றது.

இரண்டாமடிக்கு அவதாரிகை யிடுகிறார் நம்பிள்ளை—"இதுக்கு முன்பே தமக்குப் பண்ணிற்றொருபகாரத்தைச் சொல்லுகிறார்" என்று. அரியாகி யிரணியனை ஆகங் கீண்டதும் தமக்குப் பண்ணின உபகார மென்றிருக்கிறாராம் ஆழ்வார். தாம் அநுபவிக்கைக்காகவே அவதாரங்கள் அமைந்தன வென்று கருத்து. இரண்டாமடியின் முடிவில் **அன்று** என்றிருப்பதனால், அன்று அவ்வுபகாரம் செய்தான். இன்று இவ்வுபகாரம் செய்தானென்று சொல்லுவதாகத் தேறுகின்ற தன்றே; அன்று மின்றும் தமக்கே செய்ததாகத் தேறினாராயிற்று.

பெரியார்க்காட்பட்டக்கால் பெருதபயன் பெறலாமென்று எங்கே சொல்லியிருக்கிற தென்னில்; ஸ்ரீ விஷ்ணுதர்மத்தில் க்ஷத்ரபந்துவின் உபாக்யானத்தில்-*மஹாத்மநாம் ஸம்ச

ரயமப்யுபேதோ நைவாவஸீதத்யதிதுர்க்கதோபி* என்றுள்ளது. அதிதுர்க்கதோபி-மிகவும் வறியவனு யிருந்தாலும், மஹாத்மநாம் ஸம்ச்ரயம் அப்யுபேத:-பெரியார்க்கு ஆட்பட்டானுகில், நைவ-அவஸீததி-மேன்மையை யடைவனே யல்லது கீழ்மையை யடையமாட்டானென்றபடி. இப்பாசுரத்தைத் திருவுள்ளத்திற் கொண்டு தேசிகன் பாதுகா ஸஹஸ்ரத்தில் பணித்ததொரு ச்லோகமும் நினைவுக்கு வருகின்றது—*அதரீக்ருதோபி மஹதா தமேவ ஸேவேத ஸாதரம் பூஷ்ணு:, அலபத ஸமயே ராஜ்யம் பாதாக்ராந்தாபி பாதுகா சௌரே:* என்று. "மஹா புருஷ ஸமாச்ரயணம் பண்ணினால் பின்னை அவர்கள், கொள்ளுகிறவன் சிறுமைபார்த்தல் கொடுக்கிற பொருளின் பெருமைபார்த்தல் செய்யாதே கொடுப்பர்களென்று இங்ஙனே நாட்டிலே யொன்றுண்டு; அத்தை என்பக்கலிலே காட்டினான்; ப்ரஹ்லாதாதிகளைக் கொண்டு திருவாய் மொழிபாடுவித்துக் கொண்டானே?" என்பது ஈடு. (10)

காட்டித்தன்கனைகழல்கள் கடுநரகம்புகலொழித்த*
வாட்டாற்றெம்பெருமானை வளங்குருகூர்ச்சடகோபன்*
பாட்டாயதமிழ்மாலை ஆயிரத்துளிப்பத்தும்
கேட்டு* ஆரார்வானவர்கள் செவிக்கினியசெஞ்சொல்லே. (11)

| | | | |
|---|---|---|---|
| தன் கனைகழல்கள் காட்டி | தன் திருவடிகளைக் காட்டியருளி | பாட்டு ஆய தமிழ் மாலை ஆயிரத்துள் | பாட்டாயிருக்கிற தமிழ்த் தொடையான ஆயிரத்துள் |
| கடு நரகம் புகல் ஒழித்த | கடுமையான ஸம்ஸார நரக ப்ரவேசத்தை யொழித்த | செவிக்கு இனிய செம் சொல் இப்பத்தும் | கர்ணாம்ருதமான செவ்விய சொற்களினுலாகிய இப்பதிகத்தை |
| வாட்டாறு எம் பெருமானை | திருவாட்டாற் றெம்பெருமானைக் குறித்து | வானவர்கள் கேட்டு ஆரார் | நித்ய ஸூரிகள் முக்தர்கள் வாயிலாகக் கேட்டு த்ருப்தி பெறமாட்டார்கள். |
| வளம் குருகூர் சடகோபன் | ஆழ்வார் (அருளிச்செய்த) | | |

***—இத்திருவாய் மொழி கற்றார்க்குப் பயனுரைக்குமதான இப்பாட்டில் "ஆயிரத்துளிப்பத்தும் கேட்டு ஆரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே" என்கிறார்; இது பயனுரைத்ததாக எங்ஙனே யாகுமென்று சிலர் சங்கிப்பர்கள்; கேண்மின்; நித்ய ஸூரிகள் இப்பாசுரங்களைக் கேட்பது எவ்விதமாக? என்று பார்க்கவேணும். இங்கிருந்து போரும் முக்தர்கள் சொல்ல, அவர்களது வாய்வழியே கேட்கவேணும். ஆகவே இப்பதிகம் வல்லார் நித்ய ஸூரிகளைக் கேட்பிக்க வல்லவராவர் என்று பயனுரைத்ததாகவே ஆயிற்று.

**தன் கனை கழல்கள் காட்டி**—திருவடியைச் சொன்னது திருமேனிக்கும் உபலக்ஷணமாகும். தன் ஸ்வரூபரூப குணவிபூதிகளை ப்ரகாசிப்பிக்கிற திவ்யமங்கள விக்ரஹத்தைக் காட்டி யென்றபடி. **கடுநரகம் புகலொழித்த**—*பொய்ந் நின்ற ஞானமும்...இந்நின்ற நீர்மையினியா முறாமை*என்று முதலில் அபேக்ஷித்தபடியே செய்து தலைக் கட்டினபடி. ஆழ்வார் இந்த க்ஷேம ஸமாசாரத்தைத் திருவாட்டாற் றெம்பெருமான் முகமாகப் பெற்றதனால் "கடுநரகம் புகலொழித்த வாட்டாற் றெம்பெருமானை" என்கிறார். **செவிக்கினிய செஞ்சொல் இப்பத்துங்கேட்டு வானவர்கள் ஆரார்**—தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலையைப் பாடிவிட்டு முடிவில் "இளைய புன் கவிதை" என்றார்; இவர் அங்ஙனே பேசாமல் 'செவிக்கினிய செஞ்சொல்' என்கிறார், தம்மையும் உளுக்கினபடி. "என்னாவிலின் கவி" என்றாரே கீழும். நித்யஸூரிகள் இப்பதிகத்தை முக்தர் சொல்லக் கேளா நின்றால் 'இன்னம் சொல், இன்னம் சொல்' என்பர்களே யல்லது கேட்டவளவால் த்ருப்தி பெறார்களாம். இங்கிருந்து அங்குச் சென்றவர்களை [முக்தர்களை] நோக்கி நித்யஸூரிகள் 'நிலவுலகத்திலிருந்து வருகிறீர்களே; அங்கு ஏதாவது விசேஷமுண்டாகில்

சொல்லுங்கள்' என்று கேட்பர்களாப்; 'திருக்குருகூரிலே ஆழ்வாரென்றொருவர் அவதரித்துத் தொண்டர்க்கமுதுண்ணச் சொல்மாலைகள் சொன்னார்; அவற்றைக் கற்ற பெருமையாலே இங்குவந்தோம்; இதுவே விசேஷம்' என்பர்களாமிவர்கள். அப்படியாகில் அத்திருவாய்மொழி யாயிரத்திலே ஒருபதிகம் சொல்லிக் காணுங்கோள் என்பர்களாம் நித்யஸூரிகள். அப்போது *அருள்பெறுவாரடியாரென்னு மிப்பதிகத்திற்கு மேற்பட போக்யமான பதிகம் வேறொன்று தோன்றாமல் இப்பதிகந் தன்னை யெடுத்துப் பாடுவர்களாம் முக்தர்கள். அப் போது அவர்கள் படும்பாட்டைப் பார்க்கவேணும். ... (11)

திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையில் பத்தாம் பத்தில்

ஆறுந்திருவாய்மொழி முற்றிற்று.

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## ஏழாந்திருவாய்மொழி—செஞ்சொற்கவிகாள்.

**உரையவதாரிகை:**-கீழ்த்திருவாய்மொழியில் ஆழ்வாருடைய ஆனந்தம் அபரிமிதமாயிருந்தது. எம்பெருமான் ஆழ்வாருடைய திருவுள்ளத்தை விடாதே யிருந்தவன் திருமேனியையும் விடாதவனாயினன். பலாப்பழத்திலே ஈமொய்க்குமாபோலே திருமேனியில் அவயவங்கள்தோறும் மொய்ப்பவனாயினன். அபிமத விஷயத்தில் அழுக்கையுகக்கும் காமுகனைப் போலே ஞானிகளின் ஞானபரிமளம் விளங்கும் தேஹத்தை விடமாட்டானே யெம்பெருமான். மணத்தின் வாசியறிந்து குருவேரைச் சூடும் போகிகளானவர்கள் மண்ணையுதறினால் மணம் குன்றுமென்று மண்பற்றுக் கழற்றாதே அதனைச் சூடுமாபோலே பரமபோகியான ஸர்வேச்வரனும் ஞானிகளை விரும்பி யநுபவிக்கு மிடத்தில் ***ஆஹ்லாத சீத நேத்ராம்பு: புளகீக்ருத காத்ரவாந்*** என்கிறபடியே ஜ்ஞாந கார்யமான விக்ருதிகளுக்கெல்லாம் ஆச்ரயமாய்க்கொண்டு ஜ்ஞாந பரிமளமெல்லாம் தோற்றும்படி யிருக்கிற விக்ரஹத்திலே அளவுகடந்த ஆதரத்தைப்பண்ணி அநுபவிக்கத் தொடங்கினான். அவ்வளவன்றிக்கே அதிசாபலத்தாலே இத்திருமேனியோடே தம்மைத் திருநாட்டிலே கொண்டு போவதாகவும் அபிநிவேசங் கொண்டான்; அதனையறிந்த ஆழ்வார்—'இவன் நம்மைக் கொண்டு கவி பாடுவித்துக் கொள்வதற்காக நம்மை இங்குவைத்திருக்கிறானென்றிருந்தோம்; இவனுடைய முக்கியமான எண்ணம் அதுவன்று; நம்முடம்பை விரும்பி விடமாட்டாமையாலே நம்முடம்பில் நசையாலேயே இங்கு வைத்தான் போலும்; இவன் வெறு முடம்பனாயிருந்தான்' என்று கொண்டு எப்படியாவது இப்பாழும் நசையை இவனுக்கு விடுவிக்க வேணுமென்று பார்த்து தேஹத்திலுள்ள தோஷங்களை யறிவித்து 'பிரானே! பரமரஸிகனான நீ இவ்வழுக் குடம்பையோ விரும்புகிறது? வெகு நன்றாயிருந்தது! என்ன; வத்ஸலனாய் தோஷ போக்யனானவன் காமிநியின் அழுக்குகக்கும் காமுகன் படியிலே மேல்விழத் தொடங்கினான்.

அதனை விடுவிக்கு முபாயத்தை ஆழ்ந்து விமர்சிக்கப்புகுந்த ஆழ்வார்க்கு தைவாதீநமாய் ஒருபாயம் தோன்றிற்று. இவன் நிரங்குச ஸ்வதந்திரனாயிருக்கச் செய்தேயும் நம்மிடை

தியே பாரதந்திரியங் கொண்டாடி நாம் விதித்தபடியே செய்வதாக நம்முடைய நியமனத்தை யெதிர் பார்த்திருக்கின்றமை யுண்டே; விதிக்குக் கட்டுப்படுமவன் நிஷேதத்திற்கும் கட்டுப்பட வேண்டியவனே யன்றோ; உலகில் ஒருவன் சாஸ்த்ரத்துக்குக் கட்டுப்படுகையாவது விதி நிஷேதங்களிரண்டுக்கும் கட்டுப்படுகையே யன்றோ. ஆகவே இவனிப்போது நம் சொல்லுக்கு உடன் படுகைக்கு இந்த வழியிலே சென்று பேசுவோமென்று துணிந்து 'பிரானே! என் பக்கலில் பாரதந்திரியங்கொண்டாடி எனது நியமனத்தை யெதிர் பார்த்திருப்பதாகச் சொல்லி நின்ற நீ இவ்விஷயத்தில் என் சொல்லுக்கு முரணாக நடப்பது தகுதியோ?' என்று கேட்க, இதற்குமேல் எம்பெருமானுக்கு மறுமாற்ற மில்லாமையாலே 'ஆழ்வீர்! நான் உம்முடைய சொல்லுக்குக் கட்டுப்பட வேண்டியவனாயினேன். நல் விரகாலே என்னுடைய ஆவலைத் தவிர்த்தீரே' என்று சொல்லிக் கொண்டாடி நிற்க, அதைக் கண்ட ஆழ்வார் 'ஸர்வ நியந்தாவாய் ஸர்வாதிகனான ஸர்வேச்வரன் தான் மிகுந்த ஆவலோடு செய்ய நினைத்த செயலையும் நம்முடைய வொரு சொல்லுக்குக் கட்டுப்பட்டு நிறுத்திக்கொண்டானே, இது என்ன சீலம்! இது என்ன பாரதந்திரியம்!' என்று ஈடுபட்டு நெடும்போது உணர்த்தியற்றிருந்து பிறகு தெளிந்து, இம்மஹா குணத்தில் பிறரும் அமிழ்ந்து போகாமைக்காக 'செஞ்சொற் கவிகாள்!' என்று தம்மோடொத்த சில அநுபவ ரஸிகர்களை விளித்து அவர்களுக்கு அருமையான உபதேசமொன்று செய்யத் தொடங்குகிறார். பெருவெள்ளத்திலே யிறங்கிப் பெரும்பள்ளத்திலாழ்ங்காற்பட்டுச்; சிரமத்துடன் மீண்டவர்கள் நிலையறியாதார்க்கு ஆழங்காலை யுணர்த்த ப்ராப்தமே யன்றோ; அப்படியேயாயிற்று இதுவும். ஆக, அவனுடைய சீல குணத்திலே கண் வையாதே கொள்ளுங்கோளென்று செஞ்சொற் கவிகளுக்குக் கள்ளவழி காவலிடுகிறாராயிற்று.

இப்படி ஆழ்வாருடைய திருமேனியிலே வியாமோஹங் காட்டின எம்பெருமான் திருமாலிருஞ்சோலைப் பெருமாளென்னு மிடம் இப்பதிகத்தில் விசதமாகும். ஆசார்ய ஹ்ருதயத்தில் (183) "த்யாஜ்ய தேஹ வ்யாமோஹம் மருள்கள் கடியும் மயல்மிகு பொழிலிலே தழைக்கும்" என்ற சூர்ணையும் அதன் வியாக்கியானமும் இங்கே அநுஸந்திக்கத் தகும்.

செஞ்சொற்கவிகாளுயிர்காத்தாட்செய்மின் திருமாலிருஞ்சோலை*
வஞ்சக்கள்வன்மாமாயன் மாயக்கவியாய்வந்து*என்
நெஞ்சுமுயிருமுள்கலந்து நின்றாரறியாவண்ணம்*
நெஞ்சுமுயிருமவையுண்டு தானேயாகிநிறைந்தானே. (1)

| | |
|---|---|
| செம் சொல் கவிகாள் | செவ்விய சொற்களையுடைய கவிகளே! |
| உயிர் காத்து ஆள் செய்மின் | உங்களை ஜாக்ரதையுடன் நோக்கிக்கொண்டு கவிபாடுங்கள்; (ஏனிப்படி சொல்லுகிறேனென்னில்;) |
| திருமாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலை மலையில் வாழ்கின்ற |
| வஞ்சம் கள்வன் மா மாயன் | வஞ்சனையும் களவும் மாயமுமே வடிவெடுத்த பெருமான் |
| மாயம் கவி ஆய் வந்து | "ஆழ்வாரே! உம்மைக்கொண்டு கவிபாடுவித்துக் கொள்ளப் பாரா நின்றேன்" என்றொரு மாயம் செய்து வந்து |
| என்னெஞ்சுன்னும் உயிருள்ளும் கலந்து | என்னெஞ்சுக்குள்ளேயும் ஆத்மாவுக்குள்ளேயும் ஒருநீராகக்கலந்து |
| நின்றார் அறியா வண்ணம் | அருகே நின்ற பிராட்டியார் முதலானாரு மறியாதபடி |
| அவை என் நெஞ்சும் உயிரும் உண்டு | அந்த என்னெஞ்சையு முயிரையும் புஜித்து |
| தானே ஆகி | (என்னைக் காண இடமின்றிக்கே) தானேயாகி |
| நிறைந்தான் | அவாப்த ஸமஸ்த காமனானான். (ஆதலால் செஞ்சொற்கவிகாளுயிர் காத்தாட் செய்மின் என்ன வேண்டிற்று.) |

***- -எம்பெருமானுடைய எந்த சில குணத்தில் தாம்ஆழங்காற்பட்டுக் களைத்தாரோ, அக்குணத்தில் பிறரும் ஆழ்ந்து வருந்தாமைக்காக எச்சரிக்கை செய்கிறார் முதலடியால்; கவிகள், சொற்கவிகள், செஞ்சொற்கவிகள் என்று மூவகைப்படுவர்கள் கவிகள். "சிறப்புடன் பூனை இறப்பிலிருந்தால், புறப்படமாட்டாதெலி" என்னுமாபோலே கவிபாடுமவர்கள் கவிகள். சொற்கள் மிடைந்து 'என்னைக்கொள் என்னைக்கொள்' என்ன, அர்த்த புஷ்டியுடன் கவிபாடுமவர்கள் சொற்கவிகள். ப்ரயோஜனத்தைக் கணிசியாமல் பகவத் விஷயத்திலே கவிபாடுமவர்கள் செஞ்சொற்கவிகள். "இன்கவி பாடும் பரமகவிகள்" "செந்தமிழ் பாடுவார்" "பதியே பரவித்தொழுந் தொண்டர்" "ஆடிப்பாடியரங்கவோ வென்றழைக்குந் தொண்டர்" என்றிப்படி கொண்டாடப்பட்ட முதலாழ்வார்கள் போல்வாரையே **செஞ்சொற்கவிகாள்!** என்று விளிக்கிறார்.

**உயிர்காத்து ஆட்செய்மின்**—நீங்கள் கவிபாட வேணுமானால் முன்னம் நீங்கள் இருந்தாகவேணுமே; இத்தலையுண்டானாலன்றோ அத்தலைக்கு மங்களா சாஸனம் பண்ண முடியும். ஆகவே முன்னம் உங்களை நோக்கிக்கொண்டு கவிபாடப் பாருங்கோள் என்கிறார். செஞ்சொற்கவிகாள்! என்ற விளிக்குச்சேர "உயிர்காத்துக் கவிபாடுமின்" என்ன வேண்டியிருக்க, **ஆட்செய்மின்** என்கிறது— கவிபாடுகையும் வாசிகமான ஆட்செய்கையாகையாலே "ஆட்கொள்வானொத்து என்னுயிருண்ட மாயன்" என்று பண்டே சொல்லி வைத்திருக்கிறாராழ்வார். எம்பெருமான் வாசிக கைங்கரியமாகிற அடிமையைக் கொள்வான்போலப் புகுந்து பின்பு நீர்மைக்குணத்தினால் உயிரைக்கொள்ளை கொள்ளுமவனாதலால் அந்த நீர்மையில் உள் குழையாதே வலிய நெஞ்சராயிருங்கோளென்கிறாராயிற்று. சிற்றாள்கொண்டான் என்கிற ஸ்வாமி பணிப்பராம்—"ஆழங்காலிலேயிழிந்து அமிழ்ந்துவார் அவ்விடத்திலே கொண்டைக் கோல் நாட்டுமாபோலே ஆழ்வாரும் கொண்டைக்கோல் நாட்டுகிறார்" என்று. ஆழ்வார் இப்படியருளிச்செய்வதன் பரமதாற்பரியமென்ன வென்றால், எம்பெருமானுடைய மற்றைக் குணங்களெல்லாவற்றிலுங் காட்டில் சீல குணமொன்று மிகவும் ஆற்றவொண்ணாதது. இதற்குத் தப்பிப்பிழைப்பது அரிது—என்பதேயாம். அக்குணத்தின் சீர்மையையெடுத்துக் காட்டுகிற உக்திசாதுர்யம் "உயிர்காத்தாட்செய்மின்" என்பது. இன்னாருயிரைக் காத்து ஆட்செய்யும்படி வ்யக்தமாகச் சொல்லாமையாலே, எம்பெருமானுயிரைக் காத்து ஆட்செய்மின் என்பதாகவுங் கொள்ளலாமென்று உடையவர் அருளிச்செய்வராம். அதன் கருத்து யாதெனில், அவன் மேல்விழுவிழத் தாங்கள் இறாய்த்தால் அவனை யிழக்க நேருமே; அப்படியாகாமே அவனுயிரைக் காவுங்கோள் என்பதாம். இப்பொருளில் சுவையொன்று மில்லையேயென்று சிலர் மயங்குவர். கேண்மின்; என்னுடம்பில் அவன் சாபலம்காட்ட, அதை நான் தடுக்க, பின்னையும் அவன்மேல்விழ, பிரானே. உனக்குப் பாரதந்திரியம் ஜீவிக்கவேணுமேயென்று நான் விலங்கிட்டாற்போல் வார்த்தை சொல்ல; அதன்மேல் அவன் கைகூப்பி நிற்க, அந்தசீல குணத்திலே உருகும்படியான நிலைமை எனக்கு ஏற்பட்டது; நீங்களும் என்னைப்போல் அவனை விலக்கத் தொடங்கினீர்களாகில் அவனை யிழக்கவே நேரும்; பின்னை யாரைக்குறித்துக் கவிபாடுவது? ஆகவே அவனுயிரைக்காத்து ஆட்செய்மின்கள்; அவன் விரும்பிய போகத்தை நான்தான் குலைத்தொழிந்தேனாகிலும் நீங்களாவது குலைக்காதபடி அவன்வழியே யொழுகி அநுபவிக்கப்பாருங்கள்—என்பதான சுவைக் கருத்து உணர்க.

இவ்விஷயத்திலே தாமிழிந்து அனர்த்தப்பட்ட படியை யருளிச்செய்கிறார் மேல் **திருமாலிருஞ் சோலை வஞ்சக்கள்வ**னென்றுதொடங்கி. தான் சேஷியாகவும் நான் சேஷபூதனாகவுமிருக்கிற இம்முறையை நிலைநாட்டுவதற்காக வருவான்போல வந்து, தன்னுடைய

பூர்ணனுனன்; இருதலை ஒன்று சேர்ந்து பரிமாறப் புகுந்து ஒரு தலையை ஒன்றுமில்லையாக்கி ஒரு தலையைப் பூர்ணமாக்கிக் கொள்வது நியாயமோ?

எல்லாவுலகு முயிரும் தானேயாய்—அவன்தான் ஸர்வேச்வரனுனதும் என்னை முற்று முயிருண்டபிறகே. உண்மையில் எம்பெருமான் ஆழ்வார்திருவாக்கில் புகுந்து புறப்பட வில்லையாகில் அவன் ஸர்வேச்வரனென்று பேர்பெற முடியாதே. குதர்க்கிகளான தூர்வாதிகள் தாம் தாம் கொண்ட தெய்வங்களைப் பரதெய்வமாகப் பேசி நிறுத்த, ஸ்ரீமந்நாராயணன் நான் தெய்வமல்லேன்' என்று பிற்காலிட்டே கிடந்தான்; ஆழ்வார் திருவவதரித்து *திண்ணன் வீடு *ஒன்றுந் தேவு முதலான திருவாய்மொழிகளில் எம்பெருமானே பரதத்துவ மென்பதைக் கல்வெட்டாக ஸ்தாபித்தருளின படியாலே, இதற்குப்பிறகே எம்பெருமான் தன்னை ஸர்வேச் வரனுகச் சொல்விக்கொண்டு வெளிபெறியுலாவ முகம்பெற்றுன். ஆகவே "தானே யாகி நிறைந்து எல்லாவுலகு முயிருந்தானேயாய்" என்றது பொருந்தும்.

யானென்பான் தானேயாகி—நானென்று நாமமாத்திரமான நான் அவன்தானென்னலாம் படியானேன். அதாவது, பரதந்திரரான தம்மை அவன் ஸ்வதந்திரராக்கி, இவரிடத்திலே தான் பாரதந்திரியம் வஹிக்கலானுன் என்கை. இங்கே ஈடு;—"தம்மைத் தடவிப் பார்த்த விடத்தில் காண்கிறிலர்; அவன் தலையாலே சுமக்கக் காண்கிறவித்தனை." என்று.

தன்னைத்தானே துதித்து—எம்பெருமான் துதிக்குவிஷயபூதன் மாத்திரமல்லன்; ஸ்துதிக்குக் கர்த்தாவும் அவனேயாயிற்று. *குருகூர்ச்சடகோபன் சொல்* என்று நான் சொன்னதாகச் சொல்லிவைத்ததும் அவனேயாயிற்று. அவன் யாவனென்னில்; தன்னுடைய அநுபவம் எனக்குப் பரமபோக்யமாவதற்காக எனக்குத் தேனுகவும் பாலாகவும் கன்னலாகவும் அமுதமாகவும் நின்ற திருமாலிருஞ் சோலைக்கோன். இப்படி நான் ரஸித்துப் பருக வேண்டிய அமுதம் என்னை முற்றுமுண்டதே! ... ... ... (2)

என்னைமுற்றுமுயிருண்டு என்மாயவாக்கையிதனுள்புக்கு*
என்னைமுற்றுந்தானேயாய் நின்றமாயவம்மான்சேர்*
தென்னன்திருமாலிருஞ்சோலைத் திசைகைகூப்பிச்சேர்ந்தயான்*
இன்னம்போவேனேகொலோ? என்கொலம்மான்திருவருளே. (3)

| | | | |
|---|---|---|---|
| என் உயிரை முற்றும் உண்டு | என்னைப் பரிபூர்ணாநுபவம் பண்ணி (அங்ஙனமேவாடும் நில்லாதே) | தென்னன் திருமாலிருஞ்சோலை | தென்னரசன் கொண்டாடும் திருமாலிருஞ்சோலை மலை நிற்கிற |
| என் மாயம் ஆக்கை இதனுள் புக்கு | என்னுடைய ப்ராக்ருத சரீரத்தினுள்ளும் புகுந்து | திசை | திக்கை நோக்கி |
| என்னை முற்றும் தானே ஆய் நின்ற | என்னுடைய தேஹாதியரு பங்கிகளெல்லாம் தானே யென்னலாம்படி நின்ற | கைகூப்பி சேர்ந்த யான் | அஞ்ஜலிபண்ணி அடிமைப் பட்ட நான் |
| மாயம் அம்மான் சேர் | ஆச்சர்யமான பெருமான் பொருந்தி வாழ்கிற | இன்னம் போவேனே கொலோ | இனி இதுக்கவ்வருகு ஓரிடந் தேடிப் போக நினைப் பேனே? |
| | | அம்மான் திரு அருள் என் கொல் | எம்பெருமானுடைய பாரிப்பு என்னுயிருந்தது! |

***—எம்பெருமானுக்கு மென்மேலும் தம்பக்கலுண்டான அபிநிவேசம் எல்லையற்றிருக்கும்படியை யநுஸந்திச்செய்கிறுர். கீழ்ப்பாட்டில் "என்னை முற்று முயிருண்டே" என்று

டானவொரு வியாமோஹத்தைப் பேசுகிருர். இங்கு ஆருயிரப்படியருளிச்செயல் காண்மின்;—"இப்படி என்னேடு ஸம்ச்லேஷம் பெறுகைக் கீடான தேசம் ஏதோவென்று தேடிக் கொண்டு திருமலையிலே வந்து புகுந்து தான் கருதினபடியே அங்கே ஸம்ச்லேஷித்து ப்ரீதனாய் 'இந்த ஸம்ருத்தியெல்லாம் விளைவித்தது திருமலையிறே' என்று கொண்டு திருமலையையும் என்னுயிரு முடலும் போலே தனக்கு போக்யமாகக்கொண்டு கைவிடுகிறிலன்; என்னுயிரையும் உடலையும் திருமலையையும் அநுபவித்து ப்ரீதனானன், ப்ரதிகூலர் இந்த ஸம்ருத்திகண்டு பொறுக்கமாட்டாதே தரைப்படும்படி ப்ரீதனானனென்கிருர்." என்று.

**என்கொலம்மான் திருவருள்கள்!**—மிகப் பெரியார்களுக்கு ஏதேனும் அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞான முண்டானல் சிறியார்கள் அவர்களை நோக்கி 'தேவரீர் இப்படி ப்ரமிக்கலாமா?' என்று கேட்கலாகாது; இது என்ன க்ருபை!' என்று உபசார வழக்காகவே சொல்லவேணும்; அவ்விதமாகவே இங்கு 'என்கொலம்மான் திருவருள்கள்!' என்கிறது. இப்படியும் அஸ்தாநே ப்ரமிக்கலாமோ? என்பது இங்குக் கருத்தாகும். எம்பெருமான் அவாப்த ஸமஸ்தகாமனையிருந்துவைத்து ஒன்றும் பெருதாரைப்போலே இப்படி கிடந்து படுகிருனே! இது என்ன மருள்! என்று சொல்லவேண்டுமிடத்து* என்கொலம்மான் திருவருள்களென்கிருராயிற்று.

"ஸர்வேச்வரனுக்கு நிரதிஷ்டாநப்ரமமுண்டாமாகாதே" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. உலகில் ஒருவன் கயிற்றைப் பார்த்து ஸர்ப்பமென்று ப்ரமிக்கிருன்; முத்துச் சிப்பியைப் பார்த்து வெள்ளியென்று ப்ரமிக்கிருன்;ஏதோவொரு ஆலம்பனமிருந்து ப்ரமமுண்டாகிறதேயன்றி ஒரு ஆலம்பனமுமின்றிக்கே ப்ரமமுண்டாகிறதில்லை; நிர்விஷயகப்ரமம் எப்படியுண்டாகும்; ஸர்வேச்வரனுக்கு இதுவுமுண்டாகும் போலும் என்கிருராம் ஆழ்வார். "நன்கென்னுடலம் கைவிடான்" என்பதை நோக்கி இது அருளிச்செய்தபடி. செருக்கனுயிருக்கும் ராஜபுத்திரன் ஒரு நீச ஸ்த்ரீயின் காற்கடையிலே துவளுமாபோலே ஸர்வேச்வரனானவன் மிகவும் ஹேயமான என்னுடம்பிலே வியாமோஹம் பண்ணித் திரிகிருனே! இது என்ன ப்ரமம்! என்றவாறு.

**ஞாலத்தூடே நடந்துழக்கி**—பூமியெங்கும் உலாவித் திரிந்து என்பது சப்தார்த்தம். திரிவிக்கிரமனாகி உலகளக்கிறதென்னும் வியாஜத்தாலே எங்கும் வியாபித்து ஆழ்வாரையநுபவிக்கைக்கு ஏகாந்த ஸ்தலமேதோவென்று ஆராய்ந்து தெற்குத் திருமலை வாய்ப்பான இடமாகக் கண்டபடியாலே அங்கே நின்றருளினனயிற்று. [**நங்கள் குன்றம் கைவிடான்— நன்கென்னுடலம் கைவிடான்**] "அங்குத்தை வாஸம் ஸாதனம், இங்குத்தை வாஸம் ஸாத்யம்" என்று ஸ்ரீவசநபூஷணத்திற் பணித்தபடியே திருமலையில் வாஸத்தை உபாயமாகக்கொண்டும் ஆழ்வார் திருமேனியிலுறைகையை உபேயமாகக்கொண்டுமிராநின்ருன். [**நண்ணவசுரர் நலியவே**] இப்படியிருக்கிற விருப்பிலே விரோதிவர்க்கம் தன்னடையே தொலைந்ததாயிற்று. இதன் கருத்து யாதெனில், எம்பெருமானுக்கு திவ்யமங்கள விக்ரஹமில்லை, திருக்கல்யாண குணமில்லை யென்றிப்படி பிதற்றும் ஆஸுரவர்க்கமெல்லாம் திருமாலிருஞ் சோலைமலையில் எம்பெருமான் நின்ற நிலைகண்டவாறே தொலைந்ததாமே; அப்படியே, அப்பெருமான் ஆழ்வார் திருமேனியிற் பண்ணும் வியாமோஹம் இப்படிப்பட்டதென்றறிந்தவாறே ஆழ்வாரிடத்தில் குறைகளையெண்ணுகிற ஆஸுரவர்க்கமெல்லாம் தொலைந்ததாமே என்றவாறு. (4)

**நண்ணவசுரர் நலிவெய்த நல்ல அமரர்பொலிவெய்த***
**எண்ணதனகளெண்ணும் நன்முனிவர் இன்பந்தலைச்சிறப்ப***
**பண்ணார்பாடலின்கவிகள் யானய்த்தன்னைத்தான்பாடி***
**தென்னவென்னும் என்னம்மான் திருமாலிருஞ்சோலையானே.** (5)

| | | | |
|---|---|---|---|
| நண்ணு அசுரர் நலிவு எய்த | ப்ரதி கூலர்களான ஆஸுர ப்ரக்ருதிகள் அழியவும் | பண் ஆர் பாடல் இன் கவிகள் | பண்ணிறைந்த பாடல்களான இனிய கவிகளையிட்டு |
| நல்ல அமரர் பொலிவு எய்த | அநுகூலர்களான தேவப்ரக்ருதிகள் மகிழவும் | யான் ஆய் தன்னை தான் பாடி | தானே யானாகித் தன்னைத் தானே பாடி |
| எண்ணுதலாகள் எண்ணும் நல் முனிவர் இன்பம் தலை சிறப்ப | எம்பெருமானுக்கு இன்னமும் சில குண விபூதிகள் உண்டாகவேணுமென்று எண்ணுமவர்களான முனிவர்கள் கேட்டு மிகவு முகக்கும்படியாகவும் | தென்னா என்னும் என் அம்மான் | தென்னா தெனாவென்று ஆளத்திவைத்து ரஸியாநிற்கு மெம்பெருமான் (எங்குள்ளானென்னில் |
| | | திருமாலிருஞ் சோலையான் | திருமாலிருஞ்சோலை மலையிலுள்ளான். |

***—எம்பெருமான் தம்மோடே கலந்து தம்வாயாலே திருவாய்மொழி கேட்டருளின ப்ரீதி உள்ளடங்காமே ஆனந்தத்திற்குப் போக்கு வீடாகத் தென்னாதென்னாவென்று ஆளத்தி வைத்துப் பாடிக் களியாநின்றான்! இஃது என்ன ராஸிக்யம்! என்று தெருட்டாடுகிறார். தம் வாக்கிலே திருவாய்மொழி அவதரித்தபடியை மூன்றடிகளினால் அற்புதமாகப் பேசுகிறார். எம்பெருமானுடைய அவதாரம் போலேயாயிற்று திருவாய்மொழியினுடைய அவதாரமும். *சாதுசனத்தை நலியுங்கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்திங்குப் பிறந்த* என்றும், *பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்மஸம் ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே*என்றுஞ் சொல்லுகிறபடியே ஸாதுக்களை ரக்ஷிப்பதற்காகவும் துஷ்டர்களைத் தொலைப்பதற்காகவும் எம்பெருமான் அவதரிப்பதாக அறிகிறோம்; திருவாய்மொழியும் அப்படியே இந்த ப்ரயோஜனங்கள் நிறைவேறுதற்காகவே அவதரித்ததாயிற்று. நண்ணாவசுரர்கள் யார்? நல்லவமரர்கள் யார்? என்று முன்னம் தெரிந்துகொள்ள வேண்டும்; "விஷ்ணு பக்தி பரோ தேவ: விபரீதஸ் ததாஸுர:" என்று சாஸ்த்ரம் சொல்லுகையாலே பகவத் பக்தர்களெல்லாரும் நல்லவமரர்களாகவும், விபரீதர்களான பகவத் த்வேஷிகளெல்லாரும் நண்ணாவசுரர்களாகவும் கொள்ளப்படுவர்கள். திருவாய்மொழியினால் விஷ்ணு பக்தர்கள் யாவரும் வாழவும் ஆஸுரப்ரக்ருதிகள் யாவரும் பங்கமடைந்து போகவும் தட்டில்லாமை காண்க.

"நண்ணாவசுரர் நலிவெய்த" என்றவிடத்து ஈட்டில் அருளிச்செய்வது பாரீர்—"அவ்யபதேச்யனுக்கு அனந்தரத்திலவன், தமப்பன் செய்ததைக்கேட்டு இவனென் செய்தானோ! என்று கர்ஹித்தான்; ஒரு மதிளை வாங்குங் காட்டில் அத்தர்சநம் குலைந்ததோ? திருவாய்மொழியென்றும் ஸ்ரீராமாயண மென்றும் வலியன இரண்டு ப்ரபந்தங்களுண்டாயிருக்க—என்றானாயிற்று. இப்படி உகவாதார் நெஞ்சுளுக்கும்படியான ப்ரபந்தமாய்த்து" —என்று. இதனைச் சிறிது விவரிப்போம். இங்கு அவ்யபதேச்யனென்றது க்ரிமி கண்ட சோழனை. அவனுடைய பெயரை வாயாலே யெடுத்துரைக்கக் கூசி அவ்யபதேச்யனென்றது. அவனுக்கு அனந்தரத்திலவன்—அவனுடைய மகன். அவன் தகப்பன் ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்திற்கு விரோதமாகச் செய்த அதர்க்கணச் செயல்களைக் கேள்விப்பட்டானும்; பெருமாள்கோவிலை இடித்துப்போட்டானென்று கேள்விப்பட்டு ஐயோ! ஒரு கோவிலை இடித்துப்போட்டதனால் என்னாகும்! இதனால் தர்சனம் குலைந்ததாமோ? திருவாய்மொழியும் ஸ்ரீராமாயணமுமாகிய இரண்டு பிரபந்தங்களன்றோ ஸ்ரீ வைஷ்ணவ தரிசனத்திற்குக் கல்மதிளாயிரு[illegible]பவை; அவற்றையசைக்கமுடியுமோ ஒருவர்க்கு? என்றானாம் கிரிமிகண்ட சோழனது [illegible]ன். இதனால், திருவாய்மொழியானது ஆஸுரப்ரக்ருதிகள் மனம் [illegible]னும்படியாகவும் [illegible]வப்ரக்ருதிகள் வாழ்ந்து போம்படியாகவும் அவதரித்தது என்னுமிடம் ஒரு சிறுவன் [illegible]றையும் வெளிவந்ததென்று காட்டினபடி.

**எண்ணுதனக ளெண்ணும் நன்முனிவரின்பம் தலைச்சிறப்ப**—எண்ண முடியாதவற்றை யெண்ணுகின்றவர்களான நன் முனிவர்கள் மஹானந்தம் பெறும்படியாகத் திருவாய்மொழி அவதரித்ததாம். எண்ணுதவற்றை யெண்ணுகையாவது என்னென்னில்; திருவாய்மொழி அவதரிப்பதற்கு முன்பு பல மஹான்கள் சபைகூட்டி 'எம்பெருமானுடைய ஸ்வரூபகுண விக்ரஹ விபூதிகளை யெல்லாம் பரிபூர்த்தியாகப் பேசவல்ல பிரபந்தம் ஒன்றுகூட இல்லை; அப்படிப்பட்ட பிரபந்த மொன்று அவதரிக்க வேணுமென்று நாமெல்லாருங்கூடி எம்பெருமானை வேண்டிக்கொள்ளவேணும்' என்று பேசி யெழுந்துபோனார்கள். அவர்களே திருவாய்மொழி அவதரித்தபின்பு மறுபடியும் ஒரு மஹா ஸபைகூட்டி 'எம்பெருமானுக்கு இன்னமும் குணவிக்ரஹ விபூதிகள் உண்டாகவேணும்' என்றார்களாம். உள்ள குணவிக்ரஹ விபூதிகளை யெல்லாம் திருவாய்மொழியிற் பேசிமுடித்து விட்டாராழ்வார்—என்பது இதன் கருத்து. இது தான் எண்ணுதனகளெண்ணுகையாம். **இன்பந்தலைச் சிறப்ப** என்றவிடத்து ஈட்டில்—"திருவாய் மொழியவதரித்தபின்பு 'அவனுக்கு குணவிபூதிகள் போராது' என்றிருந்த விழவு தீர்ந்து அத்தால் நிரதிசயாநந்திகளாக." என்று ஸ்ரீ ஸூக்தி அச்சிடப்பட்டுள்ளது. எம்பெருமானுக்கு குணவிபூதிகள் போராது என்றிருந்த இழவு திருவாய்மொழி யவதரித்தபின்பு தீர்ந்ததாகச் சொல்லுவது பொருந்துகிறதா? என்று பார்க்கவேணும். திருவாய்மொழி அவதரிப்பதற்கு முன்பு எம்பெருமானுக்கு குணவிபூதிகள் போராதென்று இழவுபட்டவர்கள் யாருமிலர்; எம்பெருமானுக்குள்ள குணவிபூதிகளுக்குத் தக்க பிரபந்தமொன்று அவதரிக்க வில்லையே! என்று தான் இழவுபட்டிருந்தார்கள். திருவாய்மொழி அவதரித்தபின்பு அந்த இழவு தீர்ந்து, எம்பெருமானுக்கு குணவிக்ரஹ விபூதிகள் போராது என்று இழவுற்றாராயினர். இதுவே நம்பிள்ளை திருவுள்ளம். இத்திருவுள்ளத்தைக் காட்டியே மேலே குறித்த ஸ்ரீ ஸூக்தியை யருளிச்செய்தார். அதை அச்சிட்டவர்கள் பிரிக்கவேண்டுமிடத்தில் பிரிக்காமல் ஒன்று சேர்த்து அச்சிட்டுவைத்தார்கள். ஸ்ரீ ஸூக்தியில் பிழையில்லை. அதை ஸேவிக்கவேண்டிய ரீதி எங்ஙனே யென்னில்; திருவாய்மொழி யவதரித்த பின்பு அவனுக்கு குணவிபூதிகள் போராது என்று, இருந்த விழவு தீர்ந்து அத்தால் நிரதிசயானந்திகளாக" என்று ஸேவிக்கவேணும். திருவாய்மொழி யவதரித்தபின்பு எம்பெருமானுக்கு குணவிபூதிகள் போராதென்று நினைத்து, முன்னிருந்த இழவுதீரப் பெற்றதென்பதாகக் கொள்க.

ஆக, நண்ணுவசுரர் நலிவெய்தவும் நல்லவமரர் பொலிவெய்தவும் எண்ணுதனக ளெண்ணும்நன் முனிவர் இன்பந்தலைச் சிறப்பவும் எம்பெருமானனவன் பண்ணார்பாடலின்கவிகளை யானாய்த் தன்னைத் தானே பாடிவிட்டு அத்திருவாய்மொழியின் போக்யதையைக்கண்டு திருமாலிருஞ்சோலையிலுள்ள வண்டுகளைப் போலே தானுமொரு வண்டாய்த் தென்னா தென்னாவென்று தேகூடாடுகின்றான் என்றாராயிற்று. ... ... (5)

திருமாலிருஞ்சோலையானேயாகிச் செழுமூவுலகும்* தன்
ஒருமாவயிற்றினுள்ளேவைத்து ஊழியூழிதலையளிக்கும்*
திருமால்என்னையாளுமால் சிவனும்பிரமனும்காணாது*
அருமாலெய்தியடிபரவ அருளையீந்தவம்மானே. (6)

சிவனும் பிரமனும் காணாது — சிவனுக்கும் பிரமனுக்கு மெட்டாதேயிருந்து
அரும் மால் எய்தி அடி பரவ — (அவர்கள்) அருமையான பக்தியைச் செலுத்தித் திருவடிகளைத் துதிக்க
அருளை ஈந்த அம்மான் — அவர்களுக்குத் தன் திருவருளைத் தந்தருளின பெருமானை,

| | | | |
|---|---|---|---|
| செழு மூ உலகும் | விலக்ஷணமான மூவுலகங்களை யும் | திருமால் | திருமகள் கொழுநன் |
| தன் ஒரு மா வயிற்றின் உள்ளே வைத்து | ஒப்பற்ற பெரிய தன் திருவயிற்றினுள்ளே வைத்து | திருமாலிருஞ் சோலையானே ஆகி என்னை ஆளும் மால் | திருமாலிருஞ் சோலையிலே நின்றுகொண்டே என்னை யாட்கொள்வதில் பெரும் பித்தனாயிராநின்றான். |
| ஊழி ஊழி தலை அளிக்கும் | கற்பந்தோறும் நன்றாகக் காப்பாற்றுமவனை | | |

***—திருமாலிருஞ் சோலைமலையப்பனுடைய வியாமோஹாதிசயத்தை யருளிச் செய்கிறார். "திருமால் திருமாலிருஞ் சோலையானேயாகி என்னையாளுமால்" என்பது நோக்கத்தக்கது. தெற்குத் திருமலையைத் தனக்கு உறைவிடமாகக்கொண்டு நிற்கிறான்—என்னையடிமை கொள்ளுகைக்காக என் பக்கல் வியாமோஹம் கொண்டிருக்கிறவன். அன்றியும், செழுமூவுலகும் தன்னொருமா வயிற்றினுள்ளே வைத்து ஊழியூழி தலையளிக்குந் திருமால்—மூவுலகங்களையும் தன்சிறிய திருவயிற்றினுள்ளே வைத்துச் சிறந்த ரக்ஷணம் செய்தருளுமவன்; இப்படிப்பட்டவன் என்னையாளும்மால்—ப்ரளயாபத்தில் ஜகத்துக்குத் தன்னையொழியச் செல்லாதாப்போலே என்னையொழியத் தனக்குச் செல்லாதபடியாயினன்; என்மீது பிச்சேறியிருக்குமவன். சிவனும் பிரமனும் காணாது அருமாலெய்தி அடி பரவ அருளை யீந்தவம்மான்—சிவன் பிரமன் முதலானோர் காணப்பெறாதவர்களாய்க் காணவேணுமென்று ஆசைகொண்டு பக்திபுக்தர்களாய்த் திருவடிகளை ஸ்தோத்ரம்பண்ண அவர்களுக்கு முகம் தோற்றாமே கடக்க நின்று அருள் செய்யும் ஸர்வேச்வரன், என்னை யாளும்மால்—எனக்குக் கண்ணுக்கிலக்காம்படி திருமலையிலே வந்து நின்று என்னை அடிமை கொள்ளுகையிலே பெரும்பித்தனானான். ஆக இப்பாட்டு மூன்று வாக்கியார்த்தமாக அமைத்ததாயிற்று. (1) திருமாலிருஞ்சோலையானேயாகி என்னையாளுமால் (2) செழுமூவுலகும் தன்னொருமாவயிற்றினுள்ளேவைத்து ஊழியூழிதலையளிக்குந் திருமால் என்னையாளும்மால்; (3) சிவனும் பிரமனுங்காணாது அருமாலெய்தியடிபரவ அருளையீந்தவம்மான் என்னையாளும்மால்.

(6)

அருளையீஎன்னம்மானே! என்னும் முக்கணம்மானும்*
தெருள்கொள்பிரமனம்மானும் தேவர்கோனுந்தேவரும்*
இருள்கள்கடியும் முனிவரும் ஏத்துமம்மான் திருமலை*
மருள்கள்கடியும்மணிமலை திருமாலிருஞ்சோலைமலையே. (7)

| | | | |
|---|---|---|---|
| என் அம்மானே அருளை ஈ என்னும் | எம்பெருமானே! உன்னருளைத் தந்தருளவேணும் என்று வேண்டுகிற | ஏத்தும் | துதிக்கும்படியான |
| முக்கண் அம்மானும் | சிவபிரானும் | அம்மான் | எம்பெருமானெழுந்தருளியிருக்குமிடமான |
| தெருள் கொள் பிரமன் அம்மானும் | நல்லறிவுவாய்ந்த நான்முகக் கடவுளும் | திருமலை | திருமலையாவதென்றால்; |
| தேவர் கோனும் தேவரும் | தேவேந்திரனும் முப்பத்துமூவரமரர்களும் | மருள்கள் கடியும் மணி மலை | மருள்களையெல்லாம் தவிர்க்கும் அழகிய மலையான |
| இருள்கள் கடியும் முனிவரும் | அஜ்ஞானங்களைப் போக்க வல்ல முனிவர்களும் | திருமாலிருஞ் சோலை மலையே | அந்தத் திருமலையேயாகும், |

***—இப்போது தம்முடைய ஸம்ருத்திக்கு அடி திருமலையாகையாலே இத்திருமலை தானே நமக்குப்ராப்யமென்று திருமலையைக் கொண்டாடுகிறார். திருமாலிருஞ்சோலைமலை

எப்படிப்பட்ட தென்னில்; **மருள்கள் கடியும் மணிமலை**-ப்ராப்தி விரோதிகளான அவித்யை முதலிய ஸகல அஜ்ஞானங்களையும் அனைவர்க்கும் போக்கக்கடவதாய் விலக்ஷணமான திருமலை. பின்னையும் எப்படிப்பட்டதென்னில்; **தேவரும் முனிவருமேத்துமம்மான் திருமலை**—தேவர்களும் மஹரிஷிகளும் ஏத்த நின்ற ஸர்வேச்வரன் தான் விரும்பி வந்து மேல்விழுந்து படுகாடு கிடக்கும் தேசம். அந்த தேவர்கள் யாவரென்னில்; **என்னம்மானே! அருளாயியென்னும் முக்கணம்மானும் தெருள்கொள்பிரமனம்மானும் தேவர்கோனும்**—'நீ அருளாவிடில் புறம்பே எங்களுக்கு அருள்செய்வாரில்லை; ப்ராப்தனை நீயே அருள்செய்தாக வேண்டும்? என்று கைகூப்பிப் பல்வரிசைகளைக்காட்டிப் பிரார்த்திக்கின்ற ஈச்வராபிமாநியான ருத்ரனும்; அவனுக்குங்கூட ஞானமளிப்பவனுப் தந்தையான பிரமனும், தேவஜாதிக்கெல்லாம் தலைவனென்று இறுமாந்திருக்கின்ற தேவேந்திரனுமாவர். இத்தேவர்களோடுகூட, அஜ்ஞானவிருளை வேரறப்போக்கியிருக்கும் ஸ்மர்த்தாக்களான மஹரிஷிகளுமாக இப்பெரியார்களெல்லாரும் ஒருமிடறு செய்து ஏத்தநின்ற ஸர்வேச்வரன் வர்த்திக்கும் திருமலை திருமாலிருஞ்சோலைமலையென்று அநுதித்தாராயிற்று. ... ... (7)

**திருமாலிருஞ் சோலைமலையே திருப்பாற்கடலே என்றலையே***
**திருமால் வைகுந்தமே தண் திருவேங்கடமே யெனதுடலே***
**அருமாமாயத் தெனதுயிரே மனமேவாக்கேகருமமே***
**ஒருமா நொடியும் பிரியான் என்னூழி முதல்வனொருவனே.** (8)

| | | | |
|---|---|---|---|
| திருமாலிருஞ் சோலை மலையே திருப்பாற்கடலே என் தலையே | தெற்குத் திருமலையோடும் திருப்பாற்கடலோடு மொக்க என் தலையையும் | அருமா மாயத்து எனது உயிரே | கடக்கவரிதான ப்ரக்ருதியோடேகலசியிருக்கிற என்னுத்மாவையும் |
| | | மனமே வாக்கே கருமமே | மனஸ்ஸையும் வாக்கையும் க்ரியையையும், |
| திருமால் வைகுந்தமே தண் திருவேங்கடமே எனது உடலே | ஸ்ரீவைகுண்டத்தோடும் திருமலையோடு மொக்க என்னுடலையும், | என் ஊழி முதல்வன் ஒருவன் | ஸகலகாரண பூதனான ஸர்வேச்வரன் ஒருவன் |
| | | ஒரு மா நொடியும் பிரியான் | ஒருக்ஷணத்தில் ஏகதேசமும் பிரிகிறிலன். |

* * *—திருமாலிருஞ் சோலைமலை, திருப்பாற்கடல், திருநாடு, திருவேங்கடமலை முதலாகத் தானெழுந்தருளியிருக்கும் திவ்விய தேசங்களெல்லாவற்றிலும் தனக்குப்பிறக்கும் ப்ரீதியை என்னுடைய அவயவங்களின்மேல ஸம்ச்லேஷத்தாலே பெற்றவனுய் ஒரு க்ஷணமும் என்னைவிட்டுப்பிரிந்து தரிக்கமாட்டாதவனுயிராநின்றான்; இவனுடைய அபிநிவேசமிருக்கும்படி என்னே! யென்று வியக்கிறாரிப்பாட்டில். இதில் முதலடியில்—திருமாலிருஞ்சோலைமலையையும் திருப்பாற்கடலையும் ஆழ்வாருடைய திருமுடியையும் ஏகரீதியாக எம்பெருமான் விரும்புகிறபடி சொல்லப்படுகிறது. இரண்டாமடியில்—ஸ்ரீ வைகுண்டத்தையும் வடக்குத் திருமலையையும் ஆழ்வாருடைய திருமேனியையும் ஏகரீதியாக விரும்புகிறபடி சொல்லப்படுகிறது. ஆக, இரண்டு திருமலைகளிலும் பரவ்யூஹங்களிலும்பண்ணும் விருப்பத்தையெல்லாம் தம் திருமேனி யொன்றின்மேல பண்ணாநின்றான் என்றாராயிற்று. மூன்றாமடியில் வேறேரிடம் கலசாதே தம்முடைய ஆத்மவஸ்துவிலும் மநோவாக் காயங்களிலும் ஏகரீதியாக விருப்பம் செய்திருக்கிறபடியைப் பேசுகிறார்.

இப்பாட்டில் உம்மைகள் பிரயோகிக்கவேண்டு மிடங்களில் ஏகாரம் பிரயோகிக்கப் பட்டிருப்பது குறிக்கொள்ளப்படவேண்டும். திருமாலிருஞ்சோலைமலையும் திருப்பாற்கடலும் என் தலையும்.......................................என்றுப் போலேயன்றே சொல்ல

வேண்டும்; உம்மையைவிட்டு ஏகாரமிட்டதன் கருத்தை நம்பிள்ளை விளக்கியருளுகிறார்—“ஸௌபரியைப் போலே அனேகம் வடிவுகொண்டு நில்லா நின்றுனைத்து” என்று. ஸௌபரி யென்பவன் மாந்தாதாவின் ஐம்பது பெண்களை மணம் புணர்ந்து தனித்தனி ஐம்பது வடிவுகளெடுத்து அத்தேவிமாருடனே தனித்தனியே கலந்து பரிமாறு நிற்கையில் ஒவ்வொரு தேவியும் என்ன நினைத்திருந்தா ளென்றால் ‘என் கணவன் என்னொருத்தியை விட்டு வேறொருத்திபால் ஒரு நொடிப் பொழுதும் செல்கிறிலன்’ என்றே நினைத்திருந்தாளாம். அப்படியே எம்பெருமானும் இப்பாட்டிற் சொல்லப் படுகிற இடங்களில் ஒன்றிலிருக்கும் போது மற்றொன்றில் இல்லை யென்று நினைக்கலாம்படி யிருந்தமை தோற்றவே உம்மையைத் தவிர்த்து ஏகாரம் பிரயோகிக்கப் பட்டதென்று கொள்க.

ஒருமா நொடியும் பிரியான்—ஒரு க்ஷணத்தில் ஏகதேசமும் பிரிகின்றிலனென்றபடி. ஒன்றைவிட்டு மற்றொன்றில் கால்வாங்கிப் போகாமல் அஸ்தமிதாந்யபாவனாயிருந்து அநுபவிக்கின்றானென்கை. இப்படி யநுபவிப்பவன் யாவனென்ன; [என்னூழி முதல்வனொருவனே.] கார்யாவஸ்தையிலும் காரணாவஸ்தையிலுமுள்ள சேதநாசேதநங்களினுடைய ஸத்தை தன் அதீனமாம்படி யிருக்குமவன் தன்னுடைய ஸத்தை என் அதீனமாம்படி யிருக்கிறான் என்பது கருத்து.

... ... ... (8)

ஊழி முதல்வனொருவனேயென்னும் ஒருவனுலகெல்லாம்*
ஊழி தோறுந்தன்னுள்ளே படைத்துக் காத்துக்கெடுத்துழலும்*
ஆழி வண்ண னென்னம்மான் அந்தண் திருமாலிருஞ் சோலை*
வாழிமனமே! கைவிடேல் உடலு முயிரும் மங்கவொட்டே. (9)

| | | | |
|---|---|---|---|
| ஊழி முதல்வன் ஒருவனே என்னும் ஒருவன் | ஸமஸ்த வஸ்துக்களுக்கும் ஒருவனே காரணபூதனென்று சொல்லப்பட்ட அத்விதியனாய் | ஆழி வண்ணன் என் அம்மான் அம் தண் திருமாலிருஞ்சோலை | கம்பீரஸ்வபாவனாயிருக்கின்ற எம்பெருமானுடைய அழகிய குளிர்ந்த திருமலையை |
| உலகு எல்லாம் | ஸகல லோகங்களையும் | மனமே | நெஞ்சே! |
| ஊழிதோறும் | படைக்கவேண்டிய காலந்தோறும் | கை விடேல் | கைவிடாதே; |
| தன் உள்ளே | தன் ஸங்கல்பத்தின் ஏகதேசத்துக்குள்ளே | வாழி | இதுகொண்டு வாழ்வாயாக, எம்பெருமானே! |
| படைத்து காத்து கெடுத்து உழலும் | ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்து போருமவனாய் | உடலும் உயிரும் மங்க ஒட்டு | எனது சரீரமும் பிராணனும் உனது வெறுப்புக்கு இலக்காம்படி இசையவேணும். |

***—இப்பாட்டில் பெரும்பாகம் ஆழ்வார் தம் திருவுள்ளத்தை நோக்கிச் சொல்லுவதாகவும் சிறுபாகம் எம்பெருமானை நோக்கிச் சொல்லுவதாகவும் பன்னீராயிரப்படி தவிர்ந்த மற்ற வியாக்கியானங்களிலெல்லா முள்ளது. பன்னீராயிரப்படியில் மாத்திரம் பாட்டு முழுவதும் திருவுள்ளத்தையே நோக்கிச் சொல்லுவதாகவுள்ளது. ஆறாயிரப்படி யருளிச்செயல்—‘நமக்கு இந்த ஸம்ருத்தியெல்லாம் திருமலையாலே வந்த ஸம்ருத்திகிடாய், நெஞ்சே! இனித் திருமலையைக் கைவிடாதே கிடாய் என்று நெஞ்சைக் குறித்துச் சொல்லி; இவ்வாத்மாவினுடைய நிகர்ஷம்பாராதே இத்தோடே கலந்தருளினையேயாகிலும் என்னுடைய ஹேயமான இந்த ப்ரக்ருதியில் அபிநிவேசத்தை விட்டருளவேணுமென்று எம்பெருமானை ப்ரார்த்திக்கிறார்.” என்று.

ஈற்றடியில் மனமே! என்று விளியிருப்பதுபோல எம்பெருமானே! என்று மற்றொரு விளியில்லாமையால் பாட்டு முழுதும் நெஞ்சை நோக்கியே சொல்லுவதாகக் கொள்ளலா

மென்று கருதினர் பன்னீராயிரவுரைகாரர். நெஞ்சே! நமக்கு த்யாஜ்யமான தேஹப்ராணாதிகள் மங்கும்படியாகச் செறிந்து ஆச்ரயிக்கப்பாராய்; நம் காரியம் செய்து முடிக்குந்தனையும் திருமாலிருஞ்சோலை மலையைக் கைவிடாதே கொள்; இத்தாலே நீ வாழ்வாய்—என்று ஏகவாக்யமாகவே உரைத்திட்டார். இது சுவையுடைத்தன்று. ஆழ்வார் தம் திருவுள்ளத்தை நோக்கி "வாழி மனமே கைவிடேல்" என்றுஅருளிச்செய்தவுடனே எம்பெருமானும் தன் திருவுள்ளத்தைக் குறித்து 'ஆழ்வாரைத் தந்தது அவருடைய திருமேனியாகையாலே நீயும் அத்திருமேனியை ஒருகாலும் விடாதே கிடாய்' என்று கூறினனாக, அது கேட்ட ஆழ்வார், பிரானே! இது யுக்தமன்று, இதைத் தவிரவேணும் என்று கால்கட்டுகிறார். **உடலுமுயிரும் மங்க வொட்டு**—சரீரமும் பிராணனும் மங்கும்படி இசையவேணும் [வெறுப்புக்கு இலக்காக வேணுமேயல்லது உகப்புக்கு இலக்காக வொண்ணாது என்றபடி]; இவை அத்திருமலைபோலே உபாதேயமாயிருப்பவையல்ல; மிகவும் ஹேயமானவை—என்று ஸர்வஜ்ஞனை ஸர்வேச்வரனுக்கும் உணர்த்தினாராயிற்று.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின்;—"**மங்கவொட்**டென்கையாலே இதுக்கு முன்புத்தை ஆழ்வாருடைய இருப்பு ப்ராரப்த சேஷத்தாலல்ல; பகவதபிப்ராயத்தாலே யென்னுமிடம் தோற்றுகிறது. ஈச்வரன் பற்றி விடேனென்றிருக்கையாலே இருந்தாரென்கிறது" என்று. ... ... ... ... ... ... ... (9)

மங்கவொட்டு உன்மாமாயை திருமாலிருஞ்சோலைமேய*
நங்கள் கோனே! யானேநீயாகி என்னையளித்தானே!*
பொங்கைம் புலனும் பொறியைந்துங் கருமேந்திரியம் ஐம்பூதம்*
இங்கிவ்வுயிரேய்பிரகிருதி மானாங்காரமனங்களே. (10)

| | | | |
|---|---|---|---|
| திருமாலிருஞ்சோலை மேய | தெற்குத் திருமலையில் வாழ்கின்ற. | ஐம்பூதம் | பஞ்சபூதங்களும் |
| நங்கள் கோனே | எம்பெருமானே! | இங்கு | ஸம்ஸார நிலைமையில் |
| யானே நீ ஆகி என்னை அளித்தானே | நமக்குள் ஐக்கியமாம்படி என்னை ரக்ஷித்தவனே! | இவ் உயிர் ஏய் பிரகிருதி | ஜீவனோடே கலசின மூலப்ரக்ருதியும் |
| பொங்கு ஐம்புலனும் | கிளர்ந்து வருகின்ற சப்தாதி விஷயங்கள் ஐந்தும் | மான் ஆங்காரம் மனங்கள் | மஹானும் அஹங்காரமும் மனஸ்ஸுமாகிற |
| பொறி ஐந்தும் | ஜ்ஞானேந்திரியங்கள் ஐந்தும் | உன் மா மாயை | உனது பெரிய மாயையைக் |
| கருமேந்திரியம் | கருமேந்திரியங்கள் ஐந்தும் | மங்க ஓட்டு | கழித்துத்தர ஸம்மதித்தருளவேணும். |

*** கீழ்ப் பாட்டில் "உடலுமுயிரும் மங்கவொட்டே" என்று பிரார்த்திக்கச் செய்தேயும் இவருடைய திருமேனியிலுள்ள விருப்பத்தினாலே எம்பெருமான் பின்னையும் மேல் விழுந்து ஆதரிக்க, ஐயோ! ஸர்வஜ்ஞனை இவனுக்கு இவ்வுடலின் ஹேயத்வம் தெரியவில்லையே! ஹேயங்களான இருபத்துநான்கு தத்துவங்களினால் புணர்க்கப்பட்டது இது என்று உண்மையை யெடுத்துக்காட்டினால் இந்த நப்பாசை தவிரக்கூடும் என்று நினைத்து அதை யெடுத்துரைக்கிறாரிப்பாட்டில்.

பிரானே! உடலுமுயிரும் மங்கவொட்டென்று வேண்டச் செய்தேயும் இப்படி மேல் விழுகிறாயே, இது தகுமா? என்று ஆழ்வார் கேட்க, அதற்கு எம்பெருமான் 'சாந்து பூசுவார் பரணியையுடைத்தோ பூசுவது? சாந்துக்கு ஆச்ரயமான பரணியும் உபாதேயமன்றோ' என்று சொல்ல; விரிவான உக்திகளாலே ஆழ்வார் அவனைத் தெளிவிக்கிறாராயிற்று.

[**உன் மாமாயை மங்கவொட்டு**] *தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா* என்று கீதையில் நீ தானே சொல்லிவைத்தாயே; ஒருவராலும் தப்பவொண்ணாதபடி தேருவிபிணைத்த பிணையாக நீ பிணைத்த பிணையிலே ஆதரம் தவிரப்பாராய்.] **திருமாலிருஞ்சோலை மேய நங்கள் கோனே!**] பரமபதத்தை விட்டு நீ திருமாலிருஞ்சோலைமலையிலே வந்து நிற்கிறது அடியார்கள் சொன்னபடியே நடந்து ஆச்ரிதபாராதந்திரியத்தை நிலைநிறுத்திக் கொள்வதற்காகவன்றோ? இன்னமும் என் சொற்கேளாதே நீ ஸ்வதந்திரனாயே நின்று நினைத்தபடி செய்வதாகில் பரமபதத்திலேயே யிருக்கலாமே; திருமாலிருஞ்சோலையைக் கோயில் கொள்ளவேண்டாவே. [**யானே நீயாகி யென்னை யளித்தானே!**] என்னிடத்தில் எனக்கு எவ்வளவு பரிவு உண்டோ அவ்வளவு பரிவு உனக்கும் இல்லையோ? யானே நீ யென்னலாம்படியிருந்துவைத்து இப்போது எனக்கு அநபிமதமானதைச் செய்யத்தகுமோ? என்று இங்ஙனே ஆழ்வார் சொல்லச் செய்தேயும் எம்பெருமான் இணங்காதிருப்பதுகண்டு, தேஹத்தின் ஹேயமான தன்மையைப் பின்னடிகளால் பரக்கப் பேசுகிறார் **பொங்கைம்புலனுமித்யாதி.** கீழே *கண்கள் சிவந்து பெரியவாய்* (8-8.) என்கிற திருவாய்மொழியிலே ஜீவாத்மாவின் சீர்மையை எம்பெருமான் ஆழ்வார்க்கு உணர்த்தினான்; இப்போது ஆழ்வார் எம்பெருமானுக்கு அசேதநத்தின் தன்மையை உணர்த்துகிறார்; சிஷ்யாசார்ய க்ரமம் மாறினதாயிற்று.

**பொங்கு ஐம்புலனும்**-சப்தாதி விஷயங்கள் ஐந்தும், அவற்றிலே அகப்படுத்துகைக்கு உறுப்பான செவிகண் முதலிய ஜ்ஞானேந்திரியங்கள் ஐந்தும், அவ்விஷயங்களில் ப்ரவர்த்திக்கைக்கு ஹேதுவான கைகால் முதலான கருமேந்திரியங்கள் ஐந்தும், சரீரத்திற்கு ஆரம்பகங்களான நிலம்நீர் முதலான பூதங்கள் ஐந்தும் ஆகஇவை இருபது; ஸம்ஸாரதசையில் ஜீவனோடே மிகப்பொருந்தியிருக்கிறமூலப்ரக்ருதி, வ்யவஸாய ஹேதுவான மஹான், அபிமாந ஹேதுவான அஹங்காரம், ஸங்கல்பஹேதுவான மநஸ்ஸு ஆக இவை நான்கு; இவ்விருபத்து நான்கு தத்துவங்களின் கூட்டரவாக நீ கட்டிவைத்திருக்கிற மாயையிலே இப்போது நீ வீணாகப் பண்ணுகிற ஆதரத்தை விட்டுத் தொலைக்கப் பாராய்—என்றதாயிற்று.

திருமாலிருஞ்சோலைமேய நங்கள் கோனே! யானே நீயாகி யென்னை யளித்தானே!, பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதம் இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானாங்கார மனங்களாகிற உன்மாமாயை மங்கவொட்டு என்று அந்வயிப்பது. இங்கு ஐம்புலன்களுக்கு **பொங்கு** என்று அடைமொழி கொடுக்கப்பட்டது; பரமபோக்யமென்று பிரமிக்கச் செய்யுந் தன்மைவாய்ந்த என்றபடி. ... ... ... (10)

**மானாங்காரமனங்கெட ஐவர் வன்கையர் மங்க***
**தானாங்காரமாய்ப்புக்குத் தானே தானே யானானை***
**தேனாங்காரப் பொழில் குருகூர்ச் சடகோபன் சொல்லாயிரத்துள்***
**மானாங்காரத்திவைபத்தும் திருமாலிருஞ்சோலைமலைக்கே.** (11)

| | |
|---|---|
| மான் ஆங்காரம் மனம் கெட | மஹான் அஹங்காரம் மனம் என்னுமிவை கெடும்படியாகவும் |
| வன்கையர் ஐவர் மங்க | கொடிய இந்திரியங்களைந்தும் தொலையும்படியாகவும் |
| தான் ஆங்காரம் ஆய் புக்கு | தானே அபிமானியாய்ப் புகுந்து |
| தானே தானே ஆனானை | ஆத்மாத்மீயங்கள் தானேயாயிருக்கிற பெருமானை, |
| தேன் ஆங்காரம் பொழில் | வண்டுகளினுடைய செருக்கையுடைத்தான சோலை சூழ்ந்த |
| குருகூர் | திருநகரிக்குத் தலைவரான |
| சடகோபன் சொல் | ஆழ்வாரருளிச்செய்த |
| ஆயிரத்துள் | ஆயிரத்தில் |
| மான் ஆங்காரத்து இவை பத்தும் | மஹதஹங்காராதி ரூபமான ப்ரக்ருதி தொலைவதற்காகச் சொன்ன இப்பதிகம் |
| திருமாலிருஞ்சோலை மலைக்கே | திருமாலிருஞ்சோலை விஷயமாயிற்று. |

*** இத்திருவாய்மொழியானது திருமாலிருஞ்சோலைமலையைப்பற்றின தென்கிருரிப் பாட்டில். இது இவர் சொல்லித் தெரியவேண்டுவதன்றே; பாட்டுத் தோறும் திருமாலிருஞ் சோலையென வருவது கொண்டே தெரிந்து கொள்ளக்கூடியதன்றோ; "இவை பத்தும் திருமா லிருஞ் சோலைமலைக்கே" என்று விசேஷித்துச் சொல்லுவதன் கருத்து யாதென்னில்; கேண் மின்; கீழே (2-10.) *கிளரொளியிளமைப் பதிகத்தில் "மயல்மிகு பொழில் சூழ்மாலிருஞ் சோலை' என்றார்; அஜ்ஞானத்தை மிகுவிக்கும் தேசம் என்பது கருத்து; ஸம்சயமும் அஜ்ஞானத்திலே ஒரு வகுப்பாகையாலே, *மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார் தமக்கும் அஜ்ஞான முண்டாகி "முடிச் சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ? அடிச்சோதி நீநின்ற தாமரை யாயலர்ந்ததுவோ?" என்று ஸம்சயிக்க நேர்ந்தது; இவ்வளவேயன்றிக்கே ஸர்வஜ்ஞனான ஸர்வேச்வரனுங்கூட தம்முடைய ஹேயமான தேஹத்திலே ஆதரம் பண்ணும் படி நேர்ந்ததானது மயல்மிகு பொழில் சூழ்மாலிருஞ்சோலையில் வாஸத்தின் பலனே யென்று காட்டுகை ஒரு கருத்து; அப்படி அவன் தம்முடைய தேஹத்திலே பண்ணின ஆதரத்தைத் தவிர்த்துக்கொண்டதும் திருமாலிருஞ் சோலை வாஸத்தினால் தான்; அடியார்களுக்கு விதேயனாகைக்காகவே அர்ச்சாவதார பரிக்ரஹமாகையாலே இதை ஆழ்வார் உணர்த்தவே ஆழ்வாருடைய கட்டளையை மீறலாகாதென்று கொண்டு தவிர்ந்தானாயிற்று; இதுவும் திரு மாலிருஞ் சோலை வாஸத்தின் பலனே யென்று காட்டுகை மற்றொரு கருத்து. இப்பாட்டின் முன்னடிகளில் சொல்லப்பட்டிருக்கிற விஷயமே இப்பதிகத்திற்குப் பலன் என்று கொள்ளக் கடவது.

**மான் ஆங்காரம் மனம் கெட**—மஹான் அஹங்காரம் மநஸ்ஸென்று முன்னைச் சொன்னது ப்ரகிருதிக்கும் உபலக்ஷணம். சரீரஸம்பந்தம் நசிக்கும்படியாக என்றபடி. **ஐவர் வன்கையர் மங்க**—வன்கையரான ஐவர் மங்க; பெருமிடுக்கையுடைய பஞ்சேந்திரியங்களும் மங்கும்படியாகவும் என்றபடி. கீழ்ப்பாட்டில் ஐந்தைந்தாகச் சொன்னவை யெல்லாவற்றுக் கும் உபலக்ஷணமிது. ப்ரக்ருதி ப்ராக்ருதாத்மக்மான தம்முடைய திருமேனியிலே நசை கெட்டு என்றதாயிற்று. **தான் ஆங்காரமாய்ப்புக்கு**—என்னை யநுபவிக்கப் பெரிய செருக் கோடே வந்து புகுந்து என்றபடி. **தானே தானே யானானே**—நான் இரக்க வேண்டாதே தானே இரப்பாளனாகி யென்றவாறு. இப்படிப்பட்ட எம்பெருமானைக் குறித்து ஆழ்வா ரருளிச் செய்த ஆயிரத்துள்;

**மானாங்காரத்து இவை பத்தும்**—இதற்கு இரண்டுபடியாகப் பொருளருளிச் செய் வர்;—மஹான் அஹங்காரம் முதலியவற்றின் கூட்டரவான தேஹத்தை விட்டுத் தொலைப் பதற்காகச் சொன்ன இப்பதிகம்—என்றும், பெரிய செருக்கோடே சொன்ன இப்பதிகம் என்றும். ஆழ்வார் தம்முடைய உத்தேச்யம் தலைக்கட்டுகை அணித்து என்னுமத்தாலே பெரிய செருக்கு உண்டாகக் குறையில்லையே. ... ... (11)

திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகையில்

பத்தாம்பத்து ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.

நம்பிள்ளை திருவடிகளே சரணம்

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பத்தாம்பத்து-எட்டாந்திருவாய்மொழி திருமாலிருஞ்சோலைமலையென்றேன்.

**உரையவதாரிகை:**—ஆழ்வாரைத் திருநாட்டுக் கெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போக எம்பெருமான் விரைந்தமை சொல்லிற்று* அருள்பெறுவாரடியாரென்னுந் திருவாய்மொழியிலே. அதற்குச் சிறிது இடையூறு விளைந்தது கீழ்த்திருவாய்மொழியில்—ஆழ்வாருடைய திருமேனியிலே எம்பெருமான் அளவுகடந்த அபிநிவேசம் பண்ணி இத்திருமேனியோடே ஆழ்வாரைத் திருநாட்டுக்குக் கொண்டுபோவதாக முயல, ஆழ்வார் தம்முடலின் தண்மையை அப்பெருமானுக்கு அறிவித்துத் தடுக்க இவ்வழியாலே எம்பெருமானுடைய விரைதல் சிறிது தடைபட்டதாயிற்று. எம்பெருமானும் ஆழ்வாருடைய நிஷேதத்திற்கு இணங்கி நின்று இவர்க்கு விண்ணுலகம் தர விரைந்தானாகி வானேறும்வழியிலே கொண்டுபோவதாக முயன்ற வளவிலே ஆழ்வார் அவனை மடிபிடித்து ஒரு கேள்வி கேட்கத்தொடங்கினார்; அதாவது, இன்று இப்படிபதறுகின்ற நீ அநாதிகாலம் என்னை இவ்விருள் தருமா ஞாலப்படுகுழியிலே தள்ளியிட்டு வைத்து ஆறியிருந்தமை எங்ஙனே? இன்று இப்படி ஆதரிக்கைக்கும் அநாதிகாலம் அநாதரித்திருந்தமைக்கும் ஹேது சொல்லியருளவேணும் என்றார்; அவனும் என்ன ஹேது சொல்லலாமென்று பலவாறு சிந்தித்துப் பார்த்தான்; எதற்கும் ஆழ்வார் பிரதிகோடி சொல்ல வல்லவர் என்பதைத் தன்னில் தானுணர்ந்து நிரங்குச ஸ்வாதந்திரியத்தாலே செய்யுமதுக்கு ஹேதுவுண்டோ' வென்று ஆழ்வார் தாமே ஸமாதானமடைந்திடுகவென்றும் கருதி, ஒரு மறுமாற்றமுங் காணாமையாலே கவிழ்ந்து நின்று காலாலே தரையைக்கீறி நின்றான்; இது நிர்ஹேதுகவிஷயீகாரமென்று ஆழ்வாரறிந்து விஸ்மிதராய்க் களித்துப் பேசுகிறதாயிராநின்றது—இத்திருவாய்மொழி. ... *

**திருமாலிருஞ் சோலைமலையென்றேன், என்ன***
**திருமால்வந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தான்***
**குருமாமணியுந்து புனல் பொன்னித்தென்பால்***
**திருமால் சென்று சேர்விடம் தென்திருப்பேரே.** (1)

| | | | |
|---|---|---|---|
| திருமாலிருஞ் சோலைமலை என்றேன் என்ன | திருமாலிருஞ் சோலையென்று சொன்னேனென்பதையே நிமித்தமாகக்கொண்டு | குருமாமணிஉந்து புனல் | மிகச்சிறந்த மாணிக்கங்களைக் கொழிக்கின்ற வெள்ளத்தையுடைய |
| திருமால்வந்துஎன் நெஞ்சு நிறைய புகுந்தான் | எம்பெருமான் வந்து என் னெஞ்சினுள்ளே நிறையப் புகுந்தான்; | பொன்னி | காவிரி யாற்றினுடைய |
| | | தென் பால் | தென்பக்கத்திலுள்ளதான |
| திருமால் சென்று சேர்வு இடம் | இப்படிப்பட்ட எம்பெருமான் சென்று வாழுமிடம் (எதுவென்றால்) | தென் திருப்பேர் | அழகிய திருப்பேர் நகராம். |

***—எம்பெருமான் இத்தலையில் ஸ்வல்ப வ்யாஜமாத்ரமே கொண்டு விஷயீகரிக்குமவனென்று அவனுடைய நிர்ஹேதுக விஷயீகார வைபவத்தை யருளிச்செய்கிறார். **திருமாலிருஞ்சோலைமலை யென்றேன்; என்னத் திருமால் வந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தான்**—என்னூரைச் சொன்னாய் என்பேரைச்சொன்னாய் என்று மடிமாங்காயிட்டு விஷயீகரிக்குமவனான எம்பெருமானுக்கு என் பக்கலிலே ஒரு பற்றாசு கிடைத்தது; அது எதென்னில், என் வாயில் திருமாலிருஞ்சோலைமலை யென்று ஒரு சொல் யாத்ருச்சிகமாக வெளிவந்தது; மற்ற மலைகளிற் காட்டிலும் திருமாலிருஞ்சோலைமலைக்கு ஒரு வைலக்ஷண்யமுண்டென்று கொண்டு

புத்தி பூர்வகமாகச் சொன்னேனல்லேன்; பலமலைகளையும் சொல்லிப் போருகிற வரிசையிலே திருமாலிருஞ்சோலைமலை யென்று இதனையும் சொன்னேனத்தனை; இவ்வளவேகொண்டு அவன் பிராட்டியோடுங் கூடவந்து என்னெஞ்சு நிறையப் புகுந்தானாயிற்று. விபீஷணாழ்வான் பக்கலிலே *மித்ரபாவமே அமையுமென்றவனன்றோ இப்பெருமான். அஹ்ருதயமாகச் சொன்னதையும் ஸஹ்ருதயமாக்கிக் கொடுக்க வல்லவளான பிராட்டி அருகே யிருக்கையாலே மலையைப்பற்றின என்வாக்கு அவனுக்கு மலையாகவே ஆய்விட்டதென்கிறார். எம்பெருமானுக்கு நீர்வண்ணனென்றொரு திருநாமமுண்டு; நீரின் தன்மைபோன்ற தன்மையை யுடையவன் எம்பெருமான்; மிகச் சிறிய த்வாரமொன்று கிடைத்தாலும் நீர் உள்ளே புகுந்து நிறைந்து விடுமே; அப்படியே நீர்வண்ணனான எம்பெருமானும் உள்ளேபுகுதற்கு ஸ்வல்பத்வாரம் பெற்றால் போதுமே; திருமாலிருஞ்சோலைமலை யென்ற உக்தி மாத்ரமே ஸ்வல்பத்வாரமாயிற்றென்க.

இப்படி தம் நெஞ்சு நிறையப்புகுந்த பெருமான் எவ்விடத்திலுள்ளானென்ன, அவ்விடம் சொல்லுகிறது பின்னடிகளால். **குருமாமணியுந்து புனல் பொன்னித் தென்பால் தென் திருப்பேர்**—சிறந்த ரத்னங்களைக்கொண்டு வந்து தள்ளா நின்றுள்ள புனலை யுடைத்தாகையாலே **பொன்னி** யென்றும் **கநகநதி** யென்றும் பேர் பெற்றிருக்கிற திருக்காவேரியின் தென்கரையிலுள்ளதான திருப்பேர் நகர்—அப்பக்குடத்தான் ஸன்னிதி. **திருமால் சென்று சேர்விடம்**—பரமரஸிகனானவன் தானும் பிராட்டியுமாய் விரும்பிச்சென்று சேரும் தேசம் அது வாயிருக்கச் செய்தே கிடீர் என்னுடைய அஹ்ருதயமான உக்திமாத்ரத்தைக் கொண்டு என்னுடைய ஹ்ருதயத்திலே வந்து புகுந்தான்; இதென்ன நிர்ஹேதுகவிஷயீகாரம்! என்று உள்குழைந்து பேசுகிறபடி. மூன்றாமடியில் **குரு** என்றது வடசொல் விகாரம்; சிறந்த வென்றபடி. ஒளிமிக்கு விலையுயர்ந்தமணிகளை யென்றவாறு. (க)

**பேரேயுறைகின்றபிரான் இன்று வந்து***
**பேரேனென்று என்னெஞ்சு நிறையப் புகுந்தான்***
**காரேழ்கட லேழ் மலையேழுலகுண்டும்***
**ஆராவயிற்றானை அடங்கப் பிடித்தேனே.** (2)

| | | | |
|---|---|---|---|
| பேரே உறைகின்ற பிரான் | திருப்பேர் நகரில் நித்தியவாஸம் பண்ணுமெம்பெருமான் | ஏழ் கார் ஏழ் கடல் ஏழ் மலை உலகு உண்டும் | ஏழேழான மேகங்களும் கடல்களும் மலைகளுஞ் சூழ்ந்த உலகங்களை யெல்லாமமுது செய்தும் |
| இன்று வந்து | இன்று தானே விரும்பி வந்து | ஆரா வயிற்றானை | நிறையாத திருவயிற்றையுடைய அப்பெருமானை |
| பேரேன் என்று | இனிப் பேரமாட்டேனென்று | அடங்க பிடித் | பரிபூர்ண விஷயீகாரம் செய்தானாகப் பண்ணிக்கொண்டேன். |
| என் நெஞ்சு நிறைய புகுந்தான் | என்னெஞ்சிலே தான் பரிபூர்ணனாம்படி புகுந்தான்: (ஆகவே) | | |

***—இதுக்கு முன்பு தான் ஸர்வேச்வரனாயிருந்தும் என்னோடு கலக்கப்பெறாமையாலே குறைவாளனாயிருந்தவன் நிர்ஹேதுகமாக என்னுடைய ஹ்ருதயத்திலே வந்து புகுந்து பூர்ணனானானென்கிறார். *காரேழ் கடலேழ் மலையேழுலகுண்டு மாராவயிற்றான்* என்று பின்னடிகளிலுள்ளது இப்பாட்டுக்கு உயிரானது. புஷ்கலாவர்த்தகம் முதலான மேகங்களேழையும் கடல்களேழையும் குலபர்வதங்களேழையு முடைத்தான லோகத்தையெல்லாம் ரக்ஷித்துங் கூட என் செய்தோமென்று குறைபட்டிருந்தானாம் ஆழ்வார் திருவுள்ளத்தில் வாஸம் கிடைக்கப் பெறாமையினாலே; அக்குறை தீர்ந்ததாயிற்று இப்போது. இக்குறை தீருகைக்காகத் திருப்பேர் நகரிலே வந்து ஸன்னிதி பண்ணியிருந்து ஸ்வல்ப வ்யாஜமாத்

ரமே கொண்டு ஆழ்வார் திருவுள்ளத்திலே புகுந்தான். தாமரைப்பூவைவிட்டுத் தன்னுடைய திருமார்பிலே வந்து சேர்ந்த பிராட்டி 'அகலகில்லேன், அகலகில்லேன்' என்று சொல்லிக் கொண்டிருந்ததுபோல, தானும் 'பேரேன், பேரேன், (அதாவது, ஆழ்வாருடைய இத்திருவுள்ளத்தை விட்டுப் பேர்ந்து செல்லமாட்டேன், அகன்று போகமாட்டேன்) என்று சொல்லிக்கொண்டே புகுந்தானும். பிரானே! நீ இங்கேயிருக்கப் போகிறாயா? புறப்பட்டுப் போகிறாயா? என்று கேட்பாருமின்றிக்கே யிருக்கச்செய்தே தானே ஆணையிட்டுப் பேரேன் என்கிறானாயிற்று.

**[என்னெஞ்சு நிறையப் புகுந்தான்]** 'நிறைய' என்பது நெஞ்சிலே அந்வயிப்பதன்று; புகுந்தவனிடத்தே அந்வயிப்பது. என்னெஞ்சு நிறையும்படி புகுந்தானென்று பொருளன்று; என்னெஞ்சிலே புகுந்தான்; (எப்படி புகுந்தானென்னில்;) **நிறைய**—இதனால் தான் பூர்ணனும்படி புகுந்தான் என்கை. ... ... (2)

**பிடித்தேன் பிறவிகெடுத்தேன் பிணி சாரேன்***
**மடித்தேன் மனை வாழ்க்கையுள் நிற்பதோர்மாயையை***
**கொடிக் கோபுரமாடங்கள் சூழ் திருப்பேரான்***
**அடிச்சேர்வதெனக்கு எளிதாயினவாறே.** (3)

| | | | |
|---|---|---|---|
| கொடி கோபுரம் மாடங்கள் சூழ் திரு பேரான் | கொடிகளையுடைய கோபுரங்களாலும் மாடங்களாலும் சூழப்பட்ட திருப்பேர் நகரை உறைவிடமாகவுடைய பெருமானுடைய | பிடித்தேன் | அவன் திருவடிகளைப்பிடிக்கப் பெற்றேன்; |
| அடி சேர்வது | திருவடிகளைச் சேருகையானது | பிறவி கெடுத்தேன் | (அது அடியாக) ஸம்ஸாரம் தொலையப் பெற்றேன்; |
| எனக்கு எளிது ஆயின ஆறு | எனக்கு எளிதான விதம் என்னே!; | பிணி சாரேன் | பிணிகள் வந்து அணுகாவகை பெற்றேன்; |
| | | மனை வாழ்க்கையுள் | ஸம்ஸாரத்தில் |
| | | நிற்பது ஓர் மாயையை | நிற்கையாகிற அஜ்ஞானத்தை |
| | | மடித்தேன் | நிவ்ருத்தமாக்கிக்கொண்டேன் |

***—எம்பெருமான் நிர்ஹேதுகமாகத் தம்மோடே வந்து கலந்தபடியைச் சிந்தித்து 'இவன் திருவடி எனக்கு இப்படி எளிதானவாறு என்னே' என்று வியக்கிறார். **பிடித்தேன்**—எம்பெருமானை இனியொரு நாளும் பிரியாதபடி சிக்கனப்பிடித்தேன். **[பிறவி கெடுத்தேன்]** திறந்துகிடந்த வாசல்தோறும் நுழைந்து திரியும் ஜந்துபோலே இதுவரையில் எத்தனையோ யோனிகளில் நுழைந்து புறப்பட்ட யான் "புநரபி ஜநநம் புநரபி மரணம் புநரபி ஜநநீ ஜடரே சயநம்" என்னும்படியான நிலை இனி நேராதபடி செய்துகொண்டேன். **[பிணி சாரேன்]** பிறவியைக் கெடுத்த பின்பு, பிறவியைத் தொற்றிவரும் பிணிகளையும் கெடுத்தேனென்.

**[மனைவாழ்க்கையுள் நிற்பதோர்மாயையை மடித்தேன்]** அநாதிகாலந் தொடங்கி இன்றளவுஞ் செல்லுகிற இந்த ப்ரக்ருதி ஸம்பந்தத்தையும் நிவர்த்திப்பித்தேன். ஸம்ஸாரத்திலே நிற்கைக்கடியான மூலப்ரக்ருதியை உருவழித்தேனென்கை. இங்கே ஒரு ஐதிஹ்யமுள்ளது ஈட்டில்; "எம்பெருமானார் உலாவியருளுகிறவர் முடியப்போகாதே நடுவே மீண்டருள. எம்பார் கதவையொருச்சரித்து*திருமாலிருஞ் சோலையாகாதே திருவுள்ளத்திலோடுகிறது? என்ன; ஆம், அப்படியே யென்றருளிச்செய்தார்' என்பதாக. இதைச் சிறிது விவரிப்போம்;-*புக்த்வா சதபதம் கச்சேத்* [போஜனம் செய்தவுடனே நூறடி நடந்து உலாவவேண்டும்] என்று சாஸ்த்ரமாகையாலே; இதையநுஸரித்து எம்பெருமானார் பிக்ஷையானவுடனே மடத்திற்குள்ளே உலாவாநின்று அப்போது *திருமாலிருஞ்சோலை

வாய்மொழியை அநுஸந்தானம் செய்து கொண்டிருக்கையாலே இப்பாட்டில் **மடித்தேன்** என்றவிதற்குச் சேர, மேலே போகாமல் திரும்பியருளினர். இதைக் கதவின் புரையாலே எம்பார் கண்டு* அஹோ: பாதம் அஹிரேவ ஜாநாதி* என்கிற ரீதியில் தத்துவமறிந்து, இப்போது இன்ன திருவாய்மொழி யனுஸந்தானமன்றோ திருவுள்ளத்திலோடுகிறது! என்றாராம்; ஆம் என்று விடை யிறுத்தாராம் எம்பெருமானர்.

**கொடிக் கோபுர மாடங்கள் சூழ்திருப்பேரானடிச் சேர்வது எனக்கு எளிதாயின வாறே—!** கொடிகளணிந்த கோபுரங்களையும் மாடங்களையுமுடைத்தான திருப்பேர் நகரிலே நித்ய வாஸஞ்செய்தருளு மெம்பெருமானுடைய அடிசேருகையாகிற விது எனக்கு எளிதாயினவாறு என்னே!. இங்கே பரமபோக்யமான ஈட்டு ஸ்ரீஸூக்தி—"அறுகம்புல்லையிட்டுக் கண்ணைப் புதைத்துக்கொள், சாணகச் சாற்றைக்குடி, தலையைக் கீழே நடு, காலை மேலே பெடு என்று அருந்தேவைகளை சாஸ்த்ரம் சொல்லா நிற்க, எனக்கு இங்ஙனே யிருப்பதொரு மூலையடிவழி உண்டாவதே." என்று.

**திருப்பேரான்** என்றவிடத்து ஈட்டில் "திருப்பேரிலே நிற்கிறவன்" என்றருளிச் செய் திருப்பதைக் காண்பவர்கள் 'திருப்பேரிலே சயனத்திருக்கோலமன்றோ? நின்ற திருக்கோலமாக அருளிச் செய்தபடி யெங்ஙனே?' என்று சங்கிப்பர்கள். **நிற்கிறவன்** என்றது ஸ்தாவர ப்ரதிஷ்டையாகக் கிடப்பவன் என்ற பொருளிலே பணித்ததாகையாலே சங்கைக்கு இடமில்லை. ... ... ... ... ... (3)

**எளிதாயினவாறென்று என்கண்கள் களிப்ப***
**களிதாகியசிந்தையனாய்க் களிக்கின்றேன்***
**கிளி தரவிய சோலைகள் சூழ் திருப்பேரான்***
**தெளிதாகிய சேண்விசும்புதருவானே.** (4)

| | | | |
|---|---|---|---|
| கிளி தாவிய சோலைகள் சூழ் | கிளிகள் தாவும்படி செறிந்த சோலைகளாலே சூழப்பட்ட | என் கண்கள் | (விடாய்த்த) எனது கண்கள் |
| திரு பேரான் | திருப் பேர்நகரில் வாழுமெம்பெருமான், | எளிது ஆயின ஆறு என்று களிப்ப | இந்த எளிமைக்கு ஈடுபட்டுக் களித்ததாக |
| தெளிது ஆகிய | தெளிந்த நிலமான | | |
| சேண் விசும்பு | பரமாகாச மென்னும் திருநாட்டை | களிது ஆகிய சிந்தையன் ஆய் களிக்கின்றேன் | பரமானந்த சாலியான நெஞ்சையுடையேனாயினேன். |
| தருவான் | தருபவனாயிராநின்றான் (ஆனதுபற்றி) | | |

***—தமக்குத் திருநாட்டைக் கொடுத்தருள்பவனாயிராநின்ற எம்பெருமானுடைய படியை யநுஸந்தித்துத் தாம் களிக்கும்படியைப் பேசுகிறார்.

"கிளி தாவிய சோலைகள் சூழ்திருப்பேரான் தெளிதாகிய சேண் விசும்பு தருவான்" என்ற பின்னடிகளை முன்னம் யோஜித்துக்கொள்வது. *முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசுமவர்கள் கிளியோடொக்கச் சொல்லப்படுவர்கள்; அத்தகைய ஸத்புருஷர்கள் வாழுமிடமான திருப்பேர் நகரிலுறையும் பெருமான் *இருள் தருமா ஞாலம்போலன்றியே எப்போதும் தெளிவையே பண்ணக்கடவதான திருநாட்டை எனக்குத் தருவதாகத் துணிந்திருந்தான்; துர்லபமான விஷயம் நமக்கு இங்ஙனே எளிதானபடி என்னே! என்று, முன்பு விடாய்த்திருந்த எனது கண்கள் களித்தன; சிந்தையுங் களித்தது என்றாராயிற்று. ... ... ... ... (4)

வானே தருவான் எனக்கா யென்னோடொட்டி*
ஊனேய்குரம்பை யிதனுள் புகுந்து* இன்று
தானே தடுமாற்றவினைகள் தவிர்த்தான்*
தேனேய்பொழில் தென் திருப்பேர்நகரானே. (5)

| | | | |
|---|---|---|---|
| தேன் ஏய் பொழில் தென் திருப்பேர் நகரான் | வண்டுகள் செறிந்த சோலைகளையுடைய திருப்பேர் நகரிலுறையும் பெருமான் | ஊன் ஏய் குரம்பை இதனுள் | மாம்ஸளமான இந்த சரீரத்தினுள்ளே |
| எனக்கு வானே தருவான் | எனக்கு (இன்று) திருநாடு தந்தருள்பவனும் ஸங்கல்பித்துக்கொண்டு | இன்று தானே புகுந்து | இன்றுதானே வந்து புகுந்து |
| என்னோடு ஒட்டி | என்னோடே ப்ரதிஜ்ஞை பண்ணி | தடுமாற்றம் வினைகள் தவிர்த்தான் | தன்னைப் பிரிந்து தடுமாறுகைக்கடியான புண்யபாவங்களைப் போக்கியருளினான். |

***-திருப்பேர் நகரான் எனக்குத் திருநாடு தருவதாகச் சபதம்செய்து விரோதிகளையும் போக்கியருளினானென்கிறார். **வானே தருவானெனக்காய்**-எனக்கு வானே தருவானாய் என்று இயைத்துக்கொள்வது. என்னை இங்கே வைத்து, *தொண்டர்க்கமுதுண்ணச் சொன் மாலைகள் சொல்லுவிக்கும் காரியம் தலைக்கட்டுகையாலே இங்கு நின்றுங் கொண்டு போய்த் திருநாட்டிலே வைப்பதாகக் கருதினான். அநாதிகாலமாக ஸம்ஸாரியாய்ப் போந்த வெனக்கு நித்ய ஸூரிகளிருப்பைத் தருவானாக ஸங்கல்பித்தருளினான். **என்னோடு ஒட்டி**—என்னோடே சபதம்பண்ணி யென்றபடி. எவ்விதமான சபதமென்னில்; இன்று ஆழ்வார்க்குத் திருநாடு கொடுப்பதோ, அல்லது திருநாட்டுக்குத் தலைவனென்னும் பெயரை நானிழப்பதோ இரண்டத் தொன்று செய்யக்கடவேன் என்ற சபதமாகக் கொள்ளலாம்.

இவ்விடத்து இருபத்துநாலாயிரப்படியிலும் ஈடு முப்பத்தாறாயிரப்படியிலும் "*அராவணமராமம் வா* என்று என்னோடு ஸமயம்பண்ணி' என்கிற ஸ்ரீஸூக்திபுள்ளது. இதனால், கீழே முதற்பத்தில் *யானொட்டி யென்னுள்* என்கிறபாட்டில் *அத்யமே மரணம் வாபி தரணம் ஸாகரஸ்ய வா* என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தை யெடுத்துக்காட்டி "இற்றை முடிதல் கடத்தல் செய்யுமதுக்கு மேற்படவில்லை" என்று அருளிச்செய்திருந்த ஸ்ரீஸூக்தி பாடஸ்கலனத்தாலே "இத்தை முடித்தல் கடத்தல்" என்று விழுந்திட்டு விபரீதார்த்தப்ரத்யாயகமாய் விட்டதென்று. நாம் மிக விரிவாக நிருபணம் பண்ணியிருந்தது நன்றேயென்று ஸ்தாபிதமாயிற்று. எங்ஙனே யென்னில்; *அராவண மராமம் வா* என்ற இந்த ப்ரதிஜ்ஞையும் *அத்ய மே மரணம் வாபி தரணம் ஸாகரஸ்ய வா* என்ற அந்த ப்ரதிஜ்ஞையும் ஒத்திருக்க வேணுமென்பது சொல்லாமலே விளங்கும்' 'இராவணனையாவது தொலைக்கிறேன், அல்லது இராமனென்கிற நானாவது தொலைந்துபோகிறேன்' என்று இவ்விடத்து ப்ரமாணத்திற்குப் பொருளாவது போல, 'கடலையாவது கடக்கிறேன், அல்லது நானாவது முடிந்துபோகிறேன்' என்றே அவ்விடத்திற்குப் பொருளாவது தான் பொருத்தமென்பதை மத்யஸ்த த்ருஷ்டிகள் உணர்வார்கள்.

**ஊனேய் குரம்பை** இத்யாதியின் கருத்தாவது—ஆழ்வீர்! உம்மை இவ்வுடம்போடே கொண்டுபோவதாக விளம்பித்தோம்; ஆனாலும் உம்முடைய நிர்ப்பந்தத்தாலே இவ்வுடம்பை யொழியவே கொண்டுபோவதாக முடிந்தது; இனி ஆறியிருப்போமோ வென்று சொல்லி, மாம்ஸாதி மயமாய் ஹேயமான இந்த சரீரத்தினுள்ளே புகுந்து, தன்னைப் பிரிந்து தடுமாறுகைக் கடியான புண்ய பாபரூப கருமங்களைத் தானே தவிர்த்தருளினானென்கை. (5)

திருப்பேர்நகரான் திருமாலிருஞ்சோலை*
பொருப்பேயுறைகின்றபிரான் இன்றுவந்து*
இருப்பேனென்று என்னெஞ்சுநிறையப்புகுந்தான்*
விருப்பேபெற்று அமுதமுண்டுகளித்தேனே. (6)

| | | | |
|---|---|---|---|
| திருப்பேர் நகரான் | திருப்பேர் நகரிலே வர்த்திப்பவனும் | இருப்பேன் என்று | உம்மிடத்திலேயே யிருக்கக் கடவேனென்று சொல்லி |
| திருமாலிருஞ் சோலை பொருப்பே உறைகின்ற பிரான் | திருமாலிருஞ்சோலை மலையிலே நித்யவாஸம் பண்ணுமவனும் இப்படி பரமபோக்யமான பல தலங்களையுடையவனை எம்பெருமான் | என் நெஞ்சு நிறைய புகுந்தான் | என்னுள்ளம் பூர்ணமாகும்படி புகுந்தான்; |
| இன்று வந்து | இன்று என்பாலெழுந்தருளி | விருப்பே பெற்று | அவனுடைய அபிமானத்தைப் பெற்று |
| | | அமுதம் உண்டு களித்தேன் | அம்ருதபானம் பண்ணிக் களித்தவனாயினேன். |

***—எம்பெருமான் தனக்கு இருப்பிடமான கோயில்கள் பலபலவுண்டாயிருக்க ஓரிடமில்லாதாரைப் போலே என்னெஞ்சினுள்ளே வந்து புகுந்து க்ருத க்ருத்யனானானென்கிறார். திருப்பேர் நகரானென்றும் திருமாலிருஞ்சோலையுறைகின்ற பிரானென்றும் இரண்டு திவ்ய தேசங்களை யிங்குச் சொன்னது* சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே மதிட்கச்சியூரகமே...என்றோதப்படுமெல்லாத் திருப்பதிகளையுஞ் சொன்னபடி. இப்படி அளவுகடந்த தேச விசேஷங்களைத் தனக்கு இருப்பிடமாக வுடையவன், **இன்றுவந்து**-இப்படி வரவேணுமென்கிற நினைவு நேற்று இன்றியே யிருக்க இன்று வந்ததாகச் சொல்லுகையாலே நிர்ஹேதுகமாக வந்தமை தெரிவித்தபடி. வரும்போது 'இருப்பேன், இருப்பேன்' என்று சொல்லிக்கொண்டே வந்தானாயிற்று. பெருமாள் அரண்யத்திலே ஜடாயு மஹாராஜரைக் கண்டபோது இளையோனை நோக்கி ***இஹ வத்ஸ்யாமி ஸௌமித்ரே! ஸார்த்த மேதேந பக்ஷிணா*** என்று இவர் சிறகின் கீழே வர்த்திக்கப் பாரா நின்றோமென்றாப் போலே.

**என்னெஞ்சு நிறையப் புகுந்தான்**—'நம்முடைய ஹ்ருதயத்திலே இருக்கவேணுமென்று இவனாசைப்பட்டால் இருந்துபோகட்டுமே' என்று இசைவு காட்டாதிருந்த என்னெஞ்சிலே நிறையப் புகுந்தானென்கை. **விருப்பேபெற்று அமுதமுண்டு களித்தேன்**—கம்ஸ சிசுபாலாதிகளின் நெஞ்சிலும் எம்பெருமானிருப்பதுண்டு; அப்படியின்றிக்கே அபிமாந பஹுமானங்களோடே இருக்கப்பெற்றேனாதலால் இதுவே அம்ருதபானமாகப் பெற்றேனென்றவாறு. ... ... ... ... ... (6)

உண்டுகளித்தேற்கு உம்பரென்குறை?*மேலைத்
தொண்டுஉகளித்து அந்திதொழும் சொல்லுப்பெற்றேன்*
வண்டுகளிக்கும் பொழில் சூழ் திருப்பேரான்*
கண்டுகளிப்பக் கண்ணுள்நின்றகலானே. (7)

| | | | |
|---|---|---|---|
| வண்டு களிக்கும் பொழில் சூழ் | வண்டுகள் மதுவைப் பருகிக் களிக்கும்படியான சோலைகளாலே சூழப்பட்ட | உண்டுகளித்தேற்கு | இப்படிப்பட்ட அநுபவம் பெற்று மகிழ்ந்த எனக்கு |
| | | உம்பர் என் குறை | மேலுலகத்திலே சென்று அநுபவிக்க வேணுமென்கிற குறையொன்று உண்டோ? |
| திரு பேரான் | திருப்பேர் நகரில் வாழு மெம்பெருமான் | மேலைத் தொண்டு உகளித்து | மேலான கைங்கர்ய ரஸம் அதிசயித்து |
| கண்டு களிப்ப | தன்னை நான் அநவரதம் கண்டு களிக்குமாறு | அந்தி தொழும் சொல்லு பெற்றேன் | அதினுடைய சரமதசையிலே நம: என்று சொல்லுகிற சொல்லைச் சொல்லவும் பெற்றேன். |
| கண்ணுள் நின்று அகலான் | என்கண்ணுக்கு இலக்காகிவிட்டுப் பிரியாதிராநின்றான்; | | |

***–கீழ்ப்பாட்டில் ***களித்தேனே** யென்று களிப்பை ப்ரஸ்தாவித்தார்; அக்களிப்பை ஆர அமரப் பேசுகிறாரிப்பாட்டில். **உண்டு களித்தேற்கு உம்பர் என்குறை?**—இங்கிருந்தே இப்படிப்பட்ட அநுபவம் பெற்றுக் களிப்பதைவிட பரமபதாநுபவத்தில் என்ன விசேஷமுள்ளது? அதில் அபேக்ஷையுடையோமல்லோம் என்பது கருத்து. **மேலைத் தொண்டு உகளித்து**-மேலான தொண்டு—திருவாய்மொழி பாடுகை; அதனாலுண்டான உகப்பானது தலைமண்டையிட்டு (அதாவது) அதிசயித்து. **அந்திதொழுஞ் சொல்லுப் பெற்றேன்**-முமுக்ஷுப்படியில் "அந்திதொழுஞ் சொல்லென்கையாலே பலஞ்சொல்லிற்று" என்றருளிச் செய்தது இங்கே அநுஸந்தேயம். கைங்கர்யரஸம் அதிசயித்தால் அதினுடைய எல்லையான நிலைமையிலே சொல்லக் கடவதான தொழுஞ்சொல்-நமச்சப்தம்; இதுதான் முடிவான பேறு; அதனையும் இங்குப் பெற்றேன் என்றாராயிற்று, ****நம இத்யேவ வாதிந:.***

**[வண்டு களிக்கும் இத்யாதி.]** வண்டுகள் மதுபானம் பண்ணிக் களிக்கிற பொழில்களாலே சூழப்பட்ட திருப்பேர் நகரிலே வர்த்திக்கிற பெருமான் *உன்னை மெய்கொள்ளக் காண விரும்புமென் கண்களே* என்று விடாய்த்த எனது கண்கள் கண்டுகளிக்கும்படியாகக் கண்ணுக்கே இலக்காயிரா நின்றான்; நான் போகச் சொல்லிலும் கண்வட்டத்தில் நின்றும் அகலுகிறானல்லன். இப்படி அவனை யநுபவித்துக் களிக்கப்பெற்றவெனக்கு மேலொரு குறையுண்டோ? என்றதாயிற்று. ... ... ... (7)

**கண்ணுள்நின்றகலான் கருத்தின்கண்பெரியன்***
**எண்ணில் நுண்பொருள் ஏழிசையின் சுவைதானே***
**வண்ணநன்மணிமாடங்கள் சூழ் திருப்பேரான்***
**திண்ணமென்மனத்துப் புகுந்தான் செறிந்தின்றே.** (8)

| | | | |
|---|---|---|---|
| கண்ணுள் நின்று அகலான் | என் கண்ணைவிட்டு அகலாதிருக்கிறான்; | ஏழ் இசையின் சுவை | ஸப்த ஸ்வரங்களின் ரஸமே வடிவெடுத்தவன்; |
| கருத்தின் கண் பெரியன் | என்னைத் திருநாட்டுக்குக் கொண்டு போவதில் விசேஷமான பாரிப்பு உடையனாயிரா நின்றான்; | வண்ணம் நல் மணி மாடங்கள் சூழ் திருப் பேரான் | பலவகைப்பட்ட சிறந்த ரத்னங்களழுத்தின மாடங்கள் சூழ்ந்த திருப்பேர் நகரிலுறையும் பெருமான் |
| எண்ணில் நுண் பொருள் தானே | எண்ணப் புகுந்தால் எண்ணமுடியாத மிகவும் ஸூக்ஷ்மமான ஸ்வபாவமுடையவனே; | இன்று என் மனத்து செறிந்து புகுந்தான் | இன்று என்னெஞ்சிலே திடமாகப் புகுந்தான்; |
| | | திண்ணம் | இது ஸத்யம் |

***–பரமபோக்யனான திருப்பேர் நகரான் என்பக்கலிலே வ்யாமோஹமே வடிவெடுத்தவனாய் ஒரு நாளும் விட்டு நீங்கமாட்டாதானாய் என்னெஞ்சிலே வந்து புகுந்தானென்கிறார் **[கண்ணுள் நின்று அகலான்]** ***ஸதா பச்யந்தி ஸூரய:*** என்கிறபடியே ஸதாதர்சனம் பண்ணுவதற்கு இடமாக ஒரு திருநாடு இருப்பதாக நினையாதே இங்கேயே ஸதாதர்சனமாம்படி யிராநின்றான். **[கருத்தின்கண்பெரியன்]** கருத்தாவது மனோரதம்; அதில் பெரியன் என்றது—பெரிய பெரிய மனோரதங்களைப் பண்ணா நின்றானென்றபடி. தம்மைப் பரமபதத்தேறக் கொண்டு போவதிலும், ஆதிவாஹிகரை நியமிப்பதிலும், தான் முன்னே அந்தரங்கனாய்க் கொண்டுபோமதிலும் அவன் பாரிக்கிற பாரிப்பு தம்மாலெண்ணி முடிக்குந்தரமன்று என்றவாறு.

**[எண்ணில் நுண்பொருள்]** எத்தனை தூரம் ஆராய்ந்து பார்த்தாலும் இது புரிந்து கொள்ள முடியாத ஸூக்ஷ்ம விஷயமென்பது கருத்து. அவனுடைய பாரிப்பு நம்மால் வாய்கொண்டு சொல்லவொண்ணாத மாத்திரமன்று; நெஞ்சுக்கும் எட்டாதபடி கஹனமானது

என்கை, [ஏழிசையின் சுவைதானே] பாமரவஸிகன் என்னலாமத்தனை. ஸப்தஸ்வரங்களுக்கு மேற்பட போக்யமான வஸ்து இல்லை; அந்த ஸப்தஸ்வரங்களின் சுவையே வடிவெடுத்தவனென்று அவனுடைய ராவஸிக்யத்தைக் குலாவலாமேயொழிய ஆழ்வாரளவிலே அவன் கொண்ட பாரிப்புகளை நெஞ்சாலும் நினைக்கப்போகாது என்றதாயிற்று. ... ... (8)

இன்றென்னைப்பொருளாக்கித் தன்னையென்னுள்வைத்தான்*
அன்றென்னைப்புறம்போகப் புணர்த்ததென்செய்வான்*
குன்றென்னத்திகழ்மாடங்கள்சூழ் திருப்பேரான்*
ஒன்றெனக்கருள் செய்ய உணர்த்தலுற்றேனே. (9)

| | |
|---|---|
| என்னை இன்று பொருள் ஆக்கி | அநாதிகாலம் உபேக்ஷிக்கப் பட்டிருந்தவென்னை இன்று ஒரு வஸ்துவாகக் கொண்டு |
| தன்னை என்னுள் வைத்தான் | பரம போக்யனை தன்னை ஹேயமான என்னெஞ்சிலே தானே கொண்டுவைத்தான்; |
| | (இன்று இப்படிச்செய்தவனானவிவன்) |
| அன்று என்னை புறம்போக புணர்த்தது | அநாதிகாலம் நான்கைகழிந்து போம்படி என்னை உபேக்ஷித்திட்டு வைத்தது |
| என்செய்வான் | எதற்காக? |
| குன்று என்ன திகழ்மாடங்கள் சூழ் | குன்றுகளிவை யென்னலாம்படி விளங்குகின்ற மாடங்களினால் சூழப்பட்ட |
| திரு பேரான் | திருப்பேர் நகர்க்குத் தலைவனான எம்பெருமான் |
| ஒன்று | இத்தனை நாள் கைவிட்டிருந்ததற்கு ஹேது சொல்லுவதோ, இன்று கைக்கொண்டதற்கு ஹேது சொல்லுவதோ இரண்டிலொன்றை |
| எனக்கு அருள் செய்ய | எனக்கு அருளிச்செய்ய வேணுமென்று |
| உணர்த்தல் உற்றேன் | விஜ்ஞாபிக்கின்றேன். |

***—இப்பதிகத்திற்கு இதுதான் உயிரான பாட்டு அடியேனை இன்று இவ்வளவாக விஷயீகரிக்கைக்கும் முன்பு நெடுநாள் உபேக்ஷித்திருந்ததற்கும் காரணமருளிச்செய்யவேணுமென்று தமக்குண்டான ஜிஜ்ஞாஸையை வெளியிடுகிறாராயிற்று. எம்பெருமான் தம்மைத் திருநாட்டிலே கொண்டு போவதாக விரைகிறபடியைக் கண்டு 'இன்று என்னளவல்லாதபடி த்வரிக்கின்ற தேவரீர் இதற்கு முன்பு நெடுநாள் விட்டு ஆறியிருந்தபடி எங்ஙனே?' என்று அவன்றன்னைக் கேட்கிறார்.

கீழே *இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான்* என்றாரே; அப்படி எம்பெருமான் விரையத்தொடங்கின நாளை இப்பாட்டில் இன்று என்கிறார்; *கூவிக்கொள்ளுங்காலமின்னங்குறுகாதோ* என்றும், *கண்ணனே கடல்கடைந்தாய் உனகழற்கேவரும் பரிசு தண்ணவாதடியேனைப் பணி கண்டாய் சாமாறே* என்றும் தாம் கதறியழுத காலத்தை அன்று என்கிறார். அன்றிக்கே* மயர்வறமதிநலமருளினன்* என்று தம் வாயாற்பேசலாம்படி விஷயீகரிக்கப்பெற்ற நாள் தொடங்கியுள்ள காலத்தை இன்று என்றும், அதற்கு முற்பட்ட காலத்தை அன்று என்றுஞ் சொல்லுகிறார் என்பதும் பொருந்தும்.

ஆழ்வார் எம்பெருமானை நோக்கி இப்படி கேள்வி கேட்டாரே, இதற்கு எம்பெருமான் என்ன மறுமொழி கூறினான்? என்று நஞ்சீயர் பட்டரைக் கேட்டாராம்; அதற்கு பட்டர் அருளிச்செய்தாராம்—அவன் பதில்சொல்லுவதற்கு என்ன இருக்கிறது? 'இவர்தலையிலே ஒரு பழியை யேறிட்டு நெடுநாள் இழந்து கிடந்த நாம் என்ன சொல்லுவது!' என்று வெள்கி, காலாலே தரையைக் கீறி நிற்பதுதவிர வேறுண்டோ? என்று.

எம்பெருமான் பதில் சொல்லுவதாயிருந்தால் எவ்விதமாகச் சொல்லலாம்? என்று பார்ப்போம். ஆழ்வீர்! முன்பு உமக்கு ருசியில்லாமையாலே நாம் உபேக்ஷித்திருந்தோம்; இன்று நீர் ருசி பெற்று ஸாதநாநுஷ்டானமும் பண்ணினீராகையாலே ஆதரம் செய்தோம்; என்று ஒரு பதில் சொல்லலாம்; ஆனால் அப்படி சொல்வதற்கு இங்கு விஷயமில்லை. இவர் தலையிலே ஒரு ஸாதனாநுஷ்டானம் காணாமையாலே. ஆனால் வேறு பதில் சொல்லலாம்— “என்னுடைய ப்ரவ்ருத்திக்கு விரோதியான ஸ்வப்ரவ்ருத்தியிலே நீர் இதுவரையில் ஊன்றியிருந்தீர்; அது என்னை விலக்கினபடியாயிருந்தது; விலக்காமையை எதிர்பார்த்திருந்தேன்; அது இப்போது கிடைத்தபடியாலே உபேக்ஷித்தேன்; அன்றியும், என்னைத் தவிர்த்த மற்றவற்றில் ஸாதநத்வ புத்தி பண்ணிப் போந்தீர் இதுவரையில்; இப்போது அது தவிர்ந்து என்னையே உபாயமாகக் கொண்டீர்; ஆதலால் ஆதரிக்கிறேன்” என்று சொல்லலாம். ஏன் இந்த பதிலை எம்பெருமான் சொல்லவில்லையென்னில்; இதுவொரு பதிலாகுமோ? அசட்டுத்தனமான பதிலன்றோவிது; சைதந்ய ப்ரயுக்தமாய் வருகிற அத்வேஷபர்யாயமான ருசியை ஸாதநமென்னவொண்ணுமோ? உபாயத்வம் தன் தலையிலே கிடக்க ஆழ்வாருடையதிலே உபாயத்வத்தையேறிட்டுச் சொல்ல எப்படி முடியும்! நம்முடைய ஸ்வாதந்த்ரியத்தாலேயே உபேக்ஷித்திருந்தோம், ஸ்வாதந்த்ரியத்தாலேயே ஆதரிக்கிறோம்; இதை ஆழ்வார் நன்கு தெரிந்து கொண்டு கேள்வி கேட்கிறாராகையாலே இவர்க்கு நாம் ஒரு பதிலும் சொல்லிப் பிழைக்க முடியாதென்று பேசாதே கிடந்தான்.

ஆசார்ய ஹ்ருதயத்தில் இரண்டாவது ப்ரகரணத்தில் (102) “இடகிலேன் நோன்பறிவிலேன் கிற்பன் கிழ்நாள்கொள்கையாலே ஸாதநத்ரய பூர்வாப்யாஸ[illegible]” என்று தொடங்கி (113) “வரவாறில்லை வெறிதேயன்றருளிட்டவின் [illegible] வாற்றாதலென்கிற ஸுக்ருத மொழியைக் கற்பிக்கலாவதில்லை” என்கிற சூர்ணையளவும்; மேலே நான்காம் ப்ரகரணத்தில் (228) “இன்று அஹேதுகமாக ஆதரிக்கக் கண்டு அகாண்யமாகக் கேட்டு சொல்லென்று மடியைப் பிடிக்க............இதுவும் திருக்காமெண்ணு கவிழ்ந்து நிற்க” என்றருளிச் செய்ததும் மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தோடே நம்முடைய விசேஷ விவரணங்களோடும் இங்கே அநுஸந்தேயம். *நாஸௌ புருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந* என்றவனிறே அவன்தான். (9)

உற்றேன்உகந்துபணிசெய்து உனபாதம்
பெற்றேன்* ஈதேயின்னம்வேண்டுவதெந்தாய்*
கற்றார்மறைவாணர்கள்வாழ் திருப்பேராற்கு*
அற்றாரடியார் தமக்கு அல்லல்நில்லாவே, (10)

எந்தாய்—எம்பெருமானே!
உற்றேன்—(உன் திருவடிகளைக்) கிட்டப்பெற்றேன்;
உகந்து பணி செய்து—திருவாய்மொழி பாடுகையாகிற கைங்கர்யத்தைப் ப்ரீதியோடு செய்து
உன பாதம் பெற்றேன்—உன் திருவடிகளை அணுகினவனானேன்;
ஈதே இன்னம் வேண்டுவது—இவ்வநுபவமே நித்யாபேக்ஷிதம்;
கற்றார் மறைவாணர்கள்—வேதங்களைக் கொண்டு வாழ்பவர்களாயுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள்
வாழ்—வாழுமிடமான
திருப்பேராற்கு—திருப்பேர் நகரிலே உறையும் பெருமானுக்கு
அற்றார்—அற்றுத் தீர்ந்தவர்களான
அடியார் தமக்கு—பாகவதர்களுக்கு
அல்லல் நில்லாவே—அல்லல் விரோதிகள் நில்லாது போம்,

[illegible]

| | | | |
|---|---|---|---|
| அல்லல் இல்லா | துக்கங்களானவை தானே விட்டுப் போகுமிடமாய் | சொல்ஆர் தமிழ் ஆயிரத்துள் இவை பத்தும் வல்லார் | தமிழ்ச்சொல் நிரம்பிய ஆயிரத்தினுள் இப்பதிகத்தைக் கற்கவல்லவர்களான |
| நீள் வயல் சூழ் | பெருத்த வயல்களாலே சூழப் பட்டதான | | |
| திருப்பேர் மேல் | திருப்பேர் நகர் விஷயமாக | தொண்டர் | பாகவதர்களானவர்கள் |
| நல்லார் பலர் வாழ் குருகூர்சடகோபன் | நல்லார் நவில் குருகூர் நகரரான ஆழ்வாருடையதான | ஆள்வது | ஆளுமிடம் |
| | | சூழ்பொன் விசும்பு | பரமபதமாகும். |

***—இத் திருவாய்மொழி கற்கைக்குப் பரமபத ஸாம்ராஜ்யமே பலமென்றருளிச் செய்கிறார். திருப்பேர் நகர்க்கு 'நீள்வயல்சூழ்' என்பது போலே 'இல்லாவல்லல்' என்பதும் ஒரு விசேஷணமாயிருக்கிறது. துக்கங்களானவை 'இது நமக்கு உறைவிடமன்று' என்று தானேவிட்டு ஓடிப்போம்படியான இடமாம் திருப்பேர் நகர். அப்படிப்பட்ட பெருமை வாய்ந்த தலத்தையுத்தேசித்து ஆழ்வாரருளிச்செய்த இப்பதிகம் வல்லார் பாவரோ அவர்களிட்டது சட்டமாயிருக்கும் திருநாடு என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறாராயிற்று. (11)

**பத்தாம்பத்து எட்டாந்திருவாய்மொழி திவ்யார்த்ததீபிகை முற்றிற்று.**

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பத்தாம்பத்து—ஒன்பதாந் திருவாய்மொழி—சூழ்விசும்பணிமுகில்

கீழ்த் திருவாய்மொழியில் * இன்றென்னைப் பொருளாக்கித் தன்னையென்னுள் வைத்தான், அன்றென்னைப் புறம்போகப் புணர்த்ததென்செய்வான்?* என்று எம்பெருமானை மடிபிடித்துக் கேள்வி கேட்டாராழ்வார்; அதற்கு ஹேது தன்னுடைய நிரங்குச ஸ்வாதந்திரியமொழிய வேறொன்றில்லையென்று ஆழ்வாரும் நன்கறிந்தவர், எம்பெருமானும் நன்கறிந்தவன். ஆகவே 'ஆழ்வீர்! அன்று உபேக்ஷித்திருந்ததற்கும ஸ்வாதந்திரியமே காரணம், இன்று ஆதரிப்பதற்கும் ஸ்வாதந்திரியமேதான் காரணம்' என்று பதில் சொல்ல வேண்டும். தான் பரமகாருணிகனாயிருந்து வைத்து இங்ஙனே பதில்சொல்லத் தகாததனால் ஒரு வகையான உத்தரமுஞ் சொல்லாதே தலைகுனிந்து நின்றான். ஆழ்வாரைப் பரமபதத்தேறக் கொண்டுபோக விரைவுகொண்ட தான் இப்படி ஆழ்வாருடைய கேள்விக்கு பதில் சொல்லமாட்டாமல் வெள்கி நிற்கிற நிலையை மறைப்பதற்காக ஒருவழி பண்ணினான்; கலியாணங்களில் சடங்கு காட்டும் உபாத்யாயர்கள் சொல்லவேண்டிய மந்த்ரம் தோன்றவிட்டாலும், *மாங்கல்ய தந்துநாநேந மம ஜீவநஹேதுநா, பூமௌ தத்தேந பிண்டேந த்ருப்தா யாந்து பராம் கதிம்* என்னுமாபோலே சுபமந்த்ரமாரம்பித்து அசுபமந்த்ரம் சொல்லி முடிக்கும்படியாக நேர்ந்துவிட்டாலும் மேளதாளங்களைக் கொட்டச்சொல்லி வாத்யகோஷத்தாலே அத்தை மறைத்து விடுமாபோலே இப்போது நிருத்தரனானதாலும் மேகஸமுத்ர பேரீதகாஹள சங்க ஆசிஸ் ஸ்துதி கோலாஹலங்களைச் செய்தான்;

அதாவது, * சூழ்விசும்பணி முகில் தூரியம் முழக்கின ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின" என்று,ராஜகுமாரர் போம்போது மங்களவாத்யகோஷம்பண்ணுவாரைப்போலேபரம

பதத்துக்குப் போமவர்களைக் கண்ட ப்ரீதியாலே முழங்குவது கோஷிப்பதாக நிற்கும் மேக ஸமுத்ரங்களாகிற பேரிகளின் கோலாஹலத்தை யுண்டு பண்ணினான்; கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்* என்கிற கீதங்களைச் செவிப்படுத்தினான்; *காளங்கள் வலம்புரி கலந்தெங்கு மிசைத்தனர்* என்கிற காஹள சங்கங்களினுடைய முழக்கத்தை மூட்டினான்; *வாளொண்கண் மடந்தையர் வாழ்த்தினர்* என்கிற ஆசீஸ்ஸின் ஆரவாரத்தைக் கிளப்பினான்; *தொடர்ந்தெங்கும் தோத்திரஞ் சொல்லினர்*என் கோலாஹலங்களைப் பிறப்பித்தான்.

ஆக இப்படிப்பட்ட கோலாஹலங்களை விளைவித்த மாத்திரமேயன்றிக்கே, அர்ச்சிராதி கதியையும் ஆதிவாஹிக ஸத்காரத்தையும் (பரமபத) திவ்ய தேசப்ராப்தியையும் அங்குள்ளாருடைய பஹுமானத்தையும் ஆனந்தமயமான ஆஸ்தானத்திலிருப்பையும் ஸ்வ சரணகமல ப்ராப்தியையும் பெற்றாராகப் பேசும்படியும் பண்ணிவைத்தான். அதெல்லாம் பேசப்படுகிறது இத்திருவாய்மொழியில்.

இப்பதிகத்திற்கு ஆறாயிரப்படியவதாரிகை—"இப்படி நிர்ஹேதுகமாக எம்பெருமானோடே ஸம்ச்லிஷ்டரான ஆழ்வார் தாம் திருநாட்டேற வெழுந்தருளும்படியையும், தாம் எழுந்தருளும்போது ஸர்வலோகங்களும் தம்மைக் கொண்டாடும்படியையும் திருவுள்ளத்தாலே ப்ரத்யக்ஷீகரித்து அந்யாபதேசத்தாலே பேசுகிறார்" என்றுள்ளது. மகள் பாசுரமாகவும் தாய் பாசுரமாகவும் தோழி பாசுரமாகவும் பேசினால் அந்யாபதேச மென்னலாம்; இங்கு அப்படியன்றிக்கேயிருக்க "அந்யாபதேசத்தாலே பேசுகிறார்" என்றருளிச் செய்தது எங்ஙனே? என்று சிலர் சங்கிக்கக்கூடும். இதற்கு ஸமாதானம் ஈட்டிலேயுள்ளது; "தமக்கு அவன் பண்ணிக்கொடுக்க பேற்றை ஸ்ரீ வைஷ்ணவர்களெல்லாரும் பெற்றார்களாகப் பேசினது அந்யாபதேசம்" என்று. இப்பதிகத்தில் *நாரணன் தமரைக் கண்டுகந்தே* என்று சில ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அர்ச்சிராதிகதியும், ஸத்காரங்களும் கிடைத்ததாக வைத்துச் சொல்லுகிற முகத்தால் தமக்குக் கிடைக்கப்போகிற பேற்றைப் பேசுகிறாராகையாலே அந்யாபதேசப்ரகாரமென்று அறியத்தக்கது. இங்குள்ள ஸகல ஸ்ரீ வைஷ்ணவர்களும் 'ஆழ்வார் பெற்றபேறு நமக்கும் தப்பாது' என்று விச்வஸித்திருக்கைக்காக இப்படியருளிச் செய்தபடியாம்.

சூழ்விசும்பணிமுகில் தூரியம்முழக்கின*
ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின*
ஏழ்பொழிலும் வளமேந்தியவென்னப்பன்*
வாழ்புகழ்நாரணன் தமரைக் கண்டுகந்தே. (1)

| | | | |
|---|---|---|---|
| என் அப்பன் | அஸ்மத் ஸ்வாமியாய் | ஆழ் கடல் | ஆழமான கடல்கள் |
| வாழ் புகழ் | நித்ய கீர்த்தியுக்தனான | அலை திரை | அலைந்து வருகிற |
| நாரணன் | ஸ்ரீமந் நாராயணனுடைய | கை எடுத்து | கையாகக் கொண்டு |
| தமரை | அடியார்களை | ஆடின | கூத்தாடின; |
| கண்டு உகந்து | வரக்கண்டு களித்து | ஏழ் பொழிலும் | ஸப்த த்வீபங்களும் |
| சூழ் விசும்பு | எங்கும் பரந்த ஆகாசத்திலே | வளம் ஏந்தி | உபஹாரங்களைக் கை யேந்தின. |
| அணி முகில் | அழகிய மேகங்கள் | | |
| தூரியம்முழக்கின | வாத்ய கோஷம் செய்வன போன்றிருந்தன; | | |

***—திருநாட்டுக்குப் புறப்படுகிற ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்ட உகப்பின் மிகுதியால் ஸ்தாவரஜங்கமங்களுக்கு உண்டான வேறுபாட்டை யருளிச் செய்கிறார். தமக்கான

பேறுதன்னை இங்ஙனே அசலிட்டுச் சொல்லுகிறபடி. எங்குஞ் சூழ்ந்த ஆகாசப்பரப்படங்கலும் ஆபரணம் போன்று விளங்குகின்ற மேகங்களின் முழக்கம் மங்களவாத்ய கோஷம்போல் செவிப்பட்டது. ஆழ்ந்த கடல்களானவை அலையா நின்றுள்ள திரைகளாகிற கைகளையெடுத்துக் கூத்தாடின. கீழே சொன்ன மங்களவாத்ய கோஷத்திற்குச் சேர இந்த நர்த்தனமும் மங்கலமாகக் கூடிற்றென்கை. ஸப்தத்வீபங்களும் புதுக்கணித்தன; (அல்லது) உபஹாரங்களை ஏந்தி நின்றன. இதெல்லாம் யாரைக் கண்டென்ன; [என்னப்பன் வாழ் புகழ் நாரணன்தமரைக் கண்டுகந்தேஸ்ரீ வைகுண்டத்திற்கு வரப் புறப்பட்ட மஹாபாகவதர்களைக்கண்டு. இது ஒருவருடைய கட்டளைக்குக் கட்டுப்பட்டுச் செய்ததன்று; ப்ரீதி உள்ளடங்காமற் செய்தது என்பதைக் காட்டும் **உகந்து** என்பது.

**நாரணன்தமரைக்கண்டுகந்து நன்னீர் முகில்***
**பூரண பொற்குடம் பூரித்ததுயர் விண்ணில்***
**நீரணி கடல்கள் நின்றார்த்தன* நெடுவரைத்**
**தோரணம் நிரைத்து எங்கும்தொழுதனருலகே.** (2)

| | | | |
|---|---|---|---|
| நாரணன் தமரை கண்டு | பாகவதர்களைக் கண்டு | நீர் அணிகடல்கள் | நீரை வஹிக்கிற கடல்களானவை |
| நல் நீர் முகில் | நல்ல தீர்த்தம் நிறைந்த மேகமானது | நின்று ஆர்த்தன | நிலைநின்று கோஷித்தன; |
| உகந்து | மகிழ்ந்து | உலகு | அந்தந்த லோகங்களிலுள்ளார் |
| உயர் விண்ணில் | உயர்ந்த ஆகாசத்திலே | நெடு வரை தோரணம் நிரைத்து | பெரியமலைகளைத் தோரணங்களாக ஒழுங்குபடுத்தி |
| பூரணம் பொன் குடம் பூரித்தது | பூர்ண கும்பம் நிறைத்துவைத்தாற் போன்றிருந்தது; | எங்கும் தொழுதனர். | எங்கும் தொழுது கொண்டிருந்தார்கள். |

***மேலுண்டான லோகங்கள் பண்ணின ஸத்காரங்களை யருளிச் செய்கிறாரிதில்; நல்ல தீர்த்தம் நிரம்பிய மேகங்களானவை நாராயணன்தமரைக் கண்டவுகப்பாலே உயர்ந்த ஆகாசத்திலே பூர்ண கும்பங்களாக அமைந்தன. கீழ்ப்பாட்டிலே *சூழ்விசும்பணி முகில் தூரியமுழக்கினவென்று சொல்லியிருக்கச் செய்தேயும் அந்த ஒரு கிஞ்சித்காரத்தளவிலே பர்யாப்தி பெறாமல் பூர்ண கும்பமாகுகையாகிற கிஞ்சித்காரமும் பண்ணின போலும். "ஆகாசசரரான தேவர்களாலே ஆகாசமெல்லாம் பூர்ண கும்பம் வைக்கப்பட்டதென்றுமாம்" என்பது ஈடு.

**நீரணி கடல்கள் நின்று ஆர்த்தன**—நீரணிந்த கடல்களானவை ஒருகால் ஆடினோமே யென்றிராமல் ஹர்ஷத்தாலே நிரந்தரமாக ஆர்த்துக்கொண்டன. [**நெடுவரை** யித்யாதி.] அந்தந்த லோகங்களிலுள்ளார் பெரியமலைபோலேயிருந்துள்ள தோரண ஸ்தம்பங்களை நட்டுத் தாங்களும் தொழுதார்கள். **உலகு** என்றது உலகர் என்றபடி; உயர்ந்தார் என்று பொருள். (2)

... ... ...

**தொழுதனருலகர்கள் தூபநன்மலர் மழை**
**பொழிவனர்* பூமியன்றளந்தவன் தமர்முன்னே***
**எழுமினென்று இருமருங்கிசைத்தனர் முனிவர்கள்***
**வழியிதுவைகுந்தற்கு என்று வந்தெதிரே.** (3)

| | | | |
|---|---|---|---|
| அன்று | முன்பொருகால் | தூபம் | தூபம் ஸமர்ப்பிப்பதோடு |
| பூமி அளந்தவன் தமர் முன்னே | பூமியை அளந்துகொண்ட பகவானது அடியார்களின் முன்னிலையிலே | நல் மலர் மழை பொழிவனர் | நன்றான புஷ்பவர்ஷத்தைப் பொழிகின்றவர்களாய்க் கொண்டு |

| | |
|---|---|
| உலர்கள் | அந்தந்த லோகங்களிலுள்ளவர்கள் |
| தொழுதனர் | தொழுதார்கள்; |
| முனிவர்கள் | ஆங்காங்குள்ள முனிவர்கள் (தாங்கள் மௌனமாயிருக்கும் விரதத்தைத் தவிர்ந்து) |
| வைகுந்தர்க்கு | 'ஸ்ரீவைகுண்டத்தை நோக்கிப் போமவர்களுக்கு |
| வழி இது என்று | இதுதான் வழி என்று சொல்லி |
| எதிரே வந்து | அபிமுகர்களாக வந்து |
| எழுமின் என்று | எழுந்தருளவேணும் எழுந்தருளவேணுமென்று எச்சரிக்கையிட்டு |
| இருமருங்கு இசைத்தனர் | இருபக்கங்களிலும் சொன்னார்கள். |

***ஆதிவாஹிக லோகங்களென்று சிலவுண்டு; வழிநடத்துகிறவர்களாமவர்கள்; அவர்கள் எதிரே வந்து பூமாரி பொழிந்து கொண்டாடும்படியை யருளிச்செய்கிறார். **உலகர்கள் தொழுதனர்** — இங்குப் பொதுவாக உலகர்களென்றது ஆதிவாஹிக தேசங்களிலுள்ளார்களைச் சொல்லும். அவர்கள் கைபடைத்த பயன் பெற்றோமென்று தொழுது நின்றார்கள்; அவ்வளவோடு நில்லாமல் தூபத்தையும் நல்ல மலர் மழையையும் ப்ரயோகித்துத் தொழுதார்கள். என்னபாசுரஞ் சொல்லிக்கொண்டு தொழுதார்களென்னில்; [**பூமியன்றளந்தவன் தமர்முன்னே**] 'எம்பெருமான் உலகளந்தருளின செயலுக்குத்தோற்று அடிமைப்பட்டவர்களன்றோ இவர்கள் என்று சொல்லிக்கொண்டே தொழுதார்களாயிற்று. அங்குள்ள முனிவர்களும் இரண்டருகும் நின்றுகொண்டு 'இங்கே யெழுந்தருளவேணும், இங்கே யெழுந்தருளவேணும்' என்று நல்வரவு கூறி உபசரித்தார்கள்; பரமபதம் போவார்க்கு இதுவே வழியென்று எதிரே வந்து சொன்னார்கள். ... ... .... (3)

எதிரெதிரிமையவர் இருப்பிடம் வகுத்தனர்*
கதிரவரவரவர் கைநிரை காட்டினர்*
அதிர் குரல் முரசங்கள் அலைகடல் முழக்கொத்த*
மதுவிரிதுழாய் முடி மாதவன் தமர்க்கே. (4)

| | |
|---|---|
| மது விரி துழாய் முடி | தேன் பெருகுகின்ற திருத்துழாயைத் திருமுடியிலே யுடைய |
| மாதவன் | திருமாலினது |
| தமர்க்கு | அடியாரான பாகவதர்களுக்கு |
| இமையவர் | தேவர்கள் |
| எதிர் எதிர் | இவர்கள் போகிறவழிக்கு முன்னே |
| இருப்பு இடம் வகுத்தனர் | தங்குமிடங்களைச் சமைத்தார்கள்; |
| கதிரவர் | த்வாதசாதித்யர்களும் |
| அவர் அவர் | மற்றுமுள்ளவர்களும் ஆதிவாஹிக கணங்களெல்லாம் |
| கை நிரை காட்டினர் | பார்த்தருளீர்! பார்த்தருளீர்!! என்று கைகாட்டிக் கொண்டே சென்றார்கள்; |
| அதிர் குரல் | அதிருகிற முழக்கத்தையுடைய |
| முரசங்கள் | பேரிகளானவை |
| அலைகடல் முழக்கு ஒத்த | அலையெறிகின்ற ஸமுத்ரகர்ஜனை போன்றிருந்தன. |

***மேலுலகங்களில் தேவர்கள், இவர்கள் போகிற வழிகளிலே தங்குகைக்குத் தோப்புக்கள் சமைத்தும் வாத்ய கோஷம் முதலானவற்றைப் பண்ணியும் கொண்டாடும்படியைக் கூறுகிறார். இவர்கள் இங்கே தங்கிப் போவர்களோ! இங்கே தங்கிப்போவர்களோ!' என்னும் நசையாலே பார்த்தவிடமெங்கும் தேவர்கள் தோப்புச் சமைத்தார்கள். போகிறவர்கள் அங்கே தங்கிப் போகாமற் போனாலும் தங்களுடைய ஸ்வரூபஸித்திக்காகக் கிஞ்சித்கரிக்கவேணுமே. "ராஜாக்கள் ஒருகால் கண்டு சிரித்து 'அழகிது' என்று போகைக்காக மானவி சமைப்பாரைப்போலே' என்பது ஈடு. (மானவி யென்றது மஹாநவமி யென்றபடி. மஹாநவமி யுத்ஸவக் காட்சியை மானவியென்று இலக்கணையாற் சொல்லுகிறபடி.)

**கதிரவரவரவர் கைந்நிரைகாட்டினர்**-ஆதித்யர்கள் நிலைவிளக்குப்போலே 'இங்ஙனே யெழுந்தருள்க, இங்ஙனே யெழுந்தருள்க, பார்த்தருள்க' பார்த்தருள்க, என்று கைகளை நிரையே காட்டினார்கள். அர்ச்சிராதிகளான ஆதிவாஹிக கணங்களைச் சொன்னதாகவுமாம். [**அதிர் குரல் முரசங்கள் அலைகடல் முழக்கொத்த**] அதிரா நின்றுள்ள தொனியையுடைய முரஜவாத்யங்கள் அலையெறிகின்ற கடல்போலே முழங்கின. இப்படிப்பட்ட ஸத்காரங்கள் நடை பெறுவது யாவர்க்கு? என்னில்; **மதுவிரி துழாய் முடி மாதவன் தமர்க்கே**—எம்பெருமானுடைய திவ்யாலங்காரங்களிலே யீடுபட்டவர்களும், பிராட்டி முன்னாகப் பணிந்தவர்களுமான ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு.

இவ்விடத்து நம்பிள்ளை யீட்டிலே அற்புதமான வொரு ஸ்ரீஸூக்தியுள்ளது;—"இங்கே வைஷ்ணவர்களென்பதுவே ஹேதுவாகப் பங்கு பெறாதே திரியுண்ட வைஷ்ணவர்களை அங்குள்ளார் எதிர்கொண்டு இருப்பிடங்கள் கொடுக்கப்படுகிறபடி" என்று. அதாவது-திருநாட்டிலே இப்படிப்பட்ட ஸத்காரம் பெறும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் இந்த நாட்டில் வர்த்திக்கிற காலத்திலே இங்குள்ளவர்களால் ஒரு ஸத்காரமும் பெறாதே தாடு திரஸ்காரமும் பெறுகிறார்களேயென்று திருவுள்ளம் நொந்து அருளிச் செய்தபடி. இதற்காக ஒரு இதிஹாஸமுமருளிச் செய்கிறார்—"மிளகாழ்வான் படைவீட்டிலே யகரத்துக்குச் செல்ல 'நீ ஆந்தாளிகன், உனக்குப் பங்கில்லை' என்ன, 'நன்மையில் குறையுண்டாய்ச் சொல்லுகிறகோளோ? அன்றே' என்ன, 'நன்மையில் குறையில்லை, இதிறேதெது' என்ன 'நம் நெஞ்சில் இல்லையாகிலும் இவர்கள் வைஷ்ணவர்களென்று கைவிடப் பெற்றோமிறே' என்றுபுடைவையை முடிந்து எறட்டுக் கூத்தாடினான்" என்று. (இதன் கருத்தாவது)—மிளகாழ்வானென்கிற ஸ்ரீ வைஷ்ணவர், அரசன் வித்வான்களுக்கெல்லாம் க்ராமபூமிகள் வழங்குகிறானென்று கேள்விப்பட்டு, தாமும் வித்வானாகையாலே தமக்கும் அவை கிடைக்கக்கூடுமென்றெண்ணி அவ்வரசனிடம் சென்றார்; அரசன் வீரசைவனாகையாலே இவர்க்கு ஒன்றும் தரமாட்டேனென்றான்; 'ஏன் எனக்குத் தரமாட்டேனென்கிறாய்? எனக்குத் தர்க்கம் தெரியாதா? வியாகரணம் தெரியாதா? மீமாம்ஸை தெரியாதா? எந்த சாஸ்த்ரத்தில் வேணுமானாலும் பரீக்ஷை செய்துகொள்ளலாமே' என்றார். அதற்கு அரசன் 'ஐய! உமக்குப் பாண்டித்யத்தில் குறையொன்றும் நினைத்திலேன்; நீர் மஹாவித்வானென்பதறிவேன்; ஆனால் நீர் வைஷ்ணவரானமையாலே தரமாட்டேன்' என்றான். அதுகேட்டு மிளகாழ்வான் 'உண்மையில் நமக்கு வைஷ்ணவத்வம் இல்லையாகிலும் இவனுடைய எண்ணத்தினாலாவது நமக்கு வைஷ்ணவத்வமுண்டாகப் பெற்றோமே!' என்று ஆனந்தக் கூத்தடித்து க்ராமபூமிகள் பெற்றதற்கு மேற்பட மகிழ்ந்தாராம். இதனால் ப்ராக்ருதர்கள் வைஷ்ணவனென்று திரஸ்கரிப்பதும் நன்றேயென்று காட்டினபடி. இராவணன் *த்வாம் து திக் குலபாம்ஸநம் *என்று சொல்லி கர்ஹித்ததையே விபீஷணாழ்வான் சிறப்பாகக் கொண்டானிறே. ... ... (4)

மாதவன் தமரென்று வாசலில் வானவர்*
போதுமின் எமதிடம் புகுதுக வென்றலும்*
கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்*
வேதநல்வாயவர் வேள்வியுள் மடுத்தே. (5)

| | | | |
|---|---|---|---|
| வானவர் | வருணன் இந்திரன் பிரஜாபதி ஆகிய தேவர்கள் | மாதவன் தமர் என்று | 'இவர்கள் பரமபாகவதர்கள் என்று சொல்லி ஆதரித்து |
| வாசலில் | தம்தம் ஸ்தானங்களின் வாசல்களிலே வந்து | போதுமின் | 'இங்ஙனே எழுந்தருளுங்கள்,' |

| | | | |
|---|---|---|---|
| எமது இடம் புகுதுக | "எங்களது அதிகார ஸ்தலங்களிலே பிரவேசியுங்கள்" | வேள்வி உள் மடுத்து | தாங்கள் செய்த தேவ பூஜைகளின் பலன்களை ஸமர்ப்பிக்க |
| என்றலும் | என்று சொன்னவாறே | கின்னரர் கெருடர்கள் | கின்னரர்களும் கருடர்களும் |
| வேதம் நல் வாயவர் | (மேலுலகங்களிலே) வைதிகராயுள்ளவர்கள் | கீதங்கள் பாடினர் | கீதங்களைப் பாடினார்கள். |

***வாசலில் வானவரென்றது அர்ச்சிராதி மார்க்கத்திலே தலைநின்ற வருண-இந்த்ர-ப்ரஜாபதிகளை; அவர்கள் மாதவன் தமரென்று கொண்டாடினார்களாம்-இவர்கள் பிராட்டி புருஷகாரமாக ஆச்ரயிக்க அந்தப்புரபரிகரபூதர்களென்று சொல்லிக் கொண்டாடினார்களாம். போதுமின் எமதிடம் புகுதுக—'இங்கனே யெழுந்தருளவேணும், எங்களதிகாரங்களைக் கைக்கொள்ளவேணும்' என்று பிரார்த்தித்தார்களாம். அப்படி அவர்கள் ப்ரார்த்திக்கிறவளவிலே கின்னரர்களும் கருடர்களும் பாட்டுக்களைப் பாடினார்கள்; கின்னர தேசமென்றும் கருடதேசமென்றும் அங்கே சில நாடுகளுண்டு; அந்நாடுகளிலுள்ளார் பாடினார்களென்றபடி. [வேதநல்வாயவர் வேள்வியுள்மடுத்தே] மேலுலகங்களில் வைதிகர்களாய்க்கொண்டு ஸமாராதனம் பண்ணுமவர்கள் தங்கள் ஸமாராதன பலன்களை இவர்களது திருவடிகளிலே ஸமர்ப்பித்தார்கள். முக்திக்குச் செல்லுகிறவிவர்கள் எதையும் விரும்பாமற் சென்றாலும் தங்கள் தங்களதிகாரங்களைக் கொடுப்பாரும் பாடுவாரும் யாகபலன்களை ஸமர்ப்பிப்பாருமாய் நிற்பது அவரவர்கள் ஸத்தை பெறுவதற்காக வென்க. ... ... ... ... (5)

வேள்வியுள் மடுத்தலும் விரைகமழ்நறும் புகை*
காளங்கள் வலம்புரி கலந்தெங்கு மிசைத்தனர்*
ஆண்மின்கள் வானகம் ஆழியான் தமரென்று*
வாளொண்கண்மடந்தையர் வாழ்த்தினர் மகிழ்ந்தே. (6)

| | | | |
|---|---|---|---|
| வேள்வி உள் மடுத்தலும் | வைதிகர்கள் தம்தம் தேவபூஜா பலன்களை ஸமர்ப்பித்த வளவிலே | வாள் ஒண் கண் மடந்தையர் | ஒளிமிக்க கண்களை யுடைய தேவஸ்த்ரீகள் |
| விரை கமழ் | பரிமளம் மிக்க | ஆழியான் தமர் | "திருவாழியை யேந்திய எம்பெருமானுக்கு அடிமைப் பட்டவர்களே! |
| நறு புகை | ஸுகந்த தூபங்களானவை | | |
| எங்கும் கலந்து | எவ்விடத்தும் வியாபிக்க | வானகம் ஆண்மின்கள் என்று | இந்த ஸ்வர்க்காதிபதங்களை ஆளுங்கோள்" என்று சொல்லி |
| காளங்கள் வலம்புரி | திருச்சின்னங்களையும் சங்குகளையும் | | |
| இசைத்தனர் | ஊதினார்கள்; | மகிழ்ந்து வாழ்த்தினார் | ப்ரீதியுடன் வாழ்த்தினார்கள். |

***திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் மகிழ்ந்து வாழ்த்தினபடியை யருளிச் செய்கிறார். வேள்வியுள் மடுத்தலும்—கீழ்ப்பாட்டிற் சொன்ன யாகபல ஸமர்ப்பணம் நடைபெற்ற வளவிலே யென்றபடி. வேறே சிலர் நறுமணம் மிக்க தூபங்களை யிட்டார்கள். வேறே சிலர் காளங்களையும் சங்குகளையும் ஒலிப்பித்தார்கள். காளமென்பது திருச்சின்னம்; காஹளம் காஹளீ என்பர் வடநூலார். காஹள மென்ற சொல்லே காளமெனத் திரிந்தது.

ஆழியான்தமர் வானகம் ஆண்மின்கள் என்று வாளொண்கண் மடந்தையர் மகிழ்ந்து வாழ்த்தினர்—எம்பெருமானுடைய கையுந் திருவாழியுமான அழகிலே யீடுபட்டவர்களன்றோ நீங்கள்; வாருங்கள்! இவ்விடத்தை யாளுங்கள்! என்று சொல்லி திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் மகிழ்ந்து வாழ்த்தினர். வாளொண்கண் என்ற அடைமொழியின் கருத்தை நம்பிள்ளை விவரிக்கு நருளுகிறார் காண்மின்—"தேசாந்தரத்தில் நின்றும் போந்த ப்ரஜையைத்

தாய்மார் குளிரப் பார்க்குமாபோலே ஒளியையுடைய அழகிய கண்களாலே குளிர நோக்கின படி". (மகிழ்ந்து) என்பதனால் ஒருவருடைய நிர்ப்பந்தத்திற்காகச் செய்கிறார்களல்லர், ப்ரீதி தூண்டச் செய்கிறார்களென்பது போதரும். முடிவில் நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி;—"இந்த பகவத் ஸம்பந்தமே ஹேதுவாக நீசராலே பரிபூதனாய்ப் போந்தவன் சரீர வியோக ஸமநந்தரத்தில் தங்களுக்குஅவ்வருகில்லாதார் கொண்டாடும்படியிறே பெறும்பேறு." தங்களுக்கு அவ்வருகில்லாதாரென்றது எல்லாரிலும் மேம்பட்டவர்களென்றபடி. (6)

மடந்தையர் வாழ்த்தலும் மருதரும்வசுக்களும்*
தொடர்ந்தெங்கும் தோத்திரஞ்சொல்லினர்*தொடுகடல்
கிடந்த எங்கேசவன் கிளரொளி மணி முடி*
குடந்தை எங்கோவலன் குடியடியார்க்கே. (7)

| | | | |
|---|---|---|---|
| தொடுகடல்கிடந்த | அகாதமான கடலிலே திருக்கண் வளர்ந்தருளின | குடி அடியார்க்கு | குலங்குலமாக அடிமைப்பட்டவர்கள் விஷயத்திலே |
| எம் கேசவன் | எம்பெருமானைப் | மடந்தையர் வாழ்த்தலும் | அப்ஸரஸ்ஸுக்கள் பல்லாண்டு பாடின வளவிலே |
| கிளர் ஒளி மணி முடி | கிளர்ந்த வொளியையுடைய ரத்னகிரீடத்தை யணிந்தவனைக்கொண்டு | மருதரும் வசுக்களும் | மருத்துக்களும் அஷ்டவஸுக்களும் |
| குடந்தை | திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற | எங்கும் தொடர்ந்து | போமிடமெங்கும் தொடர்ந்து வந்து |
| எம் கோவலன் | எமது கோபாலனுக்கு | தோத்திரம் சொல்லினர் | பல்லாண்டு பாடினார்கள். |

***மருத்கணங்களும் வஸுகணங்களும் தங்களுடைய எல்லைக்கு அப்பாலும் தொடர்ந்துவந்து தோத்திரம் செய்யும்படி சொல்லுகிறது. *வாளொண்கண் மடந்தையர் வாழ்த்தினர் மகிழ்ந்தே* என்று கீழ்ப்பாட்டில் சொன்னதுதன்னையே மீண்டும் "மடந்தையர் வாழ்த்தலும்" என்று அநுபாஷிப்பதானது அந்த வாழ்த்துதலிலுண்டான ஆதராதிசயத்தினாலென்க. திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் வாழ்த்தின வளவிலே, [மருதரும் வசுக்களும் எங்குந்தொடர்ந்து தோத்திரம் சொல்லினர்] மருத் கணங்களும் வஸு கணங்களும் தங்கள் எல்லைக்கு அப்பால் செல்லலாமிடமெங்குந் சென்று புகழ்ந்தார்கள். இங்கே ஈடு!—"ஒரு நிமேஷ மாத்திரத்திலே ஒரு லோகத்தில் நின்றும் லோகாந்தரத்தேறப் போமவர்களாகையாலே, தங்கள் எல்லைக்குள்ளில் புகழ்ந்தவளவால் பர்யாப்தி பிறவாமையாலே தொடர்ந்து புகழ்ந்தார்கள். அவர்கள் தாங்கள் சடக்கெனப்போகிற விதற்கு அடி என்னென்னில்; தாங்கள் *கண்ணன் விண்ணூர் தொழவே சரிகின்றது சங்கம் *என்றும்*காண்பதென்றுகொலோ* என்றும் *மாகவைகுந்தம் காண்பதற்கென மனமேக மெண்ணும்* என்றும் *உடன் கூடுவதென்று கொலோ* என்று மிருக்கையாலும் *ந ஜீவேயம் க்ஷணமபி* என்றிருக்குமவன் கருத்தறியுமவர்களாகையாலும்" என்று.

வழியில் ஆதரிப்பவர்களெல்லாரும் என்னவென்று சொல்லி ஆதரிக்கிறார்களென்னில்; [குடந்தை யெங்கோவலன் குடியடியார்க்கே] இவர்கள் திருக்குடந்தை யெம்பெருமானிடத்திலே குடிகுடியாக அடிமைப்பட்டவர்களென்று சொல்லிக்கொண்டு ஆதரிக்கிறார்களாம். இதனால், நம்மாழ்வார்க்குத்திருநாட்டிலுங்கூட மறக்கமுடியாதபடி திருக்குடந்தைப்பதியின் அநுபவம் செல்லாநின்றதென்று தெரியவரும். திவ்யப்பிரபந்தங்களெல்லாம் லோபமடைந்திருந்த வொரு காலவிசேஷத்தில் ஸ்ரீமந் நாதமுனிகள் அவற்றைப் புநருத்தாரஞ் செய்வதற்குத் திருக் குடந்தைப்பதி விஷயமான *ஆராவமுதே யென்கிற திருவாய்மொழியே மூலகாரணமாயிற்றென்று ஐதிஹ்யமுளது. த்ரிகாலஜ்ஞரான ஆழ்வார் திருவுள்ளத்தில் இது முன்னமே படிந்திருந்ததனால் இதையிட்டும் இங்குத் திருக்குடந்தைப்

வதன்கருத்தை நம்பிள்ளை யெடுத்துக் காட்டியருளுகிறார் காண்மின்;—*"யுவேவ வஸுதேவோபூத்* என்று, கம்ஸவதத்துக்குப் பின்பு பிள்ளையைக்கண்ட ஸ்ரீவஸுதேவரையும் தேவகியாரையும் போலவும், பெருமாளைக்கண்ட சக்ரவர்த்தி* புநர் யுவேவ* என்று சொல்லப்பட்டாப்போலவும் தங்கள் வரவாலுண்டான ஹர்ஷத்தாலே புதுக்கணித்தது வடிவு" இங்ஙனே வடிவு புதுககணித்ததானது பெருமானுக்கு மாத்திரமன்று, பிராட்டிக்குங்கூட-என்று காட்டுதற்காக **மாதவன்** என்றது. ... ... (8)

**வைகுந்தம் புகுதலும் வாசலில் வானவர்***
**வைகுந்தன்தமர் எமர்எமதிடம் புகுதென்று***
**வைகுந்தத்து அமரரும் முனிவரும் வியந்தனர்***
**வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே.** (9)

| | | | |
|---|---|---|---|
| வைகுந்தம் புகுதலும் | ஸ்ரீ வைகுண்டத்திலே சென்று புகுந்தவளவிலே | வியந்தனர் | உகந்தார்கள்: |
| வாசலில் வானவர் | திருவாசல் காக்கும் முதலிகளானவர்கள் | வைகுந்தத்து | அவ்விடத்திலே |
| வைகுந்தன் தமர் எமர் | "ஸ்ரீ வைகுண்ட நாதனுடையார்கள் எங்களுடைய ஸ்வாமிகள் (ஆகையாலே) | அமரரும் முனிவரும் | கைங்கர்ய நிஷ்டராயும் குணாநுபவ நிஷ்டராயுமுள்ளவர்கள் |
| எமது இடம் புகுது என்று | எங்களதிகாரத்திலே புகவேணும்" என்று சொல்லி | மண்ணவர் வைகுந்தம் புகுவது விதியே(என்று) வியந்தனர் | "லீலாவிபூதியிலிருந்தவர்கள் நித்ய விபூதிபேற வருவது மஹா பாக்யமே!" என்று சொல்லி உகந்தார்கள். |

***—அங்குள்ள நித்யஸூரிகள் இவர்களைக்கண்டு 'இப்படி பரமபதத்திலே வருவதே! இதென்ன பாக்யம்! இதென்னபாக்யம்!!' என்று வியந்து மகிழ்ந்தனரென்கிறதிப்பாட்டில். **வைகுந்தம் புகுதலும்**—பரமபதத்தேசென்று கிட்டியானவளவிலே யென்றபடி. **வாசலில் வானவர்**—திருவாசல் காக்கும் முதலிகள். என்ன சொன்னார்களென்னில்; [**வைகுந்தன் தமர் எமர்**] 'வைகுந்தநாதனுக்கு அடியவர்களாகவருகின்ற இவர்கள் எமக்கு ஸ்வாமிகள் என்றார்கள். இன்னமும் என்ன சொன்னார்கள்? [**எமதிடம்புகுதென்று**] எங்களுடைய பதவியை நீங்கள் வஹித்து நிர்வஹிக்கவேணுமென்று சொல்லிக் கையிலே பிரம்பையும் கொடுப்பர்களாம். **வியந்தனர்**—ஆச்சரியப்பட்டார்கள்; மண்ணவர் விண்ணவராயினரே! என்று வியப்படைந்தனர். அப்படிவியந்தவர்கள் யாவரென்னில்; [**வைகுந்தத்து அமரரும் முனிவரும்**] "ஸ்ரீபரதாழ்வானையும் இளையபெருமாளையும் போலே குணநிஷ்டரும் கைங்கரிய நிஷ்டரும்" என்பது ஈடு, ***வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ*** என்ற பகவச்சாஸ்த்ரத்திலும் **பக்தை:, பாகவதை:** என்கிற இரண்டு சொற்களையிட்டுச் சொல்லிற்று. *உள்ளத்துக் கொண்டு ***முனிவர்களும்யோகிகளும்*** என்கிறாள் ஆண்டாளும். குணாநுபவமே போதுபோக்காயிருப்பவர்களும் கைங்கரியமே காலக்ஷேபமாயிருப்பவர்களுமான இருவகுப்பினருமுள்ளோர்.

"**வைகுந்தம்புகுவது மண்ணவர்விதியே**" என்ற ஈற்றடியை "மண்ணவர் வைகுந்தம் புகுவது விதியே" என்று அந்வயித்துக்கொள்வது பாங்கு. ஸம்ஸாரிகள் பரமபதத்தே வந்து சேரும்படியாக நாம் பாக்யம் பண்ணினோமே! என்று சொல்லி வியந்தனராயிற்று. ***தைவம் திஷ்டம் பாகதேயம் பாக்யம் ஸ்த்ரீ நியதிர் விதி:*** என்ற அமரகோசத்தின்படி விதியென்னுஞ் சொல் பாக்யத்தைச் சொல்லக்கடவது. இதன்பரமதாத்பரியம் யாதெனில்; திருமங்கையாழ்வார் *ஏரார்முயல்விட்டுக் காக்கைப்பின் போவதே* என்று சொல்லி லீலாவிபூதியில் அநுப

வந்தான் உண்மையில் சிறந்தாரையாலே அப்படிச் சிறந்ததான தேசவிசேஷத்திலே சென்று நாங்கள் அநுபவிக்கப் பாரித்திருக்கையில் நீங்கள் அங்கிருந்து இங்கே வந்தீர்களே! இது எங்களுடைய பரம பாக்கியமன்றோ வென்று கொண்டாடினார்களென்கை. ... (9)

விதிவகைபுகுந்தனரென்று நல்வேதியர்*
பதியினில்பாங்கினில் பாதங்கள்கழுவினர்*
நிதியும்நற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும்*
மதிமுகமடந்தையர் ஏந்தினர்வந்தே. (10)

| | | | |
|---|---|---|---|
| விதி வகை புகுந்தனர் என்று | "நம்முடைய பாக்யமானது நன்றாக இவர்கள் இவ்விடம் வந்து சேர்ந்தார்கள்" என்று சொல்லி | நிதியும் | ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு நிதியான திருவடி நிலைகளையும் |
| நல் வேதியர் | நல் வேதங்களாலே பிரதிபாதிக்கப்பட்ட நித்ய ஸூரிகள் | நல் சுண்ணமும் | ஸ்ரீ சூர்ணத்தையும் |
| பதியினில் | தம்தம் திவ்ய ஸ்தானங்களிலே | நிறைகுடம் | பூரண கும்பங்களையும் |
| பாங்கினில் | உபசாரங்களுடனே | விளக்கமும் | மங்கள தீபங்களையும் |
| பாதங்கள் கழுவினர் | வந்தவர்களுடைய திருவடிகளை விளக்கினார்கள்; | மதி முகம் மடந்தையர் | சந்திரன் போன்ற முகத்தை யுடையவர்களான பரிசாரிகைகள் |
| | | வந்து ஏந்தினர் | ஏந்திக்கொண்டு எதிரே வந்தார்கள். |

***— என்னவர் இன்னவராகப் பெற்றது நம்முடைய பரமபாக்கியமன்றோவென்று மீண்டும் சிலர் சொல்லத் தொடங்கினர். விஷயங்கள் நடையாடுகிற ஸம்ஸாரத்திலே இருந்து வைத்து அநந்யப்ரயோஜநராய், பகவத்குணங்களை யநுபவிக்கப் பெற்ற மஹா புருஷர்களாய் *விண்ணுளாரிலும் சீரியர்* என்று கொண்டாடப் பட்டவர்கள் இங்கே வந்து புகரப் பெற்றது நம்முடைய பரம பாக்யமென்று ஒருகாலே சொன்னால் போதுமோ? என்கிறார்கள். நல் வேதியர் என்றது—நல்ல வேதங்களில் பிரதிபாதிக்கப்பட்டவர்களென்றபடி. *யத்ரர்ஷய: ப்ரதமஜா யே புராணா:* என்றும், *யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:* என்றும், *தத் விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாம்ஸஸ் ஸமிந்ததே* என்றும் வேதங்களாலே பிரதிபாதிக்கப் பட்டவர்களன்றோ. இப்படி கொண்டாடினவளவோடு நில்லாமல் அனந்த வைநதேயாதிகளான அவர்கள் தங்கள் தங்கள் திருமாளிகைகளிலே கொண்டு சென்று ஸ்ரீ பாத தீர்த்தமும் சேர்த்துக் கொண்டமை சொல்லுகிறது இரண்டாமடியில். பதியினில்—பதியென்று இருப்பிடம்; தம் தம் திருமாளிகைகளிலே கொண்டு புக்கு என்றபடி. இங்கே ஈடு;—"இவனொரு ஸம்ஸாரி சேதநன், நாம் அஸ்ப்ருஷ்ட ஸம்ஸார கந்தர் என்று வாசிவையாதே இவனை ஸிம்ஹாஸனத்திலே உயர வைத்து அவர்களுக்குப் பாங்காகத் தாங்களிருந்து திருவடி விளக்குவர்கள்."

நிதியும் நற்சுண்ணமும்—அவ்வளவிலே பகவத்பரிசாரிகைகள் வந்து எதிரேற்பர்கள்; ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு நிதியான திருவடி நிலைகளையும் திருச்சுண்ண ப்ரஸாதத்தையும் நிறை குடங்களையும் [பூர்ண கும்பங்களையும்] மங்கள தீபங்களையும் ஏந்திக்கொண்டு வந்தனர். இங்கு மதிமுக மடந்தையர் என்றதன் உட்கருத்தை நம்பிள்ளை விவரிக்கிறார் காண்மின்;—"தேசாந்தரம் போனார் வந்தால் தாய் முகம் குளிர்ந்திருக்குமாபோலே ஹர்ஷத்தாலே பூர்ண சந்திரனைப் போலே யிருக்கிற முகங்களை யுடையவர்கள் வந்து எதிர் கொண்டார்கள்" ...(10)

வந்தவரெதிர்கொள்ள மாமணிமண்டபத்து*
அந்தமில்பேரின்பத்து அடியரோடிருந்தமை*
கொந்தலர்பொழில் குருகூர்ச்சடகோபன்* சொல்
சந்தங்களாயிரத்து இவைவல்லார்முனிவரே. (11)

| | | | |
|---|---|---|---|
| அவர் வந்து எதிர் கொள்ள | அந்த பெருமாளும் பிராட்டியும் வந்து எதிர்கொள்ள | சொல் | அருளிச் செய்த |
| மாமணிமண்டபத்து | திருமாமணி மண்டபத்திலே | சந்தங்கள் ஆயிரத்து | வேதரூபமான ஆயிரம்பாசுரங்களில் |
| அந்தம் இல் பேர் இன்பத்து | முடிவில்லாத மஹானந்தத்தையுடைய | இவை | இப்பத்துப் பாசுரங்களை |
| அடியரோடு | பரமபாகவதர்களோடே கூடி | வல்லார் | ஓதவல்லவர்கள் |
| இருந்தமை | இருந்தபடியை | முனிவர் | பகவத் குணங்களை மனனம் பண்ணும் முனிவராவர். |
| கொந்து அலர் பொழில் குருகூர் சடகோபன் | பூங்கொத்து அலருகிற சோலைகளை யுடைத்டதான திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் | | |

***—இப்பதிகம் வல்லார், நித்ய விபூதியிலே பகவத் குணாநுபவம் பண்ணி அதிலே யீடுபட்டு அநுக்கவ்வருகு கால்வாங்க மாட்டாதே யிருப்பாரோடொப்பர்களென்று பயனுரைத்துத் தலைக் கட்டுகிறாராயிற்று. கீழ்ப் பாசுரங்களில் சொல்லிற்றை யெல்லாம் ஸங்க்ரஹமாக அநுபாஷிக்கிறாராயிற்று. **வந்தவ ரெதிர் கொள்ள** என்று. "பிராட்டியோடே கூட எம்பெருமான் தான் வந்து எதிர்கொள்ள" என்கிற பொருளையருளிச் செய்வர் நம்பிள்ளை. அயர்வறுமமரர்களும் அவர்களது அதிபதியுமாக எல்லாரும் வந்து எதிர் கொள்ளத் தட்டில்லையே. இப்படி எதிர் கொண்டவர்கள் அனைவரும் புடை சூழ ஆனந்த மயமான திருமாமணி மண்டபத்திலே ப்ரஹமானந்த சாலிகளான அடியார்களின் அழகோலக்கத்தின் நடுவே இருந்தபடியையாயிற்று இப்பதிகத்திலருளிச் செய்தது. ***அந்தமில் பேரின்பத்து** என்ற விடத்து ஈடு;—"ஸம்ஸாரத்தில் ஸுகமென்று ப்ரமிக்கு மித்தனை; துக்கமேயுள்ளது. பாண்டு ஒருவன்மேலே அம்பைவிட ஸம்ஸாரத்தில் ஆயிரங் கூற்றில் ஒரு க்ஷணமாயிற்று ஸுகமுள்ளது; அத்தனையும் புஜிக்க வொட்டிற்றில்லையே என்றுணிறே."

**[அடியரோடிருந்தமை]** ஆழ்வார் திருநாட்டிலே எம்பெருமானை யநுபவிக்கப் பெற வேணுமென்று ஆசைப்பட்டாரல்லர்; "அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்று கொலோ!" என்று அடியரோடிருக்கவே ஆசைப்பட்டார்; ஆசைப் பட்டபடியே பெற்ற பேற்றைத் தெரிவித்தாராயிற்று இங்கு.

**[கொந்தலர் பொழில் குருகூர்]** ஆழ்வார் தமக்குப் பேறு அணித்தாயிற்றென்று களிக்கவே அவருறையு மூரிலுள்ள சோலையும் புதுக்கணித்ததாயிற்று. (11)

**பத்தாம் பத்தில் ஒன்பதாந் திருவாய்மொழியின் திவ்யாத்ர்த தீபிகை முற்றிற்று.**

ஆழ்வார் திருவடிகளே சரணம். நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

என்பது முதலான விடங்களிற் போல சரீராத்மபாவநிபந்தனமான ஐக்யவ்யபதேச மென்று உணர்க. நான்முகனையும் முக்கண்ணப்பனையும் அநுப்ரவேசித்து ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களை நடத்திப் போரும் முனியே! என்றபடி. எந்தக்காரியத்திற்கும் மாநஸமான ஸங்கல்பத்தைப் பண்ணு மவன் என்ற பொருளில் **முனி** யெனப் பட்டது.

**என் பொல்லாக் கனிவாய்த் தாமரைக்கண் கரு மாணிக்கமே!**—கீழ் முதலடியில் ஸர்வஸாதாரணமான ஸ்வரூபத்தை யநுஸந்தித்து இப்போது அஸாதாரண திவ்ய மங்கள விக்ரஹவைலக்ஷண்யத்தை யநுபவித்துப் பேசுகிறார். இப்படிப்பட்ட வடிவழகைக் காட்டித் தம்மைக் கொள்ளை கொண்டபடியைக் கூறுகிறார் **என் கள்வா!** என்று. என் இசைவின்றிக்கே என்னையபஹரித்தவனே! என்றபடி. **தனியேனாருயிரே!**—வேறொன்றால் தரிக்க வொண்ணாதபடி என்னைப் பண்ணினவனே! என்கை. ஸம்ஸாரிகளோடு பொருந் தாமையை யிட்டுத் **தனியேன்** என்கிறார். **என் தலைமிசையாய் வந்திட்டு இனி நான் போக லொட்டேன்**—நித்யஸம்ஸாரியாயிருந்த வென்னை விஷயீகரித்தவளவேயன்றிக்கே நான்பரிபூர்ணாநுபவம் பண்ணும் படியாகவும் வந்திட்டு இன்னமும் உபேக்ஷிக்கப் பார்த்தாயில் ஒட்டுவேனோ? *சேஷ்யே புரஸ்தாத் சாலாயாம் யாவந்மே ந ப்ரஸீததி* என்ற பாகாழ் வான் வார்த்தை போலே யிருக்கிறதாயிற்று இது. **ஒன்றும் மாயம் செய்யேல் என்னையே**-தியாஜ்யமான விஷயங்களைக் காட்டி அநாதிகாலம் அகற்றி வைத்தாப் போலே இன்னமும் அகற்றப் பார்க்க வேண்டா வென்றபடி. ... ... ... ... (1)

மாயம்செய்யேலென்னை உன்திருமார்வத்துமாலைநங்கை*
வாசஞ்செய்பூங்குழலாள் திருவாணைநின்னாணைகண்டாய்*
நேசஞ்செய்துன்னோடென்னை உயிர்வேறன்றியொன்றாகவே*
கூசஞ்செய்யாதுகொண்டாய் என்னைக்கூவிக்கொள்ளாய்வந்தந்தோ. (2)

| | | | |
|---|---|---|---|
| என்னை மாயம் செய்யேல் | என்திறத்தில் வஞ்சனை பண்ணத் தொழியவேணும்; | என்னை | நீசனான என்னை |
| உன் திருமார்வத்து மாலை | உன்னுடைய திருமார்விலே சாத்திய மாலை போன்றவளாய் | உயிர் வேறு அன்றி ஒன்று ஆகவே | ஆத்மபேதமில்லாமல் ஏகவஸ்துவாகவே |
| நங்கை | ஸகல குணபரிபூர்ணையாய் | கூசம் செய்யாது | எனது தன்மையைப் பார்த்துக் கூசாமல் |
| வாசம் செய் பூ குழலாள் | பரிமளம் மிக்க கூந்தலையுடையவளான | கொண்டாய் | அடிமை பிடித்து அங்கீகரித்தருளினாய்; (ஆனபின்பு) |
| திரு ஆணை | பெரியபிராட்டியாணை; | | |
| நின் ஆணை | உன் ஆணை; | என்னை வந்து கூவி கொள்ளாய் | இனி உபேக்ஷியாதே என்னைத் திருவடி சேர்த்துக்கொள்ள வேணும். |
| நேசம் செய்து | தானாகவே ஸ்நேஹித்து | | |
| உன்னோடு | உன்னோடே | | |

***...தம் காரியம் செய்தல்லது நிற்க வொண்ணாதபடி ஆணையிடுகிறாரிப் பாட்டில். *ஒன்றும் மாயஞ் செய்யேலென்னையே* என்று கீழ்ப்பாட்டில் சொன்னவுடனே எம்பெருமான் வந்து அபயமளிக்க வேணுமே, அது செய்யக் காணாமையாலே மீண்டும் **மாயஞ் செய்யேலென்னை** யென்கிறார்! அதிகப்படியாக ஆணையுமிடுகிறார். உன்மேலாணை! உன் பெண் பெண்டாட்டி மேலாணை! என்கிறார். உனது திருமார்வுக்கு அலங்கார மாயிருப்பவளும்* **ஸர்வகந்த:*** என்கிறவுனக்கும் பரிமளங் கொடுக்குங் கூந்தலையுடையவளுமான பிராட்டியின் மேலாணை. அவளுக்கு வல்லபனான உன்மேலு மாணை. பெரியாழ்வார் *வளைத்து வைத்தேனினிப் போகலொட்டேன் உன்றனிந்திர ஞாலங்களால் ஒளித்திடில் நின்திருவாணை கண்டாய்* என்று பிராட்டியாணை மட்டுமிட்டார்! இவர் இருவர் மேலு

ஹரிக்கிற வுனக்கு என்னை நிர்வஹிக்கை மிகையோ? என்கிற கருத்துப்படப் பின்னடிகளருளிச் செய்கிறார். ... ... ... ... (3)

உம்பரந்தண்பாழேயோ அதனுள்மிசைநீயேயோ*
அம்பரநற்சோதி அதனுள்பிரமனரன்நீ*
உம்பரும்யாதவரும்படைத்த முனிவனவன்நீ*
எம்பரம்சாதிக்கலுற்று என்னைப்போரவிட்டிட்டாயே. (4)

| | | | |
|---|---|---|---|
| உம்பர் அம் தண் பாழேயோ | மூல ப்ரக்ருதிக்கு நிர்வாஹக னானவனே! | யாதவரும் | மநுஷ்யாதி ஸகல சேதநரையும் |
| அதனுள் மிசை நீயேயோ | அந்த ப்ரக்ருதிக்குள்ளே நிற்கிற ஆத்ம தத்வத்துக்கு நிர்வாஹகனானவனே! | படைத்தமுனிவன் அவன் நீ | அவரவர்களது கருமங்களை மனனம் பண்ணி ஸ்ருஷ்டித்தவன் நீ; |
| | | | (இப்படியாயிருக்க) |
| அம்பரம் நல் சோதி அதனுள் பிரமன் அரன் நீ | ஆகாசம் முதலானவற்றுக்கும் அண்டத்துக்குள்ளே யிருக்கிற பிரமன் சிவன் முதலானவர்களுக்கும் நிர்வாஹகன் நீ; | எம் பரம் சாதிக்கல் உற்று | என் காரியம் நீயே செய்வதாக ஏறிட்டுக் கொண்டு |
| | | | (இவ்வளவும் வர நிறுத்தி) |
| உம்பரும் | மேலான தேவர்களையும் | என்னை போர விட்டிட்டாயே | என்னை இங்கேயே போகட்டு வைத்தாயே. |

***—ஸர்வநிர்வாஹகனான நீயே என்காரியத்தையும் நிர்வஹிக்கவேண்டியிருக்க, என் காரியம் நானேபண்ணிக்கொள்வேனாகப்பார்த்திருக்கிறாயாகில் என்னைக் கைவிட்டபடியன்றோ. வென்கிறார். **உம்பரந்தண் பாழேயோ** என்பதனால் மூலப்ரக்ருதிநிர்வாஹகத்வம் சொல்லுகிறது. பாழ்நிலமாயிருக்குமதிலே எதையும் பயிர் செய்துகொள்ளலாமாப்போலே சேதநர்க்கு போகமோக்ஷங்களை விளைவித்துக்கொள்ளலாம் நிலமாயிராநின்ற மூலப்ரக்ருதியைப் **பாழ்** என்ற சொல்லாற்சொல்லுகிறது. **உம்பர்** என்றும் **அம்தண்** என்றும் அதனுடைய மேன்மை சொல்லும் விசேஷணங்கள். **அதனுள்மிசைநீயே—உம்பரந்** தண் பாழ்' என்று கீழேசொல்லப்பட்ட ப்ரக்ருதியிலே கட்டுப்பட்டு நிற்கிற ஆத்மவர்க்கங்களுக்கும் நிர்வாஹகனானவனே! என்றபடி. ஆக முதலடியால் சேதநாசேதநங்களை சரீரமாகக் கொண்டவனே! என்றதாயிற்று.

**அம்பரநற்சோதியதனுள் பிரமனரன் நீ**-[அம்பரநற்சோதி நீ, அதனுள் பிரமனரன் நீ] என்று இரண்டு வாக்யமாக யோஜிப்பது. **அம்பரம்** என்று ஆகாசத்தையும், **நற்சோதி** யென்று தேஜஸ்ஸையும் சொன்னவிது உபலக்ஷண மர்யாதையால் பஞ்சபூதங்களையும் சொன்னபடியாம். பஞ்சபூதங்களும் நீயிட்டவழக்கு என்றவாறு. **அதனுள் பிரமனரன் நீ**-அண்டத்துக்குள்பட்ட ப்ரஹ்மருத்ராதிகளும் நீ யிட்டவழக்கென்றபடி. **உம்பரும் யாதவரும் படைத்த முனிவனவன் நீ**—தேவர்களையும் மற்றுள்ளாரையும் படைத்தமுனியாக ப்ரஸித்தன் நீ. மனனம் பண்ணுமவன் முனி; அவரவர்களினுடைய கருமங்களை மனனம் பண்ணியே விஷம ஸ்ருஷ்டிகளைப் பண்ணவேண்டியிருக்கையாலே இங்கு **முனிவன்** என்றது. ஆக மூன்றடிகளினாலும் எம்பெருமானுடைய முதன்மையைப் பரக்கச்சொல்லி இனி ஈற்றடியால் தம்முடைய குறையைக்கூறி முடிக்கிறார்; **எம்பரம் சாதிக்கலுற்று என்னைப் போரவிட்டிட்டாயே**—என் காரியம் நீயே செய்வதாக ஏறிட்டுக்கொண்டு கார்யகாலத்தில் உபேக்ஷித்துவிட்டாயே என்றபடி. "**எம்பரஞ்சாதிக்கலுற்று**' என்பதற்கு மற்றொரு வகையாகவும் பொருள் கூறுவர்—என் காரியம் நானே செய்துகொள்ளவேணுமென்று பார்த்து—என்று. ... (4)

| | | | |
|---|---|---|---|
| புனம் காயா நிறத்த | தன்னிலத்தில்அலர்ந்த காயாம் பூப்போன்றநிறைத்தையுடையையாய் | என் அன்பே | என் விஷயத்தில் அன்புதானே வடிவெடுத்தாற்போன்றிருப்பவனே! |
| புண்டரிகம் கண் செம் கனி வாய் | தாமரை போன்ற திருக்கண்ணையும் சிவந்த திருப்பவளத்தையு முடையையான | எனக்கு ஆரா அமுது ஆய் | எனக்குப் பரம போக்யனாய் |
| | | எனது ஆவியை இன் உயிரை | என்னுடைய ஹேயமான ப்ரக்ருதியையும் விலக்ஷணனான ஆத்மாவையும் |
| உனக்கு ஏற்கும் கோலம் மலர் பாவைக்கு அன்பா | உனக்கு ஏற்றிருக்கின்ற வடிவு படைத்தவளான பெரிய பிராட்டிக்கு அன்பனே! | மனக்கு ஆராமை மன்னி உண்டிட்டாய் | ஸ்நேஹத்துக்கு த்ருப்தி பிறவாதபடி விரும்பி நிரந்தரமாக புஜித்தாய்: |
| | | இனி உண்டொழியாய் | குறையும் புஜித்தேயாக வேணும். |

***—பெரிய பிராட்டியாரிடத்திற்போலே என்னிடத்திலும் மிகுந்த அபிநிவேசம் கொண்டவனாய் எனது உடலிலுமுயிரிலும் அதிகமான விருப்பத்தைப்பண்ணி புஜித்த நீ இனி யென்னையுபேக்ஷியாதே விரைவில் விஷயீகரித்தருளா யென்கிறார். இப்பாட்டுக்கு "கோல மலர்ப்பாவைக் கன்பா! என்னன்பேயோ" என்ற ஈற்றடி உயிராயிருக்கும். 'அன்பன்' என்ற சொல்லின் மேல் விளியுருபு ஏற்று அன்பா! என்று கிடக்கிறது. அன்பு என்ற சொல்லின் மேல் விளியுருபு ஏற்று அன்பே! என்று கிடக்கிறது; இதனால், எம்பெருமான் பிராட்டி பக்கலிலே அன்பையுடையவன், ஆழ்வார் பக்கலிலே அன்பே வடிவெடுத்தவனாயிருப்பவன் என்பது தெரிவிக்கப்படும், பிராட்டியிற் காட்டிலும் அதிகமாக என் பக்கலிலே ஸ்நேஹித்தவனாயிருந்துவைத்து இப்போது உபேக்ஷிப்பது தகுதியோ? என்றவாறு.

**எனக்கு ஆராவமுதாய்**—தேவர்களுண்ணும் அமிருதம் போலன்று ஆழ்வாருடைய ஆராவமுது. *எப்பொழுதும் நாள் திங்களாண்டூழி யூழி தொறும் அப்பொழுதைக் கப்பொழுது என்னாராவமுதமே* என்னும்படியான அமுதமன்றோ. **எனதாவியை இன்னுயிரை மனக்கு ஆராமை மன்னி யுண்டிட்டாய்**—இங்கு ஆவியென்று உடலைச் சொல்லுகிறது. என்னுடம்பையும் என்னுயிரையும் எவ்வளவநுபவித்தாலும் த்ருப்தி பிறவாமே உண்டிட்டாய். **இனி** யுண்டொழியாய்—நீயே முடிப்பதன்றோ அழகு. நடுவே குறை கிடக்க விடுவதுண்டோ? புக்த சேஷத்தைப் பிறர் புஜிப்பாருண்டோ? நீயே புஜித்துப் பூர்த்தி செய்யுமத்தனை.

மூன்றாமடியினால் திவ்விய மங்கள விக்ரஹ ஸௌந்தரியத்தைப் பேசுகிறார்; உன் வடிவழகும் கண்ணழகும் வாயழகும் பிராட்டியோட்டைச் சேர்த்தியழகுமன்றோ என்னை விஷயீகரித்தன. **உனக்கேற்குங் கோல மலர்ப் பாவை**—* துல்ய சீல வயோவ்ருத்தாம் துல்யாபிஜந லக்ஷணாம், ராகவோர்ஹதி வைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா* என்று திருவடி சொன்னது காண்க. 'உனக்கேற்கும்' என்கிற இந்தச் சந்தையை யடியொற்றியே எம்பெருமானார் கத்யத்தில் ***பகவந் நாராயணாபிமதாநுரூப.........*** என்றருளிச் செய்தது. ... ... ... ... (6)

கோலமலர்ப்பாவைக்கன்பாகிய என்னன்பேயோ*
நீலவரையிரண்டுபிறைகவ்வி நிமிர்ந்ததொப்ப*
கோலவராகமொன்றாய் நிலங்கோட்டிடைக்கொண்டவெந்தாய்*
நீலக்கடல்கடைந்தாய் உன்னைப்பெற்றினிப்போக்குவனோ. (7)

திருமேனியின் நிழலீட்டாலே கடலும் கறுத்ததாகத் தோன்றிற்று என்று காட்டுதற்காக. க்ஷீராம்போதேர் ஜடரமபிதோ தேஹபாஸாம் ப்ரரோஹை: காலோங்மிலத் குவலயதளாத் வைத மாபாதயந்தம்* என்ற சம்பூரர்மாயணமும் காண்க. ஸ்ரீ ரங்கராஜஸ்தவத்தில் *அபி பணிபதிபாவாத்* இத்யாதியான ஸ்ரீரங்கவிமாந வர்ணனச்லோகமும் இங்கே அநுஸந்திக்கத்தகும். உன்னைப் பெற்று இனிப்போக்குவனோ—பூமிப்பிராட்டியைப் பெறுகைக்கும் பெரிய பிராட்டியைப் பெறுகைக்கும் பாடு பட்டாப் போலே என்னைப் பெறுகைக்கும் பாடு பட்டவனாயிருந்து வைத்து இப்போது உபேக்ஷித்தால் விடுவேனோ வென்றபடி ... (7)

பெற்றினிப்போக்குவனோ உன்னையென்தனிப்பேருயிரை*
உற்றவிருவினையாய் உயிராய்ப்பயனாயவையாய்*
முற்றவிம்மூவுலகும் பெருந்தூறாய்த்தூற்றிற்புக்கு*
முற்றக்கரந்தொளித்தாய் என்முதல்தனிவித்தேயோ. (8)

| | |
|---|---|
| உற்ற இரு வினை ஆய் | ஆத்மாவைப் பற்றின புண்ய பாப ரூப கருமங்களுக்கு நிர்வாஹகனாய் |
| உயிர் ஆய் | கர்ம வச்யனான ஆத்மாவுக்கு நியந்தாவாய் |
| பயன் அவை ஆய் | கரும பலனான ஸுக துக்கங்களைக் கொடுப்பவனாய்க் கொண்டு |
| இம் மூஉவுலகும் முற்ற பெரு தூறு ஆய் | இந்த மூவுலக மெல்லாமாகிற பெரிய தூற்றை யுண்டாக்கினவனாய் |
| தூற்றில் புக்கு | இந்தத் தூறு தன்னுள்ளே புகுந்து |
| முற்ற கரந்து ஒளித்தாய் | ஒரு படியாலு மறிய வொண்ணாதபடி மறைந்து நிற்குமவனாய் |
| என் முதல் தனி வித்தே ஓ | எனக்கு உன்னைக் கிட்டுகைக்கு மூல ஸுக்ருதமாயிருப்பவனே ! |
| என் தனி பேர் உயிரை உன்னை | எனக்கு அஸாதாரண தாரகனான வுன்னை |
| பெற்று இனி போக்குவனோ | பெற்று வைத்து இனிவிடுவேனோ ! |

***—மிகவும் விஸஜாதீயனாயிருந்த எனக்கு மிகவும் தாரகனான வுன்னைப் பெற்று வைத்து இனி விடுவேனோ? உயிரைவிட்டு உடல் தரிக்கவற்றோ வென்கிறார். இப்பாட்டில் "என் தனிப் பேருயிரை" என்பது உயிரானது. உற்ற இருவினையாய்—உன்னையொழிய வேறு சில கருமங்களை ஸ்வதந்த்ரமாக நினைத்திருந்தேனாகிலன்றோ உன்னைவிடலாவது என்பது கருத்து. ஆத்மாவைப்பற்றி விடாதே கிடக்கிற புண்ய பாபங்களாகிற கருமங்கள் நீயிட்ட வழக்கன்றோவென்கை. உயிராய்—கருமங்களை யனுஷ்டிப்பவர்களான சேதநர்களும் நீயிட்ட வழக்கன்றோ. பயனாயவையாய்—கருமபலன் உன்னையொழிய ஸித்திக்குமென்றிருந்தேனோ வென்கை. இப்போது இவையெல்லாஞ் சொல்லுகிறது எதற்காக வென்னில்; தம்மிடத்தில் ஒன்றும் எதிர்பார்க்க நியாயமில்லை யென்கைக்காக.

முற்றவிம் மூவுலகும் பெருந்தூறாய்—மூவுலகங்களுமாகிற இந்த ஸம்ஸாரம் புதர் போன்றது, இதை யுண்டாக்கினவனும் நீயே. தூற்றில் புக்கு முற்றக் கரந்தொளித்தாய்—இங்ஙனே புதராயிருக்கின்ற ஸம்ஸார நிலமெங்கும் வியாபித்து ஒருவருமறியாதபடி நின்றாய். என் முதல் தனிவித்தே!—எனக்கு ப்ரதமஸுக்ருத மானவனே! என்றபடி நானாக ஓரடி வந்திலேன்; முதலிலே பிடித்து க்ருஷிபண்ணினவன் நீயேயன்றோ வென்றபடி இவ்வளவு ஹேதுக்களாலே உன்னை இனிப்போக்குவனோ வென்றாராயிற்று. (8)

முதல்தனிவித்தேயோ முழுமூவுலகாதிக்கெல்லாம்*
முதல்தனியுன்னையுன்னை யெனைநாள்வந்து கூடுவன்நான்*
முதல்தனியங்குமிங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய்*
முதல்தனிசூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவிலீயோ. (9)

| | | | |
|---|---|---|---|
| முழு மூ உலகு ஆதிக்கு எல்லாம் | மூவுலகு தொடக்கமான எல்லா வற்றுக்கும் | முதல் தனி சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த முடிவு இலீ ஓ | ப்ரக்ருதி ப்ராக்ருதங்களுக்கு நியாமகமாய் ஒப்பற்ற தாய் தர்ம பூதஜ்ஞானத்தாலே எங்கும் வியாபித்த தாய் நித்யமான ஆத்மவர்க்கத்துக்கு நியாமகனானவனே! |
| முதல் தனி வித்தே ஓ | மூவகைக் காரணமுமான வனே! | | |
| அங்கும் இங்கும் முழு முற்று உறு | எங்கும் ஸமஸ்த பதார்த்தங்களையும் வியாபித்திருப்ப தாய் | | |
| முதல் தனி | அத்விதீய காரணமாய் | முதல் தனி உன்னை | முதல்வனும் அத்விதீயனுமிருக்கிற உன்னை |
| வாழ் | போகமோக்ஷங்களாகிற வாழ்ச்சிக்கு | உன்னை | அஸாதாரணனான வுன்னை |
| பாழ் ஆய் | விளை நிலமான மூல ப்ரக்ருதிக்கு நியாமகனாய் | நான் எனை நாள் வந்து கூடுவன் | நான் எந்நாள் வந்து கூடக் கடவேன்! |

***எம்பெருமான் உலகங்களையெல்லாம் தனக்கு சரீரமாகக் கொண்டு எங்கும் பரந்தவனாயிருப்பது ஸாதாரணாகாரமெனப்படும்; திருநாட்டிலே திவ்யமங்களவிக்ரஹத்தோடே எழுந்தருளியிருப்பது அஸாதாரணாகாரமெனப்படும். "நீயெம்பெருமான் நீரெம்பெருமான் திசையுமிரு நிலனுமாய் எம்பெருமானாகி நின்றால் அடியோங் காணுமாறு*" [பெரியதிருமொழி 4-9-5] என்று திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே ஆழ்வார்கள் ஸர்வஸாதாரணாகாரங் கொண்டுத்ருப்தியடைகிறவர்களல்லர். ஏனென்னில்; ஜகதாகாரனாயிருக்குமிருப்பு உகந்தார்க்கும் உகவாதார்க்கும் பொதுவாயிருந்தது; அஸாதாரணாகாரம் அப்படிப்பட்டதன்று. ஆகவே அதனைக் கண்டே த்ருப்திபெறவேண்டியிருப்பர்கள். அப்படிப்பட்ட த்ருப்தியைத் தந்தருள வேணுமென்கிறாரிப்பாட்டில். **முழு மூவுல்காதிக்கெல்லாம் முதல் தனிவித்தேயோ**—மூவுலகு தொடக்கமாக ஒன்றொழியாமல் எல்லாவற்றுக்கும் மூவகைக் காரணமுமானவனே! என்றபடி. நீ ரக்ஷிக்க வென்று புக்கால் ரக்ஷ்யவர்க்கம் ஸஹகரிக்க வேண்டாதபடி அஸஹாயனாய் நின்று ரக்ஷிப்பவனன்றோ என்பது பரமதாற்பரியம். **முதல் தனியுன்னை யுன்னை**—முதல்வனாய் ஒப்பில்லாதவனாயிருக்கிற வுன்னை. **'உன்னை உன்னை'** என்று இரட்டித்திருப்பதன் கருத்தை நம்பிள்ளை காட்டுகிறார் **'நீயான வுன்னை'** என்று; நீயான வுன்னை யென்றால் இது அந்வயிக்கவில்லையே யென்று தடுமாறுவர் சிலர். அஸாதாரணாகாரத்தோடு கூடிய வுன்னை என்பது தாற்பரியம். **நான் எனை நாள் வந்து கூடுவன்**—திருநாட்டில் சுவடறிந்தவனும் அஸாதாரண விக்ரஹஸேவையை யாசைப்பட்டவனுமான நான் என்று வந்து கூடுவன்?

மூன்றாமடியினால் அசேதநதத்வத்திற்கு நிர்வாஹகனாயிருக்கிறபடியும், நான்காமடியினால் சேதநதத்வத்திற்கு நிர்வாஹகனாயிருக்கிறபடியும் சொல்லப்பட்டன. **பாழ்** என்று ப்ரக்ருதிதத்வத்திற்குப் பெயர்; இஷ்டமானபடி போகங்களையும் மோக்ஷத்தையும் விளைத்துக் கொள்ளலாம் நிலமாகையாலே. எம்பெருமானையே நோக்கிப் **பாழே** என்கிறது நிர்வாஹ்யநிர்வாஹகபாவஸம்பந்த நிபந்தநமான அபேதோபசாரம். முடிவிலியென்று-ப்ரக்ருதிபோலே நச்வரமன்றிக்கே நித்தியமான ஆத்மதத்வத்தைச் சொல்லுகிறது. இங்கும் சொல் ஆத்மதத்வத்தோடு நிற்காமல் அதற்கு நிர்வாஹகனான எம்பெருமானளவுஞ்செல்லுகிறது. (9)

††சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவில்பெரும்பாழேயோ*
சூழ்ந்ததனிற்பெரிய பரநன்மலர்ச்சோதீயோ*
சூழ்ந்ததனிற்பெரிய சுடர்ஞானவின்பமேயோ*
சூழ்ந்ததனிற்பெரிய என்னவாவறச்சூழ்ந்தாயே. (10)

| | |
|---|---|
| சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த | பத்து திக்கிலும் வ்யாப்தமாய் |
| முடிவு இல் | நித்யமாயிருக்கிற |
| பெரு பாழே ஓ | ப்ரக்ருதி தத்வத்துக்கு நியாமகனாய் நிற்கிறவனே! |
| சூழ்ந்து | (தர்ம பூத ஜ்ஞானத்தாலே) அதையும் வியாபித்து |
| அதனில் பெரிய | அதிற்காட்டிலும் பெரிதாய் |
| பரம் | மேற்பட்டதாய் |
| நல் மலர் சோதி ஓ | விகஸ்வர தேஜோரூபமான ஆத்ம வஸ்துவுக்கும் ஆத்மாவானவனே! |
| சூழ்ந்து | கீழ்ச் சொன்ன இரண்டு தத்வங்களையும் வியாபித்து |
| அதனில் பெரிய | அவற்றுக்கும் நிர்வாஹகமாய் |
| சுடர் ஞானம் இன்பமே ஓ | ஸங்கல்ப ரூபமாய் ஸுக ரூபமான ஞானத்தையுடையவனே! |
| சூழ்ந்து | அந்த தத்வத்ரயத்தையும் வளைத்துக்கொண்டு |
| அதனில் பெரிய | அதிலும் மிகப் பெரிதான |
| என் அவா | என் அபிநிவேசமானது |
| அற | தீரும்படியாக |
| சூழ்ந்தாயே | வந்து ஸம்ச்லேஷித்தாயே! |

***—பெரியபிராட்டியாராணையிட்டுத் தடுத்துப் பெரிய ஆர்த்தியோடே கூப்பிட்ட ஆழ்வாருடைய காரியம் செய்தல்லது நிற்கவொண்ணாதபடியாயிற்று எம்பெருமானுக்கு; அதனால் இவர் ப்ரார்த்தித்தபடியே பரிபூர்ணனாய்க் கொண்டு வந்து ஸம்ச்லேஷித்தருளினான்; அது கண்டு 'என்னுடைய அபரிமிதமான விடாயெல்லாம் தீரவந்து என்னோடே கலந்தாய்; என்னுடைய மனோரதமும் ஒருபடி நிறைவேறப்பெற்றேன்' என்று பேரின்பம் பொலிய விண்ணப்பஞ் செய்கிறார்.

ஆழ்வார் தம்முடைய அபிநிவேசம் பெரியவற்றிலும் பெரிது என்கைக்காக மூன்றடிகளில் தத்வத்ரயத்தினுடைய பெருமையை அருளிச்செய்கிறார். அசித் தத்வத்தினுடைய பெருமையைச் சொல்லுகிறது முதலடி; சித் தத்வத்தினுடைய பெருமையைச் சொல்லுகிறது இரண்டாமடி, ஈச்வர தத்வத்தினுடைய பெருமையைச்சொல்லுகிறது மூன்றாமடி. இப்படி தத்வத்ரயத்தை ஒன்றுக்கொன்று பெரிதாகச் சொல்லிக்கொண்டு போந்து இவற்றிற்காட்டிலும் பெரிது தம்முடைய அவா என்று ஈற்றடியிலேயருளிச்செய்து, அது அறச் சூழ்ந்தாயே யென்று தலைக்கட்டுகிறார்.

**என்னவாவற** என்பதற்கு இரண்டுபடியாகப் பொருள் திருவுள்ளம்பற்றுவர் ஆசிரியர்கள். என்னுடைய அவா தீரும்படியாக என்பது ஸாமாந்யமான பொருள். நையாயிகர்கள் "**இச்சாயா விஷய ஸித்த்யா** நாச:" என்பர்கள். ஒரு விஷயத்திலுண்டான இச்சையானது அந்த விஷயம் ஸித்தித்தவாறே நசிக்குமென்பது இதன்பொருள். தீர்த்தம் பருகினவாறே பிபாஸை சமிக்கிறது; சோறுண்டவாறே புபுக்ஷை சமிக்கிறது. ஆகவே இச்சா விஷய ஸித்தியாலே இச்சைக்கு நாசமென்று தேறுகையாலே ஆழ்வார் தம்முடைய அவாவுக்கு விஷயமான பகவதநுபவம் இப்போது ஸித்தித்துவிடுகையாலே அவா அற்றதென்று கொள்வது. இங்ஙனே கொள்ளும் பொருளிற்காட்டிலும் மிகச் சீரிய பொருள் மற்றொன்று கேளீர். **அற** என்பது வடமொழியில் நஞ்ஞின் ஸ்தானத்திலே வந்துள்ளது. அந்த நஞ்ஞுக்கு ஆறு பொருள்கள் சாஸ்த்ரஜ்ஞர்களால் சொல்லப்பட்டுள்ளன; அவற்றுள் **அல்பத்வம்** என்பதும் ஒருபொருள். "அநுதரா கந்யா" என்றால் இப்பெண் வயிறில்லாதவள் என்று பொருள் தோன்றும்; ஆனால் அதுவன்று பொருள்; [அல்போதரா கந்யா] மிகச்சிறிய வயிற்றையுடையவள் இப்பெண் என்பதே பொருள். அதுபோலவே இங்கு 'என் அவா அற' என்பதற்கு என்னுடைய அவா சிறிதென்னும்படி என்று பொருள் கொள்வது சிறக்கும். இதுவரையில் ஆழ்வார் தம்முடைய அவாவே பெரிதென்றிருந்தார்; இப்போது தம்மையநுபவிக்கப் பதறிவந்த எம்பெருமானுடைய அவாவின் மிகுதியைப்

பார்த்தவாறே அது கடலாயும், தம் அவா குளப்படியாயும் தோன்றி இங்ஙனே யருளிச் செய்கிறரென்க. இங்கே ஈடு காண்க;—"தத்வத்ரயத்தையும் விளாக்குலைகொண்டு அவை குளப்படியாம்படி பெரிதான என்னுடைய அபிநிவேசத்தை, அதிலும் பெரிய உன்னபிநிவேசத்தைக் காட்டிவந்து ஸம்ச்லேஷித்தாயே!; என்னுடைய கூப்பீடும் ஓருபடி ஓவும்படி பண் ,!" என்று.

பெருமாள் காட்டில் நின்று மீண்டெழுந்தருளி *அங்கே பரதமாரோப்ய முதித: **பரிஷஸ்வஜே*** என்று பரதாழ்வானை மடியிலே வைத்து உச்சிமோந்து உகந்தணைத்தாப் போலேயாயிற்று ஆழ்வாருடைய விடாய் கெடும்படி கலந்தது.

முதல் மூன்றடிகளிலும் "பெரும்பாழேயோ, பரநன் மலர்ச்சோதீயோ, சுடர்ஞான வின்பமேயோ" என்றுள்ளவை எம்பெருமானிடத்தே யந்வயிக்கும் படியான விளிகள். மூன்றுமடி எம்பெருமானிடத்தே அந்வயிப்பதில் குறையொன்றுமில்லை; முன்னிரண்டடிகள் சேதந அசேதநங்களை மாத்திரம் சொல்லுவனபோல் தோன்றும்; அப்படியில்லை. "அவற்றுக்கும் ஈச்வரனை யொ ய ப்ருதக் ஸ்திதியில்லாமையாலே அவ்வளவுஞ் செல்லுகிறது" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. "சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த" என்பதனால் ஓவ்வொரு தத்வத்திற்கு முள்ள பரிபூர்ண வ்யாப்தி சொல்லப்படுகிறது. பத்துத்திசைகளிலும் வியாபிப்பதே பரிபூர்ணவ்யாப்தியாதலால் அதைக் காட்டுதற்கு இத்தனை சொற்கள் வேண்டியிருக்கும். ஜீவாத்மதத்வத்திற்கு ஜ்ஞாநத்வாரா வ்யாப்தியறிக.

அவாவறச்சூழ் அரியையயனையரனையலற்றி*
அவாவற்றுவீடுபெற்ற குருகூர்ச்சடகோபன் சொன்ன*
அவாவிலந்தாதிகளால் இவையாயிரமும்* முடிந்த
அவாவிலந்தாதியிப்பத்தறிந்தார் பிறந்தாருயர்ந்தே. (11)

| | | | |
|---|---|---|---|
| அவா அற | அடியேனுடைய அபிநிவேசம் தீரும்படி | சொன்ன | அருளிச் செய்ததாய் |
| சூழ் | ஸம்ச்லேஷிப்பவனும் | அவாவில் | பக்தியினு லுண்டானதான |
| அரியை | இப்படி தாபத்தை ஹரிப்பவனுகையாலே ஹரியென்று திருநாமம் பெற்றவனும் | அந் ளால் | ரடையான பாசுரங்களால் நிறைந்த |
| அயனை | பிரமனுக்கு அந்தர்யாமியாய் | இவை ஆயிரமும் | இவ் வாயிரத்தினுள்ளே |
| அரனை | ருத்ரனுக்கும் அந்தர்யாமியாயிருக்கிற எம்பெருமானை | முடிந்த அவாவில் | பரம பக்தியாலே பிறந்ததான |
| அலற்றி | கூப்பிட்டு | அந்தாதி | அந்தாதியான |
| அவா அற்று வீடு பெற்ற | ஆசை தீர்ந்து பெற்றவரான | இப் பத்து | இப் பதிகத்தை |
| குருகூர் சடகோபன் | நம்மாழ்வார் | அறிந்தார் | அறியக் கற்குமவர்கள் |
| | | பிறந்தே உயர்ந்தார் | ஸம்ஸாரத்தில் பிறந்திருக்கச் செய்தேயும் உயர்ந்தவர்களாவர். |

"**—பரபக்தி பரஜ்ஞான பரமபக்தி தசைகளென்று மூன்றுண்டே;* சூழ்விசும்பணி முகிலுக்கு முன்வரையில் பரபக்தி தசையாய்ச் சென்றது. *சூழ்விசும்பணி முகில் திருவாய்மொழியானது பரஜ்ஞான தசையிற் சென்றது. முனியே நான்முகனே யென்கிற இத் திருவாய் மொழியானது பரமபக்தி தசையிற் சென்றது. பரமபக்திக்கே 'முடிந்த அவா' என்று பெயர். இப்படிப்பட்ட பரமபக்தி பேசுவித்த இப்பதிகம் வல்லவர்கள் இவ்விருள் தருமா ஞாலத்திற் பிறந்துவைத்தே 'நித்ய ஸூரிகளேயிவர்கள்' என்னும்படியான பெருமையோடே பொலிவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார்.

இம் முதற்பத்திலே *அஞ்சிறையமட நாரையில் எம்பெருமானுக்கு 'அருளாத நீர்' என்று திருநாமஞ் சாத்தின ஆழ்வார்தாமே இப்போது "அவாவறச் சூழரி" என்று திருநாமஞ் சாத்தினாராயிற்று. ஆசைதீர வந்து கலந்த ஸர்வேச்வரனென்றபடி. அரி என்பது ஹரியென்னும் வடசொல்விகாரம்; ஆச்ரிதர்களின் தாபங்களை ஹரிப்பவனென்று பொருள். அப்பொருள் இப்போது தான் நிலைபெற்றதென்றுகாட்ட இங்கே அரியை யென்கிறார். உடனே 'அயனை அரனை' என்றது—அயனை பிரமனுக்கும் அரனை சிவனுக்கும் அந்தர்யாமியானவனை என்றபடி. *ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம* ஐததாத்ம்யமிதம் ஸர்வம்* இத்யாதிகளான உபநிஷத் வாக்யங்களை விசிஷ்டாத்வைதவித்தாந்திகள் நிர்வஹிக்கவேண்டிய கட்டளையை ஆழ்வார் நினைப்பூட்டுகிறாராயிற்று.

அலற்றி அவாவற்று வீடு பெற்ற குருகூர்ச்சடகோபன்சொன்ன—கூப்பிட்டுஅவனைப் பெற்று ஸமஸ்தப்ரதிபந்தகங்களும் தொலைந்து அந்தமில்பேரின்ப மெய்தின ஆழ்வாரருளிச் செய்த. [அவாவிலந்தாதி] இத்திவ்வியப் பிரபந்தத்திற்குத் திருவாய்மொழி யென்று திருநாமம் ப்ரஸித்தமாயிருந்தாலும் ஆழ்வாருகந்த திருநாமம் அவாவிலந்தாதி யென்பதே. அவாவினால் அவதரித்த அந்தாதித் தொடையான திவ்யப்ரபந்த மென்றபடி. தங்களுடைய கவித்வத்தைக் காட்டுதற்கென்று க்யாதிலாப பூஜாபேக்ஷையாலே பிரபந்தங்கள் இயற்றுவார் பலருண்டு: அப்படியல்லாமல் பக்திபலாத்காரத்தாலே பிறந்ததாயிற்று இவ்வாயிரம். ஆசார்ய ஹ்ருதயத்தில் (188.) "நீர்பால் நெய்யமுதாய் நிரம்பினவேரி நெளிக்குமாபோலே.....அவாவிலந்தாதி யென்று பேர் பெற்றது." என்ற சூர்ணையின் மணவாளமாமுனிகள் வியாக்கியானம் இங்கு ஸேவிக்கத்தக்கது. "அவா உபாத்தியாயராக நடத்த நடந்த ஆயிரம்" என்றும், "ஆழ்வார்க்குப் பின்பு நூறு பிரங் கவிகள் பேருமுண்டாயிற்று; அவர்கள் கவிகளை டி கட லோசையோடு வாசியற்று அவற்றை விட்டு இவற்றைப் பற்றித் துவளுகைக்கடி—இவருடைய பக்தியபிநிவேசம் வழிந்து புறப்பட்ட சொல்லாகையிறே" என்றுமுள்ள ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்க.

முடிந்த அவாவிலந்தாதியிப்பத்து—இதற்குமேல் அவா இல்லையென்னும்படியானது பரம பக்தியாகையாலே அதனை முடிந்தவவா வென்னுஞ் சொல்லாலே அருளிச் செய்தபடி. பக்தியினுடைய சரமாவதியான பரமபக்தி யென்கை. ஆக இப்படிப்பட்ட பரமபக்தியின் பரீவாஹரூபமாகத் தோன்றின இப்பதிகத்தை யறிந்தவர்கள், பிறந்தாருயர்ந்தே—பிறந்தே உயர்ந்தாரென்று விகுதி பிரித்துக் கூட்டிப் பொருள்கொள்ளவேணுமென்பது ஆசாரியர்களின் திருவுள்ளம். ஸம்ஸாரத்திலே பிறந்து வைத்தே நித்யஸூரிகளோடொப்பர் என்றபடி. எம்பெருமான் இந்நிலத்தில் பிறந்திருக்கச்செய்தேயும் உயர்த்தியில் குறையற்றிருப்பது போலவே திருவாய்மொழி வல்லார்களும் ப்ராக்ருதர்களின் கருத்தாலே ஸம்ஸாரிகளாய், தத்வஞானிகளின் திருவுள்ளத்தாலே நித்ய முக்தர்களாய் விளங்குவர்களென்றதாயிற்று.(11)

ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானார் திருவடிகளே சரணம்!

ஜீயர் திருவடிகளே சரணம்!

பத்தாம்பத்து பத்தாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம் ஜகதாசார்ய ஸிம்ஹாஸநாதிபதி
மஹாவித்வான் அண்ணங்கராசார்யஸ்வாமி அருளிச் செய்த
திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகை முற்றிற்று.

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.